# கைவல்லிய நவநீத வசனம்

○

தாண்டவராய சுவாமிகளின்
அத்வைதப் படைப்பிலக்கியமான
கைவல்லிய நவநீதத்தின்
288 பாடல்களுக்கும்
தெளிந்த உரைநடை வடிவம்
தேவையான குறிப்புகள் விளக்கங்களுடன்

○

டாக்டர் இரா. இராசகோபாலன்

This book is published with the Financial Assistance of TIRUMALAI TIRUPATI DEVASTHANAMS under their Scheme - Aid to Publish Religious Books.

**KAIVALYA NAVANEETHA VACHANAM (TAMIL)**

**R. RAJAGOPALAN** Ph.D.
Anna nagar, Madurai road,
TIRUPPATTUR (R) 623 211
T N.

**Thirupati Printers**
19-Koodal Alagar Perumal Koil St
Madurai-1.

1000 Copies
Pages 4+160
Rs. 25/-

O

**கைவல்லிய நவநீத வசனம்**

முதற் பதிப்பு : ஜூலை 1991

டாக்டர் இரா. இராசகோபாலன்
அண்ணா நகர், மதுரைச் சாலை
திருப்புத்தூர் (பசும் பொன்) 623 211

திருப்பதி பிரிண்டர்ஸ்
19-கூடல் அழகர் பெருமாள் கோயில் தெரு
மதுரை-1.

## வணக்கம் □ நன்றி □ வழிகாட்டிகள்

□

நின்றருள் செய்யும் நெடுமுடி அண்ணலின்
வென்றித் திருவடி காப்பு.

□

அருளும் பொருளும் ஆற்றலும் அளிக்கும்
திருமலை திருப்பதி தேவத் தானம்;
அதன்
திறமிகும் ஆட்சிச் செயல் அலு வலர்க்கும்
அறமிகு சிந்தை இதழ் ஆ சிரியர்
அறிஞர் சுப்பா ராவ் அவர் கட்கும்
பொறிதிகழ் வேங்கடப் பல்கலைக் கழகத்
தமிழ்த்துறைத் தலைவர் பேரா சிரியர்
புகழ்சேர் பொன்-சௌரி ராசனார் தமக்கும்
என்றும் உரிய எங்கள் நன்றி.

□

மெய்ப்பொருள் மணக்கும் 'பேரின்ப மிதப்பாம்'
கைவல் லியநவ நீதம் என்னும்
நூற்பொருள் உணர உதவிய நூல்கள் :

I. சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் உரை
II. பிறையாறு அருணாசல சுவாமிகள் உரை
III. கோ. வடிவேலு செட்டியார் வசன வினா விடை 1928
IV. இரமணானந்த சரசுவதி ஆங்கில மொழிபெயர்ப்பு 1981
V. மொ. அ. துரை அரங்கசாமி செய்யுள் பதிப்பு 1986

□

அட்டைப் படக் குறிப்பு

பக்கம் 104, 159, 160,

பாக்கள் 175, 176.

□

## உள்ளுறை



### வசனம்



### இணைப்பு-பாடல்கள்



□

1

# கைவல்லிய நவநீத வசனம்

## முன்னுரை

**கைவல்லிய நவநீதம்** ஐந்நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எழுதப் பெற்ற பழைய அத்வைத இலக்கியம். மோட்சத்தை—தெய்விக விடுதலையை—தரும் வெண்ணெய் போல்வது என்பது நூற்பெயருக்குப் பொருள். பேரின்ப நிலையை ஞான நெறியில் தருவது இந் நூல் முறை ஆகும். தமிழில் தோன்றிய முதல் அத்வைத இலக்கியம் என்ற பெருமையுடைய இது அளவிற் சிறியது ஆயினும் ஆழ்ந்து விரிந்த கருத்தோட்டமும் திட்பமும் உடையது. எளிய நடையில் இயன்றது ஆயினும் சுருதி-யுக்தி-அனுபவங்களுக்கு இயைய விளக்கமாகவும் சுவையாகவும் அமைந்துள்ளது.

**பகவான் இரமணர்** இந் நூலிலிருந்து அடிக்கடி எடுத்துரைப்பது வழக்கம் என்பது இதன் பெருமைக்கும், என்றும் நீங்காத இதன் செல்வாக்குக்கும் ஒரு சான்று ஆகும்.

திருக்குறள் போலவே இதனையும் வாசிக்கும் பழக்கம் பரவலாக ஒரு காலத்தில் இந் நாட்டில் இருந்து வந்தது. வேதாந்த மாணாக்கர்கள்—சாதகர்கள்—கட்டாயம் பயில வேண்டிய (பாட) நூல் என்பதோடு, மூத்தோரும், மெய்யுணர்வு கொண்டோரும், ஆதரவிலாத நிலை நினைந்து கவலைப் படுவோரும் படித்துப் படித்துப் பக்குவம் பெற்று உளம் மகிழ வழி சமைக்கும் நூலும் ஆகும் இது.

இது **நன்னிலம் நாராயணரின்** மாணாக்கரான **தாண்டவராய சுவாமிகள்** தாம் உண்மையில் எய்திய

உயரின்பத்தில் தாண்டவம் ஆடி மகிழ்ந்து, பின் வருவோர் மகிழ்தற் பொருட்டு அவரால் எழுதப் பெற்றது என்பது அவரது வாக்காலே அறியக் கிடக்கின்றது.

**தத்துவ விளக்கப் படலம், சந்தேகம் தெளிதற் படலம்** என்ற 2 பகுதிகளாக 288 பாடல்கள் (பாயிரம் சேர்த்து) இதில் இருக்கின்றன. முதற் பகுதி அடிப்படைத் தத்துவக் கோட்பாடுகளைக் கூறுகிறது. இரண்டாம் பகுதி இயல்பாக எழும் ஐயங்களை அகற்றுகிறது.

**டாக்டர் சார்லஸ் கிரால்** என்ற லீப்சிக் லுத்தரன் மிஷனரி ஒருவரால் 1855 இல் இது ஜெர்மென், ஆங்கில மொழிகளில் பெயர்க்கப்பட்டது. 1965 இல் இரமணானந்த சரசுவதி (முனகால வேங்கட ராமையா) என்பவர் ஆங்கில மொழிபெயர்ப்பு ஒன்று தந்தார்.

தெலுங்கில் இது ஏற்கெனவே மொழியாக்கம் பெற்றுள்ளது.

தத்துவ விசாரணையும் ஆன்மிக நாட்டமும் நிலையான அமைதியை வேண்டலும் இந் நாளில் பெருகி வருகின்றன. ஆரவாரத்தைத் தாண்டி உள்ளார்ந்த உண்மைகளை அறிந்து சுவைக்கும் விருப்பம் மிகுந்து வருகிறது. அவற்றுக்கு ஆதரவு தரும் நெறிகளுள் தலையாயது ஞான நெறி.

உலக விவகாரங்களிலிருந்து தப்பி ஓடி ஒளியும் முயற்சி ஞான நெறி ஆகாது. பகைக்கு அஞ்சி நெடும் பாலை மணலில் தன் தலையைப் புதைத்துக் கொள்ளும் நெருப்புக் கோழியின் செயலும், நாடி நரம்புகளைச் செயலிழக்கச் செய்யும் போதை மருந்துகளைத் தன் உட் புகுத்தும் வினையும் சமுதாயத்திற்கும் தனக்கும் கேடு சூழும் தற்கொலை நெறியின்பாற் பட்டவையாகும். உலகில் பொய்யும் வழுவும் மிகுதியே; துன்பமும் தோல்வியும் மிக உண்டு; எதிர்ப்பும் ஏமாற்றமும் குறைவின்றி இருக்கின்றன. அவற்றுக்குத் தான் பலியாகாது அவற்றைத் தான் பலி யாக்கும் நெறியே ஞான நெறி.

'உன்னை நீ அறிவாய்' என்பதுவே கைவல்லிய ஞான நீதி காட்டும் அறிவு வழி. 'தன்னை யறிந்தால் தனக்கொரு

கேடில்லை' என்று **திருமூலர்** தெரிவித்தா ரல்லவா? 'தன்னை யறிந்து இன்பமுற ஒரு தந்திரம்' கேட்டாரே பின்னால் வந்த **இராமலிங்க அடிகள்,** அதனை ஆன்மிக அறிவியல் வழியில் தெளிவு படுத்திக் கடைப்பிடிக்க உகப்பாகச் செய்வதே ஞான நெறி.

வேறு எதனாலும் எவராலும் நீங்காத கவலைகளும் பாவங் களும் அறிவுத் தீயால் எரிந்து சாம்பராகும் என்று உறுதி யளிப்பது கைவல்லிய ஞான நீதி.

சிறிது சிறிதாக எழில் நயத்தோடு. இதழ் விரியும் நற்றாமரை போலப் படிப் படியாகப் பக்குவத்தோடு அறிவு மணம் கமழ ஆனந்த அமுதம் விரிக்கிறது **கைவல்லிய நவநீதம்.** அதனை அணுகி ஆனந்தம் பெற்ற நல்லன்னங்கள் பலர். **தாயுமானாரும்** அவருள் ஒருவர் என்பதை அவரது 'கல்லாத பேர்களே நல்லவர்கள்' என்ற பாடல் குறிப்பாகத் தெரிவிக்கிறது.

இன்றைய தேவைக்கு ஏற்ப, தெய்விக சுகம் தரும் இந்த **நவநீதத்திற்கு** எளிய தெளிவுரை ஒன்று தரக் கருதி இஃது எழுதப்பட்டது. உரையோடு பாடலும் இணைந்திருப்பது நலம் என்று தோன்றவே இணைப்பாகப் பாடல்கள் யாவும் தரப் படுகின்றன. அதில் இன்னொன்று குறிக்கத் தகுவது, எவ்வளவு எளிய உரையாக இருப்பினும் அது **தாண்டவரின்** பாடல் எளிமைக்கு ஈடுதர முடியாது என்பதும் அசைக்க முடியாத உண்மையாக உளது என்பதாம்.

இதனை வெளியிடப் பொருள் உதவி புரிந்த **திருமலை திருப்பதி தேவத்தானத்துக்கு** எங்கள் தலை தாழ்ந்த நன்றி உரியது.

ஆணித்தரமான தத்துவத்துக்காகவும், ஆன்ம நலத்துக் காகவும், வருங்கால உலகின் நன்மைக்காகவும் இனிய தெளிந்த தமிழுக்காகவும் இதனை அனைவரும் வாசித்து மகிழ்வார்களாக.

*இரா. இரசகோபாலன்*

## கைவல்லிய நவநீதம்—மதிப்புரைகள்

அத்வைதக் கொள்கையை அழகான 310 விருத்தப் பாக்களால் விளக்கும் நூல் கைவல்ய நவநீதம் என்னும் நூல். தத்துவ விளக்கமாக உள்ள நூல் இவ்வளவு சுவையாக அமைய முடியுமா என்று படிப்பவர் வியந்து போற்றும்படியாக இயற்றியுள்ளார் தாண்டவராய சுவாமிகள் என்னும் சான்றோர். பாடல்கள் எளிய நடையில் அமைந்து ஓசை உடையனவாக உள்ளன. நூலின் பெயர்க்குப் பொருள் 'ஆன்மாவின் தனித் தன்மையை விளக்கும் வெண்ணெய்' என்பது. உபநிடதங்களும் சங்கரர் தரும் விளக்கங்களுமாகிய பாற்கடலைக் கடைத்தெடுத்த வெண்ணெய் என்று கூறப் படுவதற்கு ஏற்ற வகையில் சமய உண்மையை மிகச் சுருங்கிய முறையில் சுவையாக எடுத்துரைக்கும் நூல் இது.

—அறிஞர் மு. வரதராசனார்
தமிழ் இலக்கிய வரலாறு [1983]

△

The **Kaivalya Navaneetha** is a widely known Advaita classic in Tamil. Navaneetha means butter. Kaivalya or kevala is the state in which the soul exists, isolated from all connection with body etc. From the vast ocean of milk (the Upanishads etc.) the great teachers have drawn the milk of wisdom and filled it in pots (ancient texts). Tandavaraya Swami, the author of **Kaivalya Navaneetha** says that he has extracted the butter from the milk. Those who have obtained this (being fed on butter of divine wisdom- **Brahma Jnana** - and being eternally satisfied) will not roam about feeding on dust (non - real objects of sense)...

In language easy to understand, the author gives a remarkably clear exposition of advaita ..

**Prof V.A. Devasenapathi**
from Introduction to the English
translation of **Kaivalya Navaneetha**
by Sri Ramananda Saraswathi (1965)

# கைவல்லிய நவநீத வசனம்

## பாயிரம்

### இறை வணக்கம்

1. பொன் நிலம் மாதர் என்பவற்றின் பால் ஆசையுள்ளவர் ஆசையில்லாதவர் ஆகிய அனைவர் உள்ளத்தில் ஆகாயம் போன்று சீவ சாட்சியாக நிற்பவனும், ஞான நிலங்கள் யாவிலும் உயர்ந்த ஏழாம் நிலையில் உள்ள **நன்னிலத்தில்** திகழ்பவனும் ஆன தனித் தலைவனின் தாள்களை வணங்குவோம்.

* ஞான பூமி ஏழினுள் உயர்ந்து நிற்பது துரிய பூமி. **நன்னிலம்** என்பது அதனையும் நன்னிலம் என்ற ஊரினையும் குறிக்கும்.

### ஆன்ம சொரூப வணக்கம்

2. படைத்துக் காத்து அழிக்கும் செய்கைக்கு ஏதுவாக அயன் மால் உருத்திரன் என்றும், தானே இன்னும் பல வடிவு கொண்டும் இருக்கின்ற பூரண முத்தனாகவும் இன்பக் கடலில் எழுகின்ற அறிவுக் கதிரவனாகவும் நாளும் தோன்றும் தூய அறிவான பிரம்ம சொரூபத்தை வணங்குகிறேன்.

### ஆசானை வணங்கல்

3. எவருடைய அருளால், 'சுவரின் கண் உள்ள ஆகாயம் போன்று எவ்விடத்தும் நிறைந்திருக்கும் பிரம்ம சொரூபம் நானே; என்னிடத்தே தோன்றி விரிந்துள்ள உலகம் முழுவதும் கற்பிதம்' என்று அறிந்து இயல்பாக நான் என் உண்மை வடிவு ஆனேனோ, அவரது தாமரை மலர்த் தாளை நாள்தோறும் பணிகின்றேன்.

4. என் மனம் புத்தி என்ற அந்தக் கரணங்களும் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் என்ற பொறிகளும் (அறியாமை வடிவான காரண) உடம்பும் ஆகிய இவை அனைத்தும்

என் மெய்யறிவினால் கதிரவன் முன் பனி போல் ஆக்கி, என்னுடைய நீயும் நானும் ஒன்றே என்று ஒன்றாக்க எனக்குக் குருவாய் வந்த இறைவனை வணங்குகிறேன்.

**நூல் செய்த நோக்கம்**

5. தொடக்கம் இடை முடிவு என்பன இன்றி வானம் போல் எப்போதும் ஒளிரும் ஞான சற்குருவின் அடிக ளைப் போற்றி, பந்தம் முத்தி என்பவற்றின் இலக்க ணத்தை, பரந்த நூல்கள் பார்க்க மாட்டாத மந்தரும் உணருமாறு தெரிவித்தற் பொருட்டுப் பொருள் உண்மை உரைப்பேன்.

**நூலுக்கு ஆதாரமும் பயனும்**

6. விரிந்துள்ள வேதாந்தம் (உபநிடதம்) என்னும் பாற் கடலில் முகந்து, முந்து நூல்கள் (நூற்பா விரிவுரை என்ற) குடங்களில் ஆசிரியர்கள் நிறைத்து வைத்தார்கள். அவற்றையெல்லாம் காய்ச்சிக் கடைந்து இக் **கைவல்ய நவநீதத்தை** எடுத்துத் தந்தேன். இதனைப் புசித் தோர் நித்திய திருப்தி அடைவர். அதன் பின் அவர் விடய ஆனந்தம் என்னும் மண்ணைத் தின்று அலை வரோ? அலைய மாட்டார்.

* கைவல்யம் : பேரின்பம். நவநீதம் : வெண்ணெய் கைவல்ய நவநீதம் : தனி நிலையை ஞான வாயிலாக அளிக்கத் தக்க வெண்ணெய் போன்ற நூல்.
விடய ஆனந்தம் : பொறிபுலன்களால் கிட்டும் சுகம்.

**நூல் பகுப்பு**

7. அறியாமையினின்று விடுபட்டவனும், திருவேங்கடத்து இறையோனாம் முகுந்தனும், என்னை ஆட்கொண்ட தலைவனும் ஆகிய குருவைப் பணிந்து சொல்லும் கைவல்ய நவநீதத்தைத் **தத்துவ விளக்கம்** என்றும் **சந்தேகம் தெளிதல்** என்றும் இரு படலமாக வகுத்து உரைக்கின்றேன்.

* முகுந்தன் : விடுபட்டவன்; முத்தியும் புத்தியும் தருபவன்.

# 1. தத்துவ விளக்கப் படலம்

*உண்மையை விளக்கும் பகுதி*

**உண்மையை உணர உதவும் கருவி நான்கு**

1. மெய்ப்பொருளை உணர உதவும் கருவிகள் நான்கு. அவை : I) எது நிலையற்றது எது நிலையானது என்று பிரித்தறியும் அறிவாகிய விவேகம். II) இம்மை மறுமைக ளில் கிடைக்கக் கூடிய சுக போகங்களில் ஆசையின்மை III) சமம் முதலிய **ஆறு குணங்கள்**. IV) முத்தி அடையப் பெருவிருப்பம் என்பன.

**ஆறு குணங்கள்**

2. மேலே ஆறு குணங்கள் என்று சொல்லப் பட்டவை : சமம் தமம் விடல் சகித்தல் சமாதானம் சிரத்தை என்பன. அவற்றுள் **சமம்** என்பது மனத்தை விடயங்களினின்று தடுத்தல். **தமம்** என்பது ஐம்பொறிகளை விடயங்களின் பால் செல்லாது தடுத்தல். **விடல்** என்பது சாதி, குடும்பம் முதலியவற்றின் தொடர்புடைய செய்கைகளை விட்டு விடுதல். **சகித்தல்** என்பது உணர்ச்சிகளை அடக்கி ஆளுதல்.

3. **சமாதானம்** என்பது புனித நூற் பொருளைச் சிந்தித் தல். **சிரத்தை** என்பது ஆசான் உரையில் அன்பு பற்றல். இவை [முதற் பாடலில் மூன்றாவதாகக் குறிக்கப் பெற்ற கருவித் தொகுப்பாகிய] ஆறு குணங்கள்.

**கருவிகளின் இன்றியமையாமை**

4. சாதனம் இல்லாமல் உலகில் ஒன்றைச் சாதிக்க முடியாது [எழுதுகோல் இன்றி எழுத, மண்வெட்டியின்றி மண் வெட்ட முடியாது.] ஆகவே மேலே குறித்த நான்கு

சாதனங்களையும் தம்மிடம் உடையவர்களே அறிவொளி பெற முடியும். புதிதாக முனைகின்ற ஒருவர் அவ்வாறு முனைந்த உடனே அறிவொளி பெற்றுவிட முடியாது. அவ்வாறு எவரேனும் பெற்றுவிட்டார் என்று சொன்னால் அவர் தம் முந்தைப் பிறப்புகளில் அடுத்தடுத்துப் பெற்ற தூய்மையின் தொடர்பயன் அது என்றுதான் சொல்ல வேண்டும்.

### கருவி நான்கும் கைவரப் பெற்றவனின் தீவிர நிலை

5. மேலே கூறிய நான்கு சாதனங்களும் நன்கு கைவரப் பெற்றவன் நல்லறிவு பெறத் தகுதி பெறுகின்றான். அத் தகையவன் தன்னிடமிருந்தும் தெய்வங்களிடமிருந்தும் ஐம்பூதங்களிடமிருந்தும் உண்டாகும் வெம்மை பொறுக்க முடியாமல், வெயிலைப் பொறுக்க முடியாப் புழுப் போல் வெம்புகிறான் ஆகவே அறிவுக் கடலில் படியத் துடிக்கிறான்.

### பக்குவம் பெற்றவனுக்கு ஞான ஆசான் கிடைத்தல்

6. விடுதலை வேட்கை மிகுதலால் அவன் தன் மனைவி மக்கள் உடைமை என்னும் மூன்றையும் விட்டுவிட்டு, வேடர் வலையில் அகப்பட்டுப் பின் அதினின்று தப்பி ஓடும் மான் போல் ஓடினான். ஞான சற்குருவை நாடினான். அவரைக் கண்டு நெஞ்சார வணங்கினான்.

### ஆசானிடம் வேண்டுதல்

7. ஆசானை வணங்கிக் கண்கள் நீர் பொழிய நின்று, ''கனிவுள்ள குருவே, பொய்யான வாழ்வு என்னும் துன்பத்தால் வாடினேன். என்னைக் கட்டி வைத்து உள்ள ஐந்துகோசங்களில் எழும் நான் எனது என்னும் அபிமானம் ஆகிய பின்னலை நாசமாக்கிக் காக்க வேண்டும் '' என்று வேண்டினான்.

* கோசம் - [மறைக்குப்] உறை. அன்னமயம் (உடம்பு), பிராண மயம் (செயற் பொறிகளும் பிராணனும்),

மனமயம் (அறிவுப் பொறிகளும் மனமும்). விஞ்ஞான மயம் (அறிவுப் பொறிகளும் புத்தியும்), ஆனந்த மயம் (முழு அறியாமை) எனக் கோசங்கள் மொத்தம் ஐந்து.

**ஆசானின் ஆதரவு**

8. குறையிரந்த மாணாக்கனை ஆசான் ஆமை போல் அன்புடன் நினைத்தார்; மீன்போல் பார்வை செலுத்தினார். பறவைபோல் தலையை வருடினார். தன் எதிரில் அவனை அமர வைத்து, ''உன் பிறவித் தொடரை முடிவுக்குக்கொணரும் உபாயம் ஒன்று இருக்கிறது. நான் சொல்லுவேன். அதன்படி நடப்பாயாகில் தொடர்ந்து வரும் பிறப்பு தொலையும்'' என்றார்

* இனிவரும் வினை; பழவினை; முன்வினை என வினை மூவகையாகப் பற்றுகிறது. ஆகலின் இனி வரக் கூடிய வினையைக் கெடுத்து மாணாக்கன் உண்மை உணர்தற் பொருட்டு ஆசான் நினைவைச் செலுத்துகிறார். பழைய வினைப் பொதி ஒழிந்து மாசறு காட்சி வாய்த்தற் பொருட்டு அவர் தன் பார்வையைச் செலுத்துகிறார். மாணாக்கன் அவ்வாறே தன் முன்வினை ஒழிந்து இன்ப நிலை எய்துமாறு தம் பேரின்பக் கையால் தலையை வருடி அருள் புரிகிறார்.

**மாணாக்கனின் ஆனந்தக் கண்ணீர்**

9. தொடர்பிறவி தொலையும் என்று ஆசான் உரைத்தது செவியிற் பட்டதும், மாணாக்கன் மெய்சிலிர்த்தான். அன்பு மீதூர ஆனந்தக் கண்ணீர் பொழிந்தான். மறுபடியும் ஆசானின் அடிமலர் தொழுது உரைக்கலானான் :

**'ஈடேற்றம் கொடுங்கள்' என்று வேண்டுதல்**

10. ''தாங்கள் உரைத்தது கேட்டு அவ்வாறே நடக்கின்ற ஆற்றல் இல்லாத தொண்டன் நான் என்றாலும், தங்களது கருணையினால் என்னைத் தடுத்தாளலாம் அல்லவா? எனது பிறவியை மாற்றும் உபாயம் ஒன்று உண்டு என்று கூறினீர்கள். அது இன்னது என்று காட்டி என்னை ஈடேற்ற வேண்டும்'' என்றான்.

**மாணாக்கனுக்கு ஆன்ம சொரூபம் உணர்த்தத் தொடங்குதல்**

11. மனத்தின் (பரிணாமத்) தொழில்கள் அடங்கப் பெற்றவன் இவன் என்று அறிந்த ஆசான், மாணாக்கனின் உடம்பினுள் இருக்கும் உயிரைப் பார்த்தார் செறிந்த மண் கூட்டில் தான் கொண்டு வைத்த (துடிப் புள்ள) புழுவின் முன் இருந்து (அது தன்னைப் போல் ஆதற் பொருட்டு) ஓசை எழுப்பும் குளவிபோல. அவன் தன் உண்மை இயல்பை அடையும் பொருட்டு அவனுக்கு அறிவுரைக்கத் தொடங்கினார் :

**பிறவிக்குக் காரணம்**

12. ''என் மகனே, கேட்பாயாக. தன்னை மறந்தவன் பிறந்து இறந்து, தீராத சுழற்காற்றில் அகப்பட்ட செத்தை போலச் சுழன்று திரிவான். அறிவினால் ஆராய்ந்து தன்னைத்தான் என்று அறியும் காலம் வரை இங்ஙனம் காலச் சக்கரச் சுழற்சியில் திரிவான்.

**ஆசானின் பெருமை**

13. தன்னையும் தனக்கு ஆதாரமான தலைவனையும் ஒருவன் அறிவானாகில் பின்பு அவன் அத்தலைவனே தானாகவும் தானே அந்தத் தலைவனான பிரம்மமாகவும் அனுபவித்துப் பிறப்பிலிருந்து விடுதலை பெறுகிறான். இவ்வாறு 'உன்னை நீ அறிவாயாகில் உனக்கொரு கேடும் இல்லை' என்னை நீ கேட்டதனால் இந்த நுட்பத்தை உனக்கு அறிவித்தேன்''

* இதுவே குருவின் மெய்ப்பொருள் உரை. உண்மையில் அவரது உபதேசம் இத்துடன் முடிந்து விடுகிறது. நுட்ப மான இதனை விளக்கும் பொருட்டே மற்றப் பகுதி அமைந்து உள்ளது.

* **தான் : ஆபாசன் - விருப்பு வெறுப்பு முதலியவற்றில் சுழலும் சீவன். தனக்கு ஆதாரத் தலைவன் : கூடஸ்தன்— விருப்பு வெறுப்புக்கள் கொண்டு ஆடுகின்ற சீவனைச் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருப்பவன், உடம்பினுள் இருக்கும் ஆன்மா.**

**உடம்பையே தான் என்று நினைத்திருக்கும் மாணாக்கனின் கேள்வி**

14. ''ஐயா, நான் ஒன்றும் தெரியாதவன் என்று நினைத்தா இவ்வாறு சொன்னீர்கள்? தன்னைத் தான் அறியாத மாந்தர் உலகில் யாராவது இருக்கிறார்களா? இல்லை. அப்படி அறிந்திருந்தும் அவர்கள் பிறந்து இறந்து உழல்கிறார்களே, அதற்குக் காரணம் என்ன? உங்களை முழுமையாக நம்பியுள்ளேன். உறுதியான உண்மையைச் சொல்லுங்கள்'' என்று மாணவன் கேட்டான்.

**தன்னை அறிந்தவன் யார் என்று ஆசான் கூறல்**

15 ''இது உடம்பு (சடம்), இவன் உடம்பினுள் இருப் போன் (சித்) என்று அறிகின்றவன் தான், தன்னை அறிந்தவன்'' என்று ஆசிரியன் கூறினார் அது கேட்ட மாணாக்கன், ''இந்த உடம்பு அல்லாமல் உடம்பினுள் இருப்போன் என்று யார் இருக்கிறார்கள்'' என்று கேட்டான். ஆசான் துன்பமும் மகிழ்வும் கொண்டார்.

* மாணாக்கன் தன் அனுபவத்திற்கு ஏற்ப, உடம்பே 'தான்' என்று நினைத்திருந்தான் ஆசானோ, வாலறிவாகிய சுத்த சைதன்னியத்தை அனுபவித்து உணர்ந்தவர். அவர் அதனைத் 'தான்' என்று உரைக்கிறார்.

**உடம்பு. உடம்பினுள் இருப்போன் என்பவற்றின் வேறுபாட்டை உணர்த்த ஆசிரியர் கேட்ட கேள்வி**

16. ''உடம்பைத் தவிர உடம்பினுள்ளிருப்பவன் என்று எதனையும் பார்க்கவில்லை என்று நீ கூறுகின்றாய். அப்படியானால் மோகமாகிய கனவில் வந்து உதிப்பவன் யார், கனவுத் துன்பம் இல்லாத ஆழ்துயில் நிலையில் அதனை அனுபவித்தவன் யார், விழிப்பு நிலையில் அவற்றை நினைக்கின்ற அறிவு தான் யாது, சொல்லுக நீ'' என்றார் ஆசிரியர்.

* விழிப்பு (நனவு), கனவு, கனவற்ற ஆழ்துயில் என்று

நிலை மூன்று அவற்றை முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்பர்.

**'உடம்பினுள் ஒருவன் இருக்கிறான் என்று தெரிகிறது' என்று மாணாக்கன் கூறல்**

17. ''விழிப்பு நிலையில் நான் கண்டதும் அது நீங்கிக் கனவு நிலையில் நான் கண்டதும், அவை இரண்டின் தொழில் இல்லாத ஆழ்துயில் நிலையில் அறியா இருள் கண்டதும், இவ் உடம்புக்கு வேறான ஒருவனாக நான் அனுபவிப்பது தெரிகிறது. ஆகவே உடம்பு வேறு உடம்பினுள்ளிருப்போன் வேறு என்று நீங்கள் சொன்னது பொருத்தமாக உள்ளது. அது மனத்தில் சிறிது பளிச்சிடுகின்றது உடனே மறைந்து விடுகின்றது. ஆகவே அது பற்றி–உடம்பினுள் இருப்போன் நிலை பற்றி-விளக்குங்கள்'' என்றான்.

**விளக்குதற்கு ஆசான் மேற்கொண்ட முறை**

18. உலகில் மரங்களின் கிளை நுனியைக் காட்டி மூன்றாம் பிறையைச் சுட்டிக் காட்டுவது போலவும், வானில் உள்ள விண்மீன் குழாத்தைக் காட்டி அவற்றிடையே யுள்ள அருந்ததியைச் சுட்டிக் காட்டுவது போலவும் பருமையாகத் தெரியும் காரியப் பொருளைக் காட்டிக் காரணப் பொருளை (பிரம்மத்தை) மாணாக்கனுக்கு ஆசிரியர் காட்டத் தொடங்கினார்.

**ஆரோபத்தால் வருவது பந்தம்; அபவாதத்தால் வருவது முத்தி**

19. ''பந்தத்துக்குக் காரணம் ஆரோபம் (ஒரு பொருளின் மேல் அதனிடம் இல்லாத ஒன்றை இருப்பதாக ஏற்றி எண்ணுதல் ஆகிய கற்பனை); வீடு பேற்றுக்குக் காரணம் அபவாதம் (அந்தக் கற்பனையை அழித்து விடுதல்) என்று வேதாந்தம் கூறுகிறது.

**ஆரோபம் என்றால் என்ன?**

20. ஆரோபம் அத்தியாசம் கற்பனை என்பன ஒருபொருட் சொற்கள். ஒரு பொருளில் அன்னியப் பொருளை ஏற்றிக்

கூறல் ஆரோபம். கயிற்றில் பாம்பு தோன்றல், குற்றுக் கட்டையில் மனிதனைக் காணல், கானலைத் தண்ணீராக நினைத்தல், ஒன்றும் இல்லாத ஆகாயத்தில் நீல நிறமும் கொப்பறை கவிழ்த்தது போன்ற தோற்றமும் காணல்- இவை ஆரோபம்.

**ஆரோபம் (கற்பனை) காரணமாக ஐம்பூதக் கலவை காணப்படுகிறது.**

21. ''ஒன்றில் வேறொன்று இருப்பதாகத் தோன்றுதல் போல, பெயர் வடிவு இல்லாமலும், ஒரே தன்மை உடைய தாகவும், இரண்டற்று ஒன்றாகவும், உணர்வு ஒளி நிறை வாகவும் இருக்கின்ற பிரம்மத்தில் ஐம்பூதங்களும் அவற் றின் சேர்மானங்களும் தோன்றுகின்றன. (அங்ஙனம் அவை இருப்பதாகக் காண்பது கற்பனையே. உண்மை யில் இருப்பது நிறைவாம் பிரம்மம் மட்டுமே.)

**ஆரோபமே படைப்புக்கு இடம் தருகின்றது.**

22. ''ஒன்றில் இன்னொன்று இருப்பதாகக் கருதும் ஆரோபம் தான் படைப்புக்கு வகை செய்கிறது என்பது எப்படி என்று கேட்பாயாகில் அது வருமாறு :

என்று பிறந்தன என்பது இல்லாத (அநாதியான) சீவர்கள் எல்லாம், நாம் அறிந்த ஆழ்துயில் (சுழுத்தி) போன்ற 'அவ்யக்த நிலை' யில், வெளிப்படாமல், படைப் புக்கு முன்பு கிடக்கின்றன. காலதத்துவம் அல்லது ஈசுவரனின் உட்பார்வையினால் அந் நிலையில் மாற்றம் உண்டாகிறது. அவ்யக்தமானது முன்பிருந்த காரணத் தன்மையை விட்டு, மூன்று குணமாக வெளிப்படுகின்றது.

**(முக்குணம்)**

23. ''சத்துவம் இராஜசம் தாமதம் என்பனவே அம் முக்குணம். அவை முறையே வெள்ளை சிவப்பு கறுப்பு நிறத்தன அவை ஒரு நிகரானவை எனினும் அவற்றுள் ஒன்று ஏனைய இரண்டை விட எடுப்பாகவே அமையும்.

**படைப்பு — இன்னொரு விளக்கம்**

24. ''படைப்புத் தோற்றத்துக்கு இஃது ஒருவகை விளக்கம். இன்னொரு வகை விளக்கமும கூறபபடுய. அஃது :

வெளிப்படாது இருக்கும் காரணத் தன்மை பின்னர் மகத் தத்துவம் (சீவர்களின் மொத்தம்) ஆகின்றது. அது அகங்காரம் (தன் முனைப்பு) ஆகும். அகங்காரமே முக்குணங்களுக்கும் கரு (காரணம்) ஆகின்றது.

(**ஈசன்**)

25 ''இம் மூன்று குணங்களில் விண் போன்ற (ஒட்டாது பரந்து நுட்பமாக இருக்கும்) சித் (பிரம்மத்)தின் பிரதி பிம்பம தோன்றும். மூன்று குணங்களிலும் தூயதான சத்துவ குணம் மாயை எனப்படும் அதில் தோன்றும் (பிரம்மப்) பிரதிபிம்பம் அந்தர்யாமியாம். (அதாவது எப் பொருளிலும் உள்ளீடாய் நிறைப்பவன்) தனக்குச் சரீரமாக உள்ள மாயையாலும் மாயையின் தொடர்பான குணங்களாலும் பற்றப் படாதிருப்பவன்; அவன் உலகத்திற்கு நிமித்த காரணன். அவனே ஈசன்.

26. ''ஈசனுக்கு இந்த மாயையே ஆழ்துயில் நிலை. காரண தேகம், ஆனந்த மய கோசமும் ஆகும்.

**(இரசோ குணம்)** : அடுத்து, இரசோ குணம் என்பது அவித்தை. அவித்தையில் பிரதிபலித்த சித் (இருள் ஒன்று தான் என்றாலும் அது தன் பகுதிகளாற் பலவாகத் தோன்றுதல் போல்) சீவ கோடிகள் ஆகின்றது. இந்த நிலையில் உள்ள சீவன், பிராஞ்ஞன் (நன்றாக அறிபவன்) எனப்படும்.

27 ''சீவர்களுக்கு அந்த அவித்தையே ஆனந்தமய கோசம், காரண உடம்பு, ஆழ்துயில் நிலை.

இதுகாறும் இரு குணங்களால் (சத்துவம், இராசதம்) வந்த ஆரோபம் சொன்னோம். இனி, சூக்கும (நுட்ப)மான ஆரோபம் சொல்லக் கேட்பாயாக.

**(தாமதம் இரண்டாகிறது)**

28 ''உயிர்களுக் கெல்லாம் இன்ப துன்பச் சாதனமான சூக்கும உடம்புகள் உண்டாதற் பொருட்டு, அதிசயமான சக்திகள் உடைய மாயையை உடன் கொண்ட ஈசனின் அருளால் (மூன்றாம் குணமான) தாமத குணம் இரண்டு சக்தியாகப் பிரிகின்றது.

அவை : 1. மெய்ப்பொருளை (பிரம்மத்தை) நன்கு மூடிக் கொள்ளும் **ஆவரணம்** 2. மிகப் பலவகைத் தோற்றம் ஆகிய **விட்சேபம்** என்பன.

**விட்சேப சக்தியினால் சூக்கும ஐம்பூதங்கள் தோன்றல்**

29. ''தோற்றமாம் சக்தியில் (விட்சேபம்) விண் (ஆகாயம்) உண்டாகிறது. அதிலிருந்து காற்று, காற்றிலிருந்து தீ, தீயிலிருந்து நீர், நீரிலிருந்து மண் என்று முறையே தோன்றுகின்றன. இவை ஐந்தும் **நொய்ய பூதம்** (தன்மாத்திரை-சூக்கும பூதம்-அபஞ்சீகிருத பூதம்) எனப் படும். இவற்றிலிருந்து இன்ப துன்ப நுகர்ச்சிகளுக்கான உடம்புகள் உண்டாகின்றன.

தன்மாத்திரை என்பது ஐம்பூதங்களின் சூக்கும நிலை தன்மாத்திரைகளே ஐம்பூதங்களாகத் தூல நிலை (பருமை) காட்டுகின்றன.

**அறிகருவிகள்**

30. ''ஐம்பூதங்களிலும் முற்கூறிய மூன்று குணங்களும் சேர்ந்து இருக்கின்றன. ஐம்பூதங்களிலும் இருக்கும் தூய குணமான சத்துவத்தின் கூறுகளிலிருந்து **உணர் கருவிகள் (ஞானேந்திரியம்**: ஐம்பொறிகள்-மெய் வாய் கண் மூக்கு செவி) தோன்றுகின்றன. அவை தனித்துச் செயல்படுவன. அவற்றோடு கூடிச் செயல்படும் மனம் புத்தி என்ற அந்தக்கரணங்களும் சத்துவ குணக் கூறுகளால் வருகின்றன. ஆக அவை ஏழும் ஞான சாதனம்-அறிகருவி—ஆகின்றன.

## பதினேழு தத்துவங்கள்-சூக்கும உடம்புகள்

31. ''இனி, ஐம்பூதங்களிலும் உள்ள இரசோ குணக் கூறுகள் ஐந்திலிருந்து **தொழிற்கருவிகள்** (**கன்மேந்திரியம்**: கிரியா சாதனம்-வாக்கு கை கால் கழிவுறுப்பு பிறப்பிக்கும் உறுப்பு) தோன்றுகின்றன அவை தனித்துச் செயல்படுவன. அவற்றோடு கூடிச் செயல்படும் **காற்று ஐந்தும்** (பிராணன் அபானன் சமானன் உதானன் வியானன்) இரசோ குணத்திலிருந்து தோன்றுகின்றன.

ஆக இவை மொத்தம் **பதினேழு தத்துவங்கள்.** இவை பதினேழும் தேவர் அசுரர் மானுடர் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்றுள்ள எல்லா உயிர்க்கும் சூக்கும உடம்புகள் ஆகின்றன.

32. ''இங்ஙனமாக உடலில் பொருந்திய உயிர் தைஜசன் எனப்படும்; உடலிற் பொருந்திய ஈசன் இரணிய கர்ப்பன் எனப்படுவான். பதினேழு தத்துவச் சேர்க்கையான உடல், சீவன் ஈசன் ஆகிய இருவர்க்கும் இலிங்க சரீரம் அல்லது நுண் உடல் எனப்படும். அது பிராணமயம், மனமயம், விஞ்ஞானமயம் என்ற மூன்று கோசங்கள் கொண்டது. அதற்கு நிலை கனவு நிலையாகும்.

## பருவுடல் பருவுலகு தோன்றல்

33. ''இதுகாறும் சூக்கும பூதங்கள், சூக்கும உடல் பற்றிய ஆரோபம் (அத்தியாசம் : கற்பனையாக ஒன்றில் இன்னொன்றை ஏற்றிக் கூறல்) உரைத்தோம். இனி, பருவுலகு பருவுடல் பற்றிய ஆரோபம் கூறுவோம். சூக்கும உடலில் உள்ள உயிர்களுக்குப் பருவுடலும் போகப் பொருள்களும் உண்டாக்க உயிர்களையெல்லாம் பாதுகாக்கும் ஈசன் தன்மாத்திரைகளை (நொய்ய பூதங்களை)த் தக்கவாறு கலந்து வைத்தான்.

## ஐம்பூதக் கலப்பு (பஞ்சீகரணம்) முறை

34. ''ஒவ்வொரு பூதமும் (விண் காற்று தீ நீர் மண்) தனித் தனியே இரண்டாகப் பகுக்கப்பட்டது. அந்த இரண்டில்

ஒரு பகுதியை அப்படியே வைத்துக் கொண்டு மற்றப் பாதி நான்காகப் பிரிக்கப்பட்டது. அப்படியே இருக்கும் பகுதியில், மற்ற ஒவ்வொரு பூதத்தில் நான்காகப் பிரிக்கப்பட்டதன் ஒவ்வொரு கூறு சேர்க்கப்பட்டது இவ்வாறு சேர்க்க, தூல பூதமும் (ஐம்பெரும் பூதங்கள்) உண்டாயின. அவற்றிலிருந்து நால்வகைத் தூல (பரு) உயிர்ப் பிறப்புகளும் (கருப்பையிலிருந்து வருவன; முட்டையிலிருந்து வருவன; புழுவிலிருந்து வருவன; வித்திலிருந்து வருவன) அவை அனுபவிக்க அண்டங்கள் உலகங்களும் உண்டாக்கப்பட்டன.

35. ''பருவுடலிற் பொருந்திய சீவன் விசுவன் என்றும் பருவுடலிற் பொருந்திய ஈசன் விராட் புருடன் என்றும் பெயர் பெறுவர். பருவுடலானது அன்னமய கோசமாகும். விழிப்பு நிலை அதனுடைய நிலையாகும்.

இங்ஙனம் பருவுடல் பருவுலகு பற்றிய கற்பிதம் இதுவென்று தொகுத்துச் சொன்னதை மனத்திற் கொள்வாயாக.

**சீவன் ஈசன் வேறுபாடு**

36. ''குருவே, சீரிய ஈசனுக்கும் எளிய சீவர்கட்கும் (நுண் உடல் பருவுடல் என்ற) உபாதி ஒன்றாக உள்ளது. ஆகவே இவர்களிடையே வேற்றுமை அறிவது எங்ஙனம் என்று விளவுகிறாய்.

ஈசன் காரண உபாதி; உயிர் காரிய உபாதி-இது வேறுபாடு. மேலும் பன்மை (சமஷ்டி) ஒருமை (வியஷ்டி) என்பதனாலும் இவ் வேறுபாடு உண்டாயிற்று.

* **உபாதி** : ஒரு பொருளைப் பல பொருள் போலக் காட்டற்கு ஏதுவாக இருப்பது உபாதி. ஆகாயம் ஒன்று தான் ஆயினும் அது கடத்தில் (பானையில்) இருப்பதாம் கடவுபாதியால் கட ஆகாயம் எனப்படுகிறது; மற்றது மகா ஆகாயம் எனப்படுகிறது.

37. ''ஒவ்வொன்றாக மரம் என்னும் பொழுது தனியாக இருப்பது வியஷ்டி. தோப்பு என்னும் பொழுது மொத்த

மாக இருத்தல் சமஷ்டி. இயங்கு திணை நிலைத் திணை உயிர்கள் தனித்தனி உடல் தாங்கியுள்ளன. நான் நான் என்னும் அவை ஒருமையாம். அவற்றின் மொத்தம் நான் நான் என்னும் ஈசனாம். இதுவே உயிர்கள்—ஈசன் இடையே வேற்றுமை.

38. ''ஆரோபம் (கற்பனை) ஆன படைப்பு உண்டான ஒழுங்கினைக் காட்டினோம். காண்பன எல்லாம் கனவிற் கண்ட பொருள் போல்வன என்று எண்ணித் தெளிந் தவன் கார்காலம் போன பின் தெளிந்திருக்கும் ஆகாயம் போல இருக்கும் அற்புதமான முத்தி (விடுதலை; மோட்சம்) அடையும் அபவாத வழியையும் கூறக் கேட்பாயாக.

## விடுதலை நல்கும் அபவாதம்

39. ''இது பாம்பு அன்று கயிறே, ஆள் இல்லை குற்றுக் கட்டையே, என்று ஆய்ந்து தெளிதல் போல் குரு கூறும் மெய்யுரையாலும், வேதாந்த நூல் காட்டும் ஒளியாலும் உணர்ந்து, இது தேகம் அன்று, உலகம் அன்று, இவை பூதங்கள் அல்ல, நிலைத்த ஞானமாம் பிரம்மம் என்று ஐயமின்றித் துணிவதே அபவாதம் ஆகும்.

## அபவாத உத்தி

40. ''ஆடையும் நூலும் ஆபரணமும் பொன்னும் பானையும் மண்ணும் போலக் காரிய காரணம் இரண்டும் ஒன்றே யாகும். அவ்வாறே காரியமாகிய பிரபஞ்சமும் காரண மூலமாகிய பிரம்மமும் கற்பிதத்தால் வேறுபட்டன போல் தோன்றினும் உண்மையில் ஒன்றே யாகும். ஆகவே தூல உடம்பு முதல் அவ்யக்தம் (வெளிப்படாது அடங்கிய நிலை) வரை ஒன்றிலிருந்து ஒன்று உண்டானதை ஆய்ந்து பார்க்க வேண்டும். அவற்றை ஒன்றினுள் ஒன்றாக அடக்கிப் பார்க்கத் தூய பிரம்மம் மிஞ்சி நிற்கும். அது தவிர வேறு ஒன்றும் இல்லை என்று உணர்தல் கூடும். இது அபவாத உத்தியாகும்.''

**மாணாக்கன் வேண்டுதல்**

''குருவே, தமோ குணம் இரண்டு சக்திகளாகப் பிரிந்து வேலை செய்யும் என்று சொன்னீர்கள் (பாடல் 28). மூடல் (ஆவரணம்) பல்வகையான தோற்றம் (விட்சேபம்) என்ற அவற்றுள், இரண்டாவதாகிய விட்சேப சக்தி செய்யும் விருப்பிற்குரிய ஆகாயம் முதலான காரியங் களைச் சொன்னீர்கள். இனி, மூடல் ஆகிய ஆவரண சக்தி செய்யும் மோகமும் சொல்லுங்கள்'' என்று மாணாக்கன் கேட்டான் கருணையோடு ஆசான் சொல்லத் தொடங்கினார்

**ஆசான் உரை : ஆவரண (மூடல்) சக்தி**

42. ''வான் நிலம் திசைகள் ஆகியவற்றை மூடுகின்ற கார் காலத்து இருள் போல பிரம்மம் என்பது இல்லை (நாஸ்தி) இருந்தால் பார்வைக்குத் தோன்றாதோ (நபாதி), என்று கூறுமாறு உடம்பில் உறையும் சீவர் களின் உணர்விழி (ஞானப் பார்வை) தெரியாதபடி மறைக்கின்றது. தனக்குத் தானே நிகராகிய ஈசனையும் தம்மை உணர்ந்த ஞானிகளையும் ஆவரண சக்தி மறைப்பதில்லை. மற்ற உயிர்களின் பார்வையை மறைத்து விடுகிறது.

43 ''பூரணப் பொருளாகிய பிரம்மத்திற்கும் அதன் வேறு பட்ட வடிவுகளாகப் புறத்தே தோன்றும் பிரபஞ்சம் முதலியவற்றுக்கும் உள்ள வேற்றுமை விளங்காவாறு ஆவரண சக்தி தடுக்கிறது. அவ்வாறே அறிவே வடிவாக உள்ள (கூடஸ்தன்) ஆன்மாவுக்கும் அகத்தே தோன்றும் அதன் திரிபுகளான அகங்காரம் முதலியவற்றுக்கும் உள்ள வேற்றுமை விளங்காவாறு அது தடுக்கிறது.

இங்ஙனம் புறத்தும் அகத்தும் அது மறைப்புச் செய்தலால் பிறப்பு இறப்பு ஏற்படுத்தும் காரணம் ஆகின்றது.

ஆதாரமான (அதிஷ்டானமான) பிரம்மம் சத் சித் ஆனந்த சொரூபம். ஆதாரமாக ஏற்றி வைத்தது (ஆரோபம்) பொய் சட துக்க சொரூபம்.

44. ''அங்ஙனம் ஆயின் ஆதாரம் மறைந்து போனால் அதனால் வரும் ஆரோபம் எங்கே இருக்கும், ஆதாரம் மறையவில்லை என்றால் ஆரோபம் இருக்க மாட்டாதே என்ற கேள்வி எழுகின்றது.

(அதாவது இருட்டில் கயிறு தெரியாது. கயிறு தெரியாததால் அதில் பாம்பு என்ற ஆரோபமும் தோன்றாது. வெய்யிலில் கயிறு என்பது தெரியும், பாம்பு என்ற கற்பிதம் எழாது. அவ்வாறே பிரம்மம் பார்வைக்குத் தெரியாத நிலையில் கற்பனை வடிவ உலகம் எப்படித் தோன்றும், பிரம்மம் மறையாது தோன்றுமாயின் அதன்மேல் கற்பனையாக வந்த உலகம் முதலியன தோன்றாவே என்பது கேள்வி)

அதற்கு விடை வருமாறு : ஆதாரமானது சமம், விசேடம் என்று இருவகைப்படும். அவற்றுள் சமம் என்ற சாமானிய (பொது) ஆதாரம் எங்கும் எப்பொழுதும் உள்ளது. விசேட ஆதாரம் என்பது தற்காலிகமான கற்பனையால் தோன்றுவது.

45. ''உலகில் இது என்று சுட்டப்படும் சாமானிய ஆதாரம் மறையாது. இது கயிறு என்னும் விசேட ஆதாரம் மறைந்து விடும். (இது பாம்போ என்னும் ஆய்வு வரும் பொழுது இது கயிறு என்கிறோம். அதில் இது என்பது பொது அல்லது சாமானியம். கயிறு என்பது விசேடம் ) சீவனைக் கருதும் பொழுது நான் என்னும் சாமானிய ஆதாரத்தை அறியாமை மறைக்காது. விசேட ஆதார மாகிய நான் பிரம்மம் என்பதனை அது மறைத்து விடுகிறது.

**மாணாக்கனின் வினா**

46. ''அடைதற்கு அரிய குருவே, ஒன்றிய நிலை(ஆன்மாவும் பிரம்மமும் ஐக்கியப் பட்ட நிலை) விளங்காவாறு கெடுத்தது விட்சேப (பலவாகத் தோற்றம் தரும்) சக்தி. அது தான் ஐந்து கோசம், ஆகாயம் முதலிய உலகு களாக உண்டான சக்தி அங்ஙனம் இருக்க, ஆவரண

(மறைப்புச்) சக்தி தான் கொடியது அறிவுக் கண் தெரியாமல் தடுத்தது என்று உரைக்கின்றீர்கள். அது எவ்வாறு?'' என்று கேட்டான் மாணாக்கன்.

அதற்கு ஆசான், ''கேட்பாயாக .. என்று கூறத் தொடங்கினார்.

**ஆசான் தெளிவுரை**

47. ''பன்மையாகத் தோன்றும் விட்சேப சக்தி தான் துன்ப மயமான பிறவிக்குக் காரணம் என்றாலும் முயற்சி செய்து முத்தி அடைவார்க்கு அஃது அனுகூலமாக உள்ளது. முயற்சிகளுக்கு உதவும் பகற்பொழுது போல இரவுப் பொழுது உதவியாக இருக்குமா? ஆகவே இரண்டு சக்திகளிலும் ஆவரண சக்தி (மறைப்பு) தான் மிகவும் பொல்லாதது.

48. ''ஆழ்துயில் நிலையில் விட்சேப (தோற்றம்) வடிவமான உலகம் (பார்வையிற் படாது) அடியோடு மறைந்து விடுகிறது. அவ்வாறே ஊழி முடிவிலும் எல்லாம் மறைந்து விடுகின்றன. அங்ஙனம் யாவுமே மறைந்தன என்று இருக்கும் நிலை காரணமாகப் பிறவித் தொடர் நீங்கி எவரேனும் விடுதலை பெற்றார் என்பதுண்டா? இல்லை. பலவாக (ஐந்து கோசம், சீவன், உலகு என்பனவாக)த் தோன்றிய விட்சேப சக்தியின் காரியம் விடுதலைக்கு உதவும். ஆவரண சக்தி அவ்வாறு செய் யாது; விடுதலை கூடாமற் கெடுக்கும்.

49. ''கிளிஞ்சலைப் பார்த்தால் வெள்ளியாகத் தோன்று கிறது. அந்த வெள்ளித் தோற்றம் பொய்யானது. அவ்வாறே விட்சேபம் என்ற தோற்றம் பொய்யானால் அதன் வாயிலாக வருகின்ற முத்தி என்பதும் பொய் யல்லவா? என்று கேட்பாயாகில், பயங்கரமான கனவில் வந்த சிங்கம் புலி போன்ற விலங்குகளின் தோற்றம் பொய்தான் என்றாலும் அது கனவு காண்போனை விழிக்கச் செய்து விடுகிறது. அவ்வாறே விட்சேப சக்தி யின் மூலம் (குரு உரையாலும் மறைநூல்களாலும்)

மற்று காட்டவேண்டும்'' என்றான் மாணாக்கன். ''அது நீயா யிருக்கிறாய்' என்று பொருள்தரும் 'தத்துவமசி' என்பது மகாவாக்கியம் அதில் ''அது நீ'' என்ற சொற்களின் முடிந்த பொருளான ஐக்கியத்தை ''இருக் கிறாய்'' என்ற சொல் நிகழ்த்துகிறது. அது எப்படி என்று கூறுவேன் கேட்பாயாக :

### ஆகாயம் ஒன்றுதான் என்றாலும் ...

58. ''விண் (ஆகாயம்) ஒன்று தான் என்றாலும் விரிந்த வெளியாக அதுவே மகாவிண் என்றும் மேகத்தில் உள்ளது மேகவிண் என்றும் கடத்தில் (பானையில்) உள்ளது கடவிண் என்றும் கடநீரில் பிரதிபலிக்கும் விண் சலவிண் என்றும் கற்பிதத்தால் நான்கு ஆகத் தோற்றம் தருகின்றது. அவ்வாறே சித் (மெய்யறிவு) ஒன்றாக இருப்பினும் அது பிரம்மம், ஈசன், கூடஸ்தன் (ஆன்மா), சீவன் (உயிர்) என்று நான்கு ஆகக் கூறப் படுகின்றது.

* மகாவிண் போல்வது பிரம்மம்; மேகவிண் போல் பவன் ஈசன்; கடவிண் போல்பவன் கூடஸ்தன்; சலவிண் போன்றது சீவன்.

### இருவகையாக அர்த்தம் கொள்ளல்

59. ''அது நீ' என்ற சொற்களுக்கு **வாச்சியார்த்தம்** அல்லது **நேர்பொருள்** (வணங்கற்குரிய) முறையே ஈசன், (வணங்கும்) சீவன் என்பதாம்.

அவற்றுக்கு **இலட்சியார்த்தம்** அல்லது **ஆகு பொருள்** (இலட்சியப் பொருள்) முறையே (மாசற்ற) பிரம்மம், (கூடஸ்தன்) ஆன்மா என்பதாம்.

காய்ச்சிய பாலில் கலந்து ஒன்றாய் இருக்கும் வெண்ணெயைக் கடைந்தெடுப்பது போல் விவேகத்தால் உன்னை அறிந்து நேர்பொருளின்றும் பிரிந்து கொள் வாயாக.

* சொற்களுக்குப் பொருள் கொள்ளும் முறை இரண்டு. ஒன்று நேர்பொருள் ஆகிய வாச்சியார்த்தம். மற்

றொன்று ஆகுபொருள் ஆகிய இலட்சியார்த்தம் (இலக்கியப் பொருள்). 'அது நீ' என்பவற்றுக்குச் 'சீவனாகிய நீயே ஈசன்' என்ற நேர்பொருள் கடந்து இலட்சியப் பொருளாம் 'ஆன்மாவாகிய நீயே பிரம்மம்' என்ற உண்மையை விளங்கிக் கொள்ள வேண்டும்.

**பிரிவது எப்படி?**

60. ''பிரிவது எப்படி என்று கேட்பாயாகில் உடம்பை நான் என்று நினைக்கும் அறிவைத் தொலைத்துவிட வேண்டும். உடம்பா நீ? இல்லை. அது பிணமாகி விடக்கூடியது. ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கை அது.

* அன்ன ரசத்தால் தோன்றி வளர்ந்து பின் அன்ன வடிவான மண்ணில் ஒடுங்கி விடுகிறது உடம்பு. அஃது அன்ன மயம். அன்னமய கோசமான உடம்பு ஆன்மா இல்லை.

மூக்கால் உயிர்க்கும் பிராணன் (காற்று) நீ இல்லை. அஃது இராசத குணத்தின் காரியம்.

* பிராணன் முதலிய வாயுக்களும் கன்மேந்திரியங்களும் கூடிய சூக்கும உடம்பு பிராணமய கோசம். அதுவும் ஆன்மா அன்று.

61. மனம் புத்தி ஆகியன ஆன்மாவோ எனில் அவையும் அல்ல. கருவியாகிய மனமும் கருத்தா ஆகிய புத்தியும் சத்துவ குண விகாரம்.

* மனமும் ஞானேந்திரியங்களும் கூடியது மனமய கோசம். புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடியது விஞ்ஞான மய கோசம். அவை ஆன்மாக்கள் அல்ல; சூக்கும தேகம்.

ஆழ்துயில் (சுழுத்தி) நிலையில் இருக்கும் ஆனந்த மய கோசத்தை ஆன்மா என்று கூறலாமோ எனில் அஃது அறியாமையாகிய தமோ குணத்தின் விருத்தி ஆகையால் அதனையும் ஆன்மா என்று கூறலாகாது.

* ஆனந்த மயம்-காரண தேகம்; ஆன்மா அன்று.

**நீ யார்**

62. ‘நீ, உண்மை அறிவு இன்பம் சமம் நிலைத்தன்மை சாட்சி ஒருமை என்றுமிருத்தல் எங்குமிருத்தல் ஆக விளங்கும் ஆன்மா என்று அறிவாயாக. அங்ஙனம் அறிந்து, பொய் சடம் துக்கம் முதலிய வடிவுகளாகவும் தம்முள் வேறுபட்டும் இருக்கும் ஐந்து கோசங்களை ஆன்மா என்று கருதும் மயக்கை விட்டு வெளியேறுவாயாக''

**சூனியமா நான்?**

63. ''குருவே, அன்னமயம் முதலான ஐங் கோசங்களையும் இது நான் இல்லை, இது நான் இல்லை என்று (அல்ல அல்ல என்று களைதலாகிய நேதி முறையால் களைந்து விட்டு) அப்பால் பார்க்கும் பொழுது பாழ் (சூனியம்) தான் மிஞ்சி நிற்கிறது. வேறு எதனையும் பார்க்க முடியவில்லை. அந்தச் சூனியமான மையிருளையா நான், மேலாம் ‘நான்’ என்று அனுபவிப்பேன்'' என்று கேட்டனன் மாணாக்கன்.

**காண்போன் நீயே**

64. அதற்கு ஆசான் விளக்கம் அளித்தார். ''முன்பு சொன்ன பத்தாமவன் கதையில் அவன் புத்தி மயக்கால் ஒன்பது பேரை மட்டும் எண்ணி எண்ணிப் பார்த்து அவர்களைக் கண்டவன் தன்னைக் காணவில்லை. அங்ஙனம் காணாத போது நடுவில் அவனிடத்தும் அவன் கண்ட சூனியம் அவன் ஆவனோ எண்ணிப்பார். ஆகவே அன்புள்ள மகனே, காண்பவற்றை எல்லாம் காண்போன் நீயே என்று அறிவாயாக.

* விழிப்பு நிலையில் இந்திரியங்களின் ஆட்டத்தையும் கனவு நிலையில் மனத்தின் கூத்தையும் ஆழ்துயில் நிலையில் இவற்றின் சூனியத்தையும் காண்போன்-நீ-மாறாதிருக்க உன்னால் காணப்படும் அவை மூன்றும் ஒன்றில் ஒன்று மாறிப் போகின்றன.

### நீயே சாட்சி

65. ''பருமை நுண்மை அறியாமை (காரணம்) என்ற உடல் மூன்றும் அவற்றால் எழும் விழிப்பு கனவு ஆழ்துயில் என்ற அவத்தை மூன்றும் அவற்றால் தோற்றம் தரும் இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற காலம் முன்றும் கடலில் எழுந்து எழுந்து அழியும் அலைகள் போல வந்து வந்து மாயின எத்தனையோ? ஆலமர் கடவுள் ஆணையாக நீ தான் அவற்றுக்கெல்லாம் சாட்சி என்பதை உணர்க.

### சுடருக்குச் சுடர் எதற்கு?

66. ''சூனியம் முதலிய எல்லாம் கண்டு அறியும் சாட்சியாகிய என்னை வேறு எந்த அறிவினால் அறிவேன் என்று சொல்லாதே. சுயமாம் சோதிச் சுடருக்குச் சுடர் தர வேறு சுடர் தேவையா? இல்லையே! பத்தாமவன் தன்னைப் பத்தாமவன் என்று கண்டது தன்னால் தானே? அவ்வாறின்றி அவனிடத்துத் தனக்கு வேறே பதினோரா மவன் உண்டோ, இல்லையே! உய்த்துணர்வாயாக.

67. ''அறிவுக்கு அறிவு தர வேறு அறிவு உண்டு என்று கூறுவது மடமையாகும். அவ்வாறு குதர்க்கம் செய் வதால் முடிவிலாமையே (அனவத்தை) பலனாக முடியும். நீ அறிபடும் பொருளும் இல்லை. அறிபடாப் பொருளும் இல்லை. நீயே அறிபொருள். சுயஞ்சுடர் வடிவான உன்னை நீ உணர்ந்து கொள்வாயாக.

* அனவஸ்தா தோஷம்-விதைக்கு மரம், மரத்துக்கு விதை என்று போய்க் கொண்டே இருக்கும் விவகாரம்.

### வெல்லத்தின் இயல்பு இனிப்பு

68. ''வெல்லக் கட்டி சேர்த்துச் செய்த மாப்பணியாரம் முழுக்க இனிப்பாக இருக்கிறது, அங்ஙனம் இனிப்பு ஆக்கியது வெல்லத்தின் இயல்பு நிலை; வெல்லத்துக்கு வேறொன் றால் வந்தது அன்று. அவ்வாறே அது இது என்று கிடக்கும் பொருள்களை அறியும்படியான அறிவைத் தந்தது 'அகம்'. அது 'அது இது' என்ற இரண்டும்

இல்லை. ஆகவே அந்த 'அகம்' என்பதன் இலட்சி யார்த்தமான நீ ஞானவடிவம் என்பதனை அறிவாயாக.

* அது இது என்பது அறிபடு பொருள். அறிபடாப் பொருள் ஆகிய சடப்பொருளை.

69. ''(முன்பு உணர்த்தியது போல்) இந்த (மூ வுடலுக்கும் ஐந்து கோசங்களுக்கும் அப்பாற்பட்ட அவத்தை மூன்றும், சாட்சியான) **நீ**, துவம் என்ற சொல்லின் இலட்சியப் பொருள் **அது** (தத்) என்ற சொல்லின் இலட்சியப் பொருள் கட்டற்ற பிரம்மம் என்பதாம். அவற்றுக்கு (நீ, அது என்பவற்றுக்கு) வாச்சியார்த்தம் முறையே சீவன் ஈசன் என்பதாம்.

* வாச்சியப் பொருளாக உள்ள சீவன், ஈசன் ஆகிய இருவரும் வேறுபாடு உடையர். அவர்களிடை ஐக்கியம் நிகழ்தல் இல்லை.

**சீவன், ஈசன் ஐக்கியம் இல்லை**

70. ''சீவன், ஈசன் ஆகிய இருவரும் பெயர் இடம் காரண காரிய வடிவ உபாதி, உடல் உணர்வு என்பவற்றால் வேறுபாடு உடையராக, பாதலமும் விசும்பும் போன்று மிகத் தொலைவில் விலகி நிற்கின்றனர். ஆகவே அவர் களிடை எக் காலத்தும் ஐக்கியம் நிகழ்தல் இல்லை.

**வேறுபாடு**

| பெயர் | சீவன் | ஈசன் |
|---|---|---|
| இடத்தால் : | பிண்டம் | அண்டகம் |
| உபாதி : | காரியம் (அசத்து) | காரணம் (சத்து) |
| உடல் : | தனி | மொத்தம் |
| உணர்வு : | சிற்றறிவு | பேரறிவு |

**இலக்கணை உதவும்**

71 ''தாம் சொல்லும் வாசகப் பொருள் இசையாமல் இடர்ப் படுமானால் அவை இடரின்றிப் பொருள் தரற் பொருட்டு

வட நூலார் இலக்கணை (இலட்சணை) யைக் கையாள் வர். இலக்கணையானது, விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என்று மூவகைப் படும்.

**மூவகை இலக்கணை**

72. 'கங்கையில் கோஷம் (இடைச்சேரி)' என்பது விட்ட இலக்கணைக்கு உதாரணம். 'கறுப்பு நிற்கச் சிவப்பு ஓடுகிறது' என்பது விடாத இலக்கணைக்கு உதாரணம். 'சோயம் தேவதத்தன்' (இவனே அவனான தேவதத்தன்) என்பது விட்டும் விடாத இலக்கணைக்கு உதாரணம். மேலான நூல்களில் பொருள் பொருந்தாது முரண்படும் வாக்கியங்கள் இம் மூவகை இலக்கணையால் முரண் இன்றிப் பொருள் கொடுக்கும்.

* **கங்கையில் இடைச் சேரி** = கங்கைக் கரையில் இடைச் சேரி. இங்கு, கங்கை என்ற சொல் தன் வெள்ளம் ஆகிய நேர் பொருளை விட்டுக் கரையை உணர்த்துகிறது. இது விட்ட இலக்கணை.

**கறுப்பு நிற்கச் சிவப்பு ஒடுகிறது** = கறுப்பு சிவப்பு மாடுகளில் ஒன்று நிற்க ஒன்று ஓடுகிறது. கறுப்பு சிவப்பு என்ற சொற்கள் நிறங்களை உணர்த் தாமல் அந் நிறமுள்ள விலங்கை உணர்த்துகின்றன. அவை (நிறங்கள்) தனியே நிற்றலும் கூடா. நிறம் விலங்கை உணர்த்தல் விடாத இலக்கணை.

**சோயம் தேவதத்தன்** = ச: அம் தேவதத்தன் = இவனே அவனான தேவதத்தன். ஒரு சொல்லின் நேர் பொருள் நடுவே ஒரு பகுதி விடலும் ஒரு பகுதி விடா மையும் ஆக அமைவது விட்டும் விடாத இலக்கணை. முன்னே கண்ட தேவதத்தனை வேற்று நாட்டில் வேறொரு காலத்தில் கண்டு அவன் இவனாம் என்று கூறின், அன்னிய தேசம், சமீப தேசம்; சென்ற காலம் நிகழ்காலம் என்பன விட்ட பகுதிகள். தேவதத்தன் உடல் மட்டும் விடாத பகுதி.

73. முற்கூறிய 'இவனே அவனான தேவதத்தன்' என்பதன் சொற் பொருள் தூர தேசம் சமீப தேசம், இறப்பு நிகழ்வு, அந்தத் தேவதத்தன் இந்தத் தேவதத்தன் என்பன. இவை முரணி நிற்கின்றன. சொற்பொருளை விட்டுவிட்டு ஆகு பொருள் (இலட்சியார்த்தம்) என்பதை விட்டுவிடாது எண்ணினால் அவ் வாக்கியம் முரண் இன்றித் தேவதத்தன் என்ற ஓர் ஆளைக் கண்கூடாகக் காட்டுவது தெரியும்.

## 'தத்துவமசி' என்பதன் ஆகுபொருள்

74. அவ்வாறே தத்துவம் அசி (தத்துவமசி) என்பதின் தத் (அது) துவம் (நீ) என்ற சொற்களின் ஆகுபொருள் (இலட்சியார்த்தம்) ஆன பிரம்மம், சாட்சி என்பதனை விடாமல். பேதம் காட்டும் நேர்பொருளை விட்டுவிட்டு எப்போதும் பிரம்மமே ஆன்மா (கூடஸ்தன்) ஆன்மாவே பிரம்மம் என்று சொல்லும் அசி (ஆகிறாய்) என்ற சொல்லின் பொருள் ஐக்கியத்தைக் காட்டி நிற்கிறது.

## இங்கு வந்துள்ளது எந்த இலக்கணை?

75. கடத்து (பானை) நீரிலும் மேக நீரிலும் கண்ட பிரதி பிம்பமான வானம் இரண்டும் (உபாதியினாற்) கற்பிதமே. அவை உண்மையல்ல. கடத்தில் உள்ள விண்ணும் மகா விண்ணும் கலந்து எப்போதும் ஒன்றேயாகும். அது போல (புத்தியில் பிரதிபலிக்குப் சீவனும் மாயையில் பிரதிபலிக்கும் ஈசனும் உபாதியினால் கற்பிதமே; அவை உண்மையல்ல). பிரம்மம் சாட்சி (ஆன்மா) ஆகிய இரண்டும் எப்போதும் ஒன்றேயாம். ஆகவே இந்த ஒன்று என்று உன்னிடம் அனுபவம் திடமாதற் பொருட்டுச் 'சிவோகம்' (சிவமே நான், நானே சிவம்) என்று உணர்வாயாக. அதன் பலனாகத் 'தான் அறிவின்பம்' என்ற அனுபவத்தில் நிலை பெற்றிருப்பாயாக.''

## ஆசான் உரைப்படி மாணாக்கன் சமாதிநிலை காணல்

76 உயிர்த் துணையான ஆசான் காட்டிய தத்துவ வழி

தவறாமல் ஐந்து கோசங்களையும் பாழையும் கடந்து அதன் பின், உள்ளத்தில் அப் பாழைப் பார்க்கும் தான் சாட்சி என்ற சூக்கும இருப்பும் விட்டு, அகண்டாகார விருத்தி என்கிற உணர்வும் நழுவிப் பின் பூரண பிரம்மத்தைக் கண்டான்.

* அகண்டாகார விருத்தி; உலகிற்கு ஆதாரமான பேரறிவும் உலகின் காரணமான ஈசனின் பேரறிவும் சீவனுக்கு ஆதாரமான கூடஸ்தனின் பேரறிவும் ஒன்றே என்ற அனுபவ நிலையே அகண்டாகார விருத்தி.

### சமாதியாற் பேரின்பம்

77. அனுபவ ஆனந்த வெள்ளத்து அழுந்தி, பகுப்பிலா முழுமையாகி, உடம்பு இந்திரியங்கள் முதலிய யாவி னின்றும் விடுபட்ட (நீரில் உப்பே போல்) மெய்யறிவு என்ற நிலையில் மனம் பூரணமாக, அருள் நிறை வடிவாம் ஆசான் காண, விழிப்பில் ஆழ்துயில் அடைந்து மாணாக்கன் தன்னியல்பு அடைந்தான்.

### சமாதியினின்று வெளிப்படல்

78. அருள் பெற்ற மாணாக்கன் அந்நிலையில் நெடும் பொழுது இருந்தான். பின் மெல்ல அவன் மனம் வெளியில் வருதல் உணர்ந்தான். தூய ஆசானைக் கண்டான். துளி விழி சொரிய அடி தொழுது வீழ்ந்து எழுந்து வலம் வந்தான். குருவாம் இறைவன் கேட்கக் கை குவித்து உரைக்கலானான்.

### 'கைம்மாறு காணேன்' என்று போற்றல்

79. ''ஐயனே, எண்ணற்ற என் பிறப்புக்களில் என் உள் நின்று ஆண்டுவரும் மெய்யனே, எனக்கு அருளறிவு தருதற் பொருட்டு மானிடம் தாங்கி வந்த ஆசானே, போற்றுகிறேன். யான் ஈடேற முத்தி நல்கும் உதவிக்குக் கைம்மாறு ஒன்றும் காண்கிலேன், திருவடி போற்றி போற்றி.''

### 'நீ செய்ய வேண்டிய கைம்மாறு இது' எனல்

80. மாணாக்கன் இங்ஙனம் உரைக்க, ஆசான் மகிழ்ந்து நோக்கி, 'கிட்டவா' என்று அமரச் செய்து கருணையோடு உரைக்கலானார். ''பொல்லாத தடைகள் மூன்றும் தொடராமல், இயல்பு நிலையான பேரின்ப அமைதியில் (சொரூப ஞான நிட்டையில்) நீ இருப்பாயாகில் அதுவே நீ எனக்குச் செய்யும் கைம்மாறு ஆகும்'' என்றார் ஆசிரியர்.

* தடைகள் மூன்று: அறியாமை ஐயம் திரிபு.

### தடைகளால் மெய்யறிவு விலகுமோ எனல்

81. ''நீ நான் என்ற இரண்டும் இல்லாமல் நிறைந்த பூரணமாய் அனுபவ வாயிலாய் எங்கும் நான் எனத் தெளிந்த ஞானம், நழுவி விடவும் கூடுமோ, குருவே'' என்றான் மாணாக்கன்.

அதற்கு ஆசான், ''தன்மயமான அந்தப் பிரம்ம அனுபவமானது ஆசான் உரையினாலும் மெய்ப்பொருள் நூல்களாலும் தோன்றும் ஆயினும் தடைகள் இருக்குமானால் திடப்படாது.

* எங்கும் நான் : அகண்டாகார நிலை

### தடைகளும் அவற்றைத் தவிர்க்கும் உபாயங்களும்

82. "அறியாமை ஐயம் திரிபு (அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம்) என்பன அத் தடைகள். கடந்த காலத்து எண்ணற்ற பிறவிகளில் வந்த பழக்கத்தால், துன்பம் தருவனவாகிய அத் தடை மூன்றும் வரும். வருமாயின் உயர் ஞானம் கெடும். ஆகவே அவற்றை, மெய்ப்பொருள் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் (சிரவணம் மனனம் நிதித்தியாசனம்) என்ற மூன்றால் திடமுடன் களைந்தெறிக.

### தடையுள்ள போது ஞானம் முத்திக்கு உதவாது எனல்

83. ''மந்திரத்தால் கட்டுப்பட்ட இடத்து நெருப்பு ஒரு

துரும்பையும் எரிக்காது. அவ்வாறே அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம் என்பவற்றால் தடைப்பட்ட மக்கிய ஞானத்தினால் பந்தம் வெந்தழியாது, ஆகவே விடாப் பிடியாகப் பயிற்சி செய்து, கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்பவற்றால் அந்த மூன்று தடைகளையும் நீக்குவாயாக.

### தடைகளின் இயல்பு

84. ''அகம் பிரம்மம் என்ற உணர்வை மறைத்து யான் பிரம்மம் அல்லன் என்ற நினைப்பு ஊட்டிக் கொண்டிருப்பது அறியாமை. நீயே பிரம்மம் என்ற ஆசான் உரையை நம்பாமல் மனம் குழம்புதல் சந்தேகம். நிலையற்ற உலகம் நிலையுடைய தென்றும் உடம்பை ஆன்மா எனவும் கருதும் மயக்கமே விபரீதம்.

### தடைகளுக்கு எதிரான கேட்டல் முதலிய இயல்பு கூறல்

85. ''எங்கும் நான் என்கிற பிரம்மாகார விருத்தியைத் தத்துவ விசாரணையால் நிலைபெறச் செய்தல் கேட்டல் ஆகும். அதற்கு ஒப்பச் சீவ பிரம்ம ஐக்கியத்தை யுக்தியினால் ஆராய்தல் சிந்தித்தல் ஆகும். சித்தம் தனிமையான சுவானுபூதியைத் தரிசித்தல் தெளிதல் ஆகும். நித்தம் இப்படியே செய்துவர விடுதலை அடைவாய் நீ.

### மூன்றையும் பழக வேண்டிய கால அளவு கூறல்

86. ''எவ்வளவு காலம் காண்பான்(ஞாதா) காட்சி (ஞானம்) என்ற உணர்வு இருக்குமோ அது காறும் கேட்டல் முதலிய மூன்று பயிற்சிகளும் வேண்டும். அதற்குப் பின் தேவையில்லை.

வானம் போல் தூயதாக, பற்றுதலற்ற ஆன்ம வடிவாக, பிரம்மமாக, உயிரோடிருக்கும் போதே விடுதலை பெற்றவர்கள் எப்பொழுதும் அதுவாகவே உடம்பை விடுத்தபொழுதும் இருப்பார்கள்.

### சீவன்முத்தர் நால்வகையினர்

87. "மெய்யறிவுடையராக, வானுக்கு நிகரானவராக, இங்கே விடுதலை பெற்றோர் - நால்வகைப்படுவர். அவர்கள் **பிரம்மவித்து** (பிரம்மத்தை அறிந்தோர்) **வரன், வரியான், வரிட்டன்** ஆகியோர். அவர்களில் பிரம்மவித்தின் நிலையையும் மற்ற மூவரின் வேறுபாடு களையும் சொல்வேன் கேட்பாயாக.

### சீவன் முத்தரில் பிரம்மவித்தின் இயல்பு கூறல்

88. "தீரராகப் பிரம்ம ஞானியாகத் தெளிவு பெற்றவர்கள், அந் நிலை அடைதற்கு முன்னர்த் தாம்தாம் செய்து வந்த குடிப்பிறப்புச் செயல்களை அவை வருத்தம் தரும் செயல்களாயினும் உலகர்க்கு உபகாரம் என்பதனால் முறைப்படி அவற்றைச் செய்து வருவார்கள். அதற்காகத் தாங்கள் அடைந்துள்ள மேலாம் நிலையை அவர்கள் விட்டு நீங்குதல் இல்லை.

89. "காமம் முதலிய உணர்ச்சிகள் ஒரு சமயம் தோன்றி னாலும் அவர்களை அறியாமலே அவை ஒரு கணத்தே நீங்கி விடும்; மனத்தில் படுவதில்லை. தாமரை இலைத் தண்ணீர் போல உலகிடை வாழ்வர். பாமரர்போல் காட்சி தருவர். பண்டிதத் திறமை காட்டார். ஊமர் போல் இருப்பர். ஆனால் உள்ளத்தில் பேரின்பம் கொண்டிருப்பர் சீவன் முத்தர்.

### பிரம்ம ஞானி (வித்) எத் தொழிலும் புரிவர்

90. "பயனை ஊட்டும் முன்வினைகள் (பிராரப்தம்) பலவாகும். முற்பிறப்பின் செயல்களுக்கு ஏற்ப வரக் கூடியவை அவை. ஆகவே சீவன் முத்தர் (பிரம்ம வித்துக்கள்) நிகழ் காலத்தே செய்யக் கூடிய செயல்களும் வேறு வேறாக இருக்கும். அவர்கள் மாதவம் செய்யலாம் வாணிகம் செய்யலாம் பூதலம் புரக்கலாம் ஐயம் வாங்கிப் புசித்தலும் செய்யலாம்.

91. "சென்றவற்றை அவர்கள் நினைப்பதில்லை. வருவனவும் நினையார். கண்முன் நிற்கும் இன்பங்கள் துய்ப்பர்.

வெய்யிலானது நிலவாகக் குளிர்ந்து ஆகாயத்தினின்று விழுந்து விட்டு இறங்கினாலும் பொன்றின (இறந்த) உடல் உயிர் பெற்றாலும் வேறு எந்த விந்தை நிகழ்ந்தாலும் புதுமையாகப் பாரார். நன்று என்றும் தீது என்றும் சொல்லார். மாறுதலற்றுச் சாட்சியாய்ப் பிரம்ம வித்தானவர்கள் விளங்குவார்கள்.

* காண்பான் காட்சி காண்பொருள் (ஞேதுரு ஞானம் ஞேயம்) என்ற மூன்றில் நடுவானவர்களாக (சாட்சிகளாக)-சர்வ சாட்சியாக-இருப்பார்கள் பிரம்மவித்தர்கள்.

**மற்ற மூவரின் இயல்பு**

92. ''மற்ற மூவரில **பிரம்மவரன், பிரம்மவரியான்** என்ற இருவகைச் சீவன்முத்தரும் பேரின்ப அமைதி (சமாதி)யில் நிலைத்திருப்பர் உடம்பு இயங்குதற் பொருட்டு உணவு முதலியன பற்றி நினைப்பவன் **வரன்;** மற்றவர்கள் உணவு முதலியவற்றுக்குத் தூண்டுதல் தர அதனால் அறிபவன் **வரியான்.** பிறராலோ தன்னாலோ அவ் உணவு முதலியன கொள்ள அறியாதவன் **பிரம்ம வரிட்டன்**.

* பிரம்ம வரிட்டன் இன்பச் சமாதியில் அதீதமாக இருப்பவன்.

**சீவன் முத்தரின் முத்தி அனுபவத்தில் வேறுபாடு கிடையாது எனல்**

93.''இவ்வாறு பலராக உள்ள ஞானியர் உலகத்து அரியரே. அவர்கள் அடைந்த முத்தி இன்பத்தில் வேறுபாடு கிடையாது. அவர்கள் பாடுபட்டுப் பெற்ற சமாதி நிலைக்குப் பயன் யாது என்றால் புறத்தே செயல் புரிபவனாக உள்ள பிரம்மவித்தன் பெருந் துன்பங்களை அனுபவித்தல் போல் காணக்கிடப்பான். ஏனைய மூவரோ (வரன் வரியான் வரிட்டான் ஆகியோர்) தடையற்ற பேரின்பத்தே உறைந்திருப்பர்.

**பிரம்ம ஞானியும் பேதையும் செயலால் ஒன்றுபட்டிருப்பினும் அறிவு வேறுபாடு உடையவர்**

94 ''எங்கும் பரவியுள்ள வானம் ஆனது ஒன்றிலும் பற்றாது

நிற்கும். மற்றைய நான்கு பெரும் பூதங்களோ ஒன்றுட னொன்று கலக்கும். பிரம்ம ஞானிகள், வினை செய்து ஒழுகும் பேதைகள் போலவே வாழ்கின்றனர். ஆயினும் பிரம்ம வித்தர்கள் [ஞானிகள்] அறியாமை நீங்கிப் பிறவாமை பெற்றது எவ்வாறு எனில் அவர்கள் மேற் கூறிய வானம் போலத் தூயராய்ப் பற்றாது இருக்கின் றனர் என்பதால் என்றறிக.

**சீவன் முத்தரைப் போற்றுதலால் வரும் நன்மை**

95. ''சீவன் முத்தரைச் சேவித்தோர், சிவன் அயன் திருமால் ஆகிய மூவரும் மகிழுமாறு நோன்புகள் யாவும் முடித்துப் பிறப்புத் தூய்மை அடைந்திடுவர் என்று பழைய மறை நூல்கள் முழங்குகின்றன.

அறிதற்கு அரியராகிய அச் சீவன் முத்தர், உயிர் வாழும் பொழுதே விடுதலை பெற்றவர். உடம்பை ஒழித்த முத்தி பெறும் வகையினை உரைப்பேன், கேட்பாயாக.

**மூன்று வித வினைகள் ஒழிதலைக் கூறல்**

96. ''பல பிறப்புகளில் சேகரிக்கப்பட்டு இருப்பில் இருப்பன வாகிய பழவினைகள் யாவற்றையும் பஞ்சினை ஊதித் தீ அழிப்பது போல் ஞானத்தழல் அழித்துச் சாம்பலாக்கி விடும்.

இனி வரலாகும் வினைகள் நெருங்குதற்கும் முன்பே ஓடிவிடும்.

இப்பொழுது பலனை உண்பித்துக் கொண்டிருக்கும் வினையானது அனுபவித்த பின்பே நீங்கும்.

* வினை மூவகைப்படும். I. சஞ்சிதம் : சென்ற பிறப் புகளில் செய்யப் பட்டுப் பலன் அனுபவியாமல் நின்ற வினை. II. பிராரப்தம் : முந்திய பிறப்புகளில் செய்யப் பட்டு இப்போதைய பிறப்புக்கு ஏதுவாகிய வினை III. ஆகாமியம் : இப் போதைய பிறப்பிற் செய்யப் பட்டு இனிவரும் பிறப்புக்கு ஏதுவாகும் வினை.

## முன்வினைப் பயனைப் புசிக்கும் நாளில் இரு வினையும் விலகும் வகை

97. ''பொறுமையுடன் பிராரப்த வினைகளை அனுபவிக்கின்றார் சீவன் முத்தர். அப்பொழுதும் செய்யும் வினைகள் மறு பிறவியைக் கொடுக்குமாறு தொடர்ந்திடாமல் அழிந்துவிடும் வழி யாது என்றால் அவர்களை இகழ்ந்த அற்பர்கள் அவர்களின் பாவ வினைகளைப் பெற்றுக் கொண்டு அனுபவிப்பார்கள். அறிவுடையோர் அவர்களை வழிபட்டு அறமெல்லாம் கைக்கொண்டு அனுபவிப்பார்கள்

## மூவகை உடம்பு ஒழிதல்

98. ''அரிய மெய்யறிவு என்ற நெருப்பால் அவித்தையாம் காரண உடம்பு சாம்பலாகிவிடுகிறது. பருஉடம்பு கால நியதிப்படி பிணமாகி வீழ்கிறது. அப்பொழுது கொல்லுலையில் காய்ந்த இரும்பு உண்ட நீர்போல் நுண் உடலானது துரியமாகவும் பரந்தும் இருக்கின்ற ஆன்மப் பேரொளியில் — பிரம்ம சொரூபத்தில் — கரைந்து விடுகிறது.

* தொன்று தொட்டு வந்த பழவினையும் காரண உடலும் மெய்யறிவால் அழியும். இப் பிறப்பிற் செய்து அடுத்த பிறப்புக்கு ஏதுவாகும் வினையும் நுண் உடலும் அந்த மெய்யறிவினால் ஒடுங்கி விடுகின்றன. நடப்புக்குக் காரணமான வினையும் பருவுடலும் கால ஒழுங்கில் நீங்கிவிடுகின்றன.

## உடல் துறந்த விடுதலை

99. குடம் உடைந்தால் அதில் உள்ள ஆகாயம் வானத்தோடு ஒன்றாகிப் பேதம் அற்றுப் போய் விடுகிறது. அது போல, தொடக்கம் நடு முடிவு, அகம் புறம் என்ற நிலைகளிலிருந்து விடுபட்டு, மூவுடல் என்ற உபாதி நீங்கிய அக் கணமே, சீவன் முத்தர் எப்போதும் இருந்தபடியே விளங்கும் உடம்பற்ற விடுதலை (விதேக முத்தி) நிலைக்கு வருகிறார்கள்.

* கடம் உடைந்தால் கட ஆகாசம் மகா ஆகாசத்தோடு ஒன்றாகி விடுகின்றது. பரு, நுண், காரண சரீரங்கள் ஆகிய மூவுடலாம் உபாதி நீங்கியதும் சீவன் முத்தர் பிரம்மத்தோடு ஒன்றி விடுகின்றனர்.

## மெய்ப் பொருள் நமக்கு இயல்பு

100. ''மகனே, எங்கும் ஆகாயம் (வெளி) சூழ்ந்து இருக்கிறது. புதிதாக ஒரு கிணற்றைத் தோண்டிய காலை அதில் ஆகாயம் உண்டாகியிருப்பது போல் தெரிகிறது. அவ்வாறே எக் காலத்தும் உள்ள பிரம்ம (மெய்ப்பொருள்) வடிவானது ஆசான் அருளாலும் மறைநூற் பயில்வாலும் புதிதாக அடையப் பெற்றதாகத் தோன்றும். அஃது உண்மையன்று. ஆகவே, 'மைந்தனே, முடிவிலாப் பிரம்ம சொரூபமாகிய நாம் எப்போதும் ஏகமாம் வடிவே என்று அமைந்திருப்பாயாக.

* இப்போது கிடைத்த புதிய அனுபவத்தால் அந்த மெய்ப்பொருள் புதிதாகத் தோன்றியது போல் தென் படும். அது எக் காலத்தும் இருப்பதேயாகும்.

## நம் ஆணை; உன்னை மறவாதே

101. ''கானல் நீர் போலவும், இப்பியில் வெள்ளி போலவும் கந்தருவ நகரம் போலவும் கனவிற் கண்ட ஊர் போலவும் ஆகாய நீலம் போலவும் கயிற்றிற் பாம்பு போலவும் மலடிமகன் என்றாற் போலவும் முயற் கொம்பு என்றாற் போலவும் குற்றியில் ஆள் காணப்படுவது போலவும் மெய்ப்பொருளில் கற்பிதமாகக் காணப்படும் பிரபஞ்சம் எல்லாம் வெறும் மயக்கம் தரும் தோற்றமே. ஆகவே ஞானமெய் மகனே, மெய்யுணர்வுப் பிரம்மம் ஒன்றே உண்மையானது. நம் ஆணை; மறவாதிரு.

O

# 2. சந்தேகம் தெளிதல் படலம்

**தலைப்பு விளக்கம் : நூலாசிரியர் கூற்று**

1. ''பெரிய தூணை ஊன்றுவோர், குழி தோண்டி, அதை மெல்ல எடுத்து நட்டு அது உறுதியாக நிற்கக் குத்திக் குத்தி மண்ணை நிரப்பிக் கெட்டிப் படுத்தல் போல், ஆன்மாவே முழு மெய்யுணர்வு என்று அனுபவித்து ஆழ்ந்து நின்ற மனத்தின் செயல் அதிலே அசைவற்று நிற்க, ஐயம் தெளிதலைக் கூறுகின்றேன்.''

   * தூணைப் புதைக்கும் உவமை **தூணா கனன நியாயம்** எனப்படும்.

**குருவை விட்டு அகலாத மாணாக்கன்**

2. உடம்பே ஆன்மா என்று பிழைபட நினைந்தது முதல் முக்குணம் விடுத்து விடுதலை (விதேக முத்தி) அடைகின்ற அக்கணம் வரை, தாய்க் குரங்கை இறுகப் பற்றிக் கொண்ட குட்டி போன்று குருவை விட்டுச் சற்றும் அகலாமல் நன் மனத்தனாகவும் மெய்யுணர்வு உடையனாகவும் எப்பொழுதும் உடன் நின்றான் மாணாக்கன்.

* குரங்கின் குட்டி தன் தாய்க்குரங்கு எங்கே தாவினும் அதனை விடாது பற்றி நிற்கும். இந்த உதாரணத்தை **மர்க்கட நியாயம்** என்பர் தாய்ப் பூனை தன் குட்டிகள் கிடக்குமிடம் தேடிக் காப்பாற்றுதலை **மார்ச்சால நியாயம்** என்பர்.

**'உன் அனுபவம் எத்தகையது?' என வினாதல்**

3. விடாமல் நிழல் போன்று அன்புடன் நின்ற மாணாக்

கனைப் பார்த்து **ஆசான்**, ''[மற்றவற்றின் தாக்குறவு அற்று] வெறும் சாட்சி மாத்திரமாக இருக்கிறாயா? உன் ஐயங்கள் யாவும் தீர்ந்தனவா? தெளிவினிடை [உயிர் உலகு இறை என்ற] வேற்றுமைகள் வந்து விரவியது உண்டா? உன் அனுபவம் யாது?'' என்று வினவினார்.

### ''பேதப் பேய்கள் இல்லை'' எனல்

4. ஆசானின் அடியிணை வணங்கி **மாணாக்கன்**, ''எந்தையே, உங்களது அருள் என்னும் உதயகிரி மீது அறிவுணர்த்தல் என்னும் கதிரோன் உதித்து அகப் பார்வை தெரியத் தொடங்கவே மெய்யறிவு பரவியது. ஆகவே பிறப்பு என்னும் வலிய காட்டில் அறியாமை என்கிற இருளில் எழுவனவாகிய வேற்றுமையாம் பேய்கள் இருத்தல் கூடுமோ?'' என்றான்.

* **பேதப் பேய்** : உயிர்-இறை வேறுபாடு; உயிர்களில் ஒன்றுக்கொன்று வேறுபாடு; உயிர்-சடம் வேறுபாடு, இறை-சடம் வேறுபாடு, சடம்-சடம் வேறுபாடு என ஐவகை.

### உறுதி எய்த விண்ணப்பம்

5. **மாணாக்கன்** : ''ஐயனே, மந்திரவாதியால் விரட்டப் பட்ட பேய் விலகிச் சென்றாலும் மேல் அது வாரா வண்ணம் எந்திரம் எழுதிக் கட்டி வகை செய்வார்கள். அது போன்று உங்களின் அறிவுரையால் மயக்கம் தீர்ந்து விட்டது எனினும் மெய்யுணர்வில் உறுதிநிலை எய்து மாறு இன்னும் தங்களிடம் விண்ணப்பம் செய்கிறேன்.

### மாணாக்கனின் ஐயம் இரண்டு

6. ஆன்மாவே மெய்ப்பொருள் (அகம் பிரம்மம்), அதனை வேத வாக்கால் அறி என்றீர்கள். ஆனால் வாக்குக்கு எட்டா ஏகமாம் பிரம்மம் என்றும் கூறுகின்றீர்கள், அதனை இதயத்தால் உணர் என்கிறீர்கள், சோகமாம் மனத்திற்கு எட்டாச் சுயம் பேரொளி என்றும் சொல்கிறீர்கள். அதனால் இரண்டு சந்தேகம் உண்டாயின. அவற்றைத் தாங்கள் களைந்திட வேண்டும்.''

### முதல் கேள்விக்கு விடை

7. **ஆசான் :** ''பிரம்மம், பொறி புலன்களின் தொடர்பான பொருள் அன்று; ஐம் பூதங்களால் ஆகிய பொருள் அன்று. ஆகவே காட்சி கருதல் ஒப்பு (பிரத்தியட்சம் அனுமானம் உவமை) என்ற அளவைகளுக்கு அப்பாற்பட்டு இருக்கிறது அது. மேலும் குண விசேடங்களும் ஒட்டாமல் இருப்பது. அதனால் வாக்கிறந்த பொருள் என்று அறிவாயாக.

* **அளவை ஆறு :** அவற்றுள் பிரத்தியட்சம் அனுமானம் உவமானம என்பன இங்குக் கூறப்பட்டன. மற்றையவை - நூலளவை பொருட்பேறு அளவை இன்மையளவை (சப்தப் பிரமாணம், அர்த்தாபத்திப் பிரமாணம், அனுபலப்திப் பிரமாணம்) என்பன.

### இரண்டாவது கேள்விக்கு விடை

8. ''வாக்குக்கு எட்டாப் பொருள் அது (பிரம்மம்) என்று உரைத்த வேதமே மகா வாக்கியங்களின் ஆகு பொருள் உணர்வால் அந்தப் பொருளை (பிரம்மத்தை)த் துலக்குகின்றது அல்லவா? ஆக இவ் விரு கூற்றுக்களில் எது பிரமாணம் என்றால் இரணடுமே பிரமாணம் தாம். ஏனெனில் மறைகள் பொய் உரைப்பதில்லை.

* **மகா வாக்கியம் நான்கு :** தத்துவமசி (அது நீயாக இருக்கிறாய்); பிரஞ்ஞானம் பிரம்மம் (அறிவே பிரம்மம்); அகம் பிரம்மாஸ்மி (நான் பிரம்மமாயிருக்கிறேன்; அயமாத்மா பிரம்மம் (இந்த ஆன்மா பிரம்மம்)

### பேசாமல் காட்டும் வேதம்

9. ''ஆடவர் குழுமியுள்ள இடத்தில் அங்கு ஒவ்வொருவராகச் சுட்டிக் காட்டப் பெறும் பொழுது 'இல்லை, இல்லை' என்று கூறும் தலைவி தன் தலைவனைக் காட்டிய பொழுது வெட்கமுற்று மௌனியாகிறாள். அவ்வாறே 'இது இல்லை அது இல்லை' என்று தள்ளித்

தள்ளிப் பின்பு எஞ்சி நின்ற [பரப் பிரம்மம் ஆகிய] செம்பொருளை மௌனத்தால் காட்டுகிறது வேதம்.

## இரண்டாம் கேள்விக்கு விளக்கம்

10. ''உன் கேள்வியின் முன் பகுதிக்கு விடை உரைத்தேன். இரண்டாம் பகுதிக்கும் உரைக்கிறேன் கேள்.

'இந்திரியங்களுக்கு இராசன் இதயம்' அதாவது, அந்தக்கரணம் கருதுவதை இந்திரியங்கள் இயற்று கின்றன. அந்தக் கரணத்தின் விருத்திகள் புத்தி என்றும் மனம் என்றும் உடம்பின் புறத்திலும் அகத்திலும் உலவிக் கூத்து இடுகின்றன.

* அந்தக் கரணத்தின் பரிணாமம், புத்தி-மனம்-என்ற விருத்திகள். அதில் **புத்தி** ஞானத்தின் சார்பான கருத்தா; **மனம்** அதற்குக் கருவி.

விழிப்பு நிலையில் அடிமுதல் முடிவரை உடம்பில் பரந்து கருத்தா வடிவாயிருப்பது **புத்தி**; உடம்பில் யான் எனவும் வீடு முதலியவற்றில் எனது என்பதையும் செய்து கொண்டு இந்திரிய வாயிலாக வெளியே செல்வதாய கருவி வடிவில் இருப்பது **மனம்**.

## புத்தியில் பிரதிபலிக்கும் ஞான நிழல்

11. ''உன் முகம், எதிரில் உள்ள கண்ணாடியில் மற்றொரு முகம் போல் (பிரதிபலித்துத்) தோன்றுகிறது. அவ் வாறே சித் சொரூபமான ஆன்மாவின் (கூடஸ்தனின்) நிழல் புத்தியில் (மற்றொரு சித் சொரூபம் போலப்) பிரதிபலிக்கிறது. [அந்தப் பிரதி பிம்பத்தினைச் சித் ஆபாசன்-சிதாபாசன்—என்பர்]. அந்தப் பிரதிபிம்பமான சிதாபாசனோடு கூடி மனம் செயல்புரிகின்றது. இதனைத் தான் அறிவு என்கிறார்கள்.

* சித் ஆகிய தூய அறிவு, அந்தக் கரணமாம் புத்தியில் பிரதிபலிக்கிறது அந்த நிழலைச் **சித் + ஆபாசன்** என்பர். **சிதாபாசன்** என்ற அந்த நிழலோடு கூடி மனம் தொழில் செய்கிறது. அந்தத் தொழிலே அறிவு

எனப்படுகின்றது. சித் சொரூபம் என்பதும் சேதனம் என்பதும் ஒன்றே.

12. ''உருக்கிய உலோக நீரை அச்சில் வார்க்கும் பொழுது அச்சு வடிவங்களுக்குச் சமமாகப் பல வடிவங்கள் ஆகின்றது அது. அவ்வாறே கண் முதலிய பொறிகளின் வாயிலாக வெளிப்படும் அந்தக் கரண விருத்திகளும் கடம் படம் முதலிய பொருள்களின் வடிவாகின்றன. அந்த வடிவங்கள் எல்லாம் தோன்றுமாறு [பிரகாசிக்கச்] செய்கின்றான் சிதாபாசன்.

* இருட்டில் பொருள்கள் தென்படுதற்குக் கண்ணொளியும் விளக்கொளியும் வேண்டும். அவ்வாறே பொருள்கள் தென்பட அந்தக்கரணத் தொழிலும் சிதாபாசனும் வேண்டும். விளக்கு இருளை அகற்றிப் பொருளைக் கண்ணுக்குக் காட்டுகின்றது. அவ்வாறே சென்று பற்றும் எண்ணங்களாகிய விருத்தி ஞானத்தால் வரும் சுக துக்க வடிவுகளான பொருள்களைச் சிதாபாசன் (புத்தியில் பிரதிபலிக்கும் நிழல்) தான் காட்டுகிறது.

13. ''இருட்டில் உள்ள பொருளைக் காண எரிகின்ற விளக்கும் வேண்டும், கண்பார்வையும் வேண்டும். ஆனால் கதிரவனைக் காணக் கண்பார்வை ஒன்றே போதும். அவ்வாறே, விரிந்துள்ள உலகைக் காண அந்தக்கரண விருத்தியும் வேண்டும். (ஆனால் பிரம்மத்தைக் காண அந்தக்கரண விருத்தியும் வேண்டும்,) சிதாபாசனும் வேண்டும். ஆனால் பிரம்மத்தைக் காண பிரம்மாகார விருத்தி ஒன்றே போதும்.

* பிரம்மாகார விருத்தி : பிரம்மம் + ஆகாரம் (வடிவு) + விருத்தி (அந்தக் கரணத் தொழில்)

## பிரம்மம் மனத்திற்கு எட்டும், எட்டாது.

14. ''அந்தக் கரண விருத்தியும் சிதாபாசனும் சேரும் பரிணாமமே **மனம்** என்று சொல்லப்படும். பிரம்மத்தை உணர அதன்பால் செல்லும் அந்தக் கரண விருத்தி தேவை. அந்த வகையில் அது மனத்திற்கு எட்டுவதாகும்.

சிதாபாசனோடு கூடிய மனத்திற்கு எட்டாது. இவ்வாறு மனத்திற்கு எட்டுவதாகவும் எட்டாததாகவும் இருப்பதை அறிந்து தெளிவாயாக.''

* பிரம்மம் ஆனது சாதி குணம் செயல் பெயர் தொடர்பு முதலிய எதுவுமற்று இருத்தலின் மனம் வாக்கு என்ப வற்றுக்கு எட்டாது. இருப்பினும் பிரம்மத்தை நூல்கள் இலட்சணையால் கூறுகின்றன. பெரியோர் விருத்திப் பொருளால் அறிகின்றனர் விருத்திப் பொருளாவது இங்குப் பேரறிவு மறைப்பு நீங்குதலாகும்.

* யான் என்னும் சீவபோதத்தோடு கூடிய மனத்திற்குப் பிரம்மம் புலப்படாது. அப் போதத்தோடு கூடாத மனத்துக்குப் புலப்படும் என்பதாம்.

**மனம் எப்படி அலையாமல் இருக்கும்?**

15. **மாணாக்கன் :** ''மேலாம் குருவே, நீங்கள் சொன்ன வழிகளைத் தெரிந்து கொண்டேன். இன்னொரு விண்ணப்பம். அதற்கு விடை தர வேண்டும். சலனம் இன்றி, பகுப்பற்ற முழுமையான அது (பிரம்மம்) ஆக மனம் ஆவது தானே சமாதி யோகம்? ஊஞ்சல் போல் அலைவது இயல்பாகி, நொடிப் பொழுதில் பல உலகம் முதலியவற்றைத் தோற்றுவிக்கும் இம் மனம் காற்றில்லாத இடத்து விளக்குப்போல் பிரம்மத்தில் இருக்கும் நிலையினை அடைவது எங்ஙனம், உரைப்பீர்களாக.''

**மனத்தில் முக்குணம் விளைக்கும் இயல்புகள்**

16. **ஆசான் :** ''நினைத்தல் இயல்புடைய மனம் முக் குணங்களால் ஆனது. அவற்றில் ஒன்று ஓங்கி நின்றால் மற்ற இரண்டும் அடங்கிக் கிடக்கும். சத்துவ குணம் மிகுந்து இருக்கும் பொழுது தெய்விக இயல்புகள் உண்டாகும். இரசோ குணம் ஓங்கி இருக்கும் பொழுது உலகு உடல் நூலறிவு என்பன குறித்து நினைப்புகள் (வாசனை) ஏற்படும். தமோ குணம் ஓங்கி இருக்கும் பொழுது தீய இயல்புகள் தலை தூக்கி நிற்கும்.

* முக் குண வடிவாம் மனம்: சத்துவத்தால் ஞானம், இரசோ குணத்தால் செயல்மேற் கொளல் (பிரவிருத்தி), தமோ குணத்தால் மோகம்.

**மனம் ஒருமிக்கும் (மனோலய) வழி**

17. ''மனம் சத்துவ சொரூபம்'' அதாவது மனத்தின் உண்மையான தன்மை சத்துவமே. மற்ற இரண்டும் வந்து கலந்தன; நீக்கினால் நீங்கி விடும். தன் சத்துவ குணத்தை விடாது கடைப்பிடிக்கும் பொழுது ஏனைய இரண்டும் நசித்துப் போகும். அங்ஙனம் நசிக்கவே பரிணாமம் சலனம் என்பனவும் மனத்தினின்று போய் விடுகின்றன. அப்பொழுது உனது மனம் களங்கம் இன்றித் தெளிந்த ஆகாயம் போல் தன் இயற்கை வடிவாக விளங்கும் பிரம்மத்தில் ஒன்றாய்( ஏக ரசமாய்) நிருவிகற்ப சமாதியில் அசைவற்று நிற்கிறது.

* **நிருவிகற்ப சமாதி** : அறிபவன் அறிவு அறி பொருள் என்ற வேறுபாடற்று ஒன்றுதல் **சவிகற்ப சமாதி** : அவை மூன்றும் இருக்கப் பேரின்பம் நுகரும நிலை.

**கண்ணாடி முன் கண்ணாடி போல**

18. ''களங்கம் இல்லாத ஒரு கண்ணாடியின் முன் களங்கம் இல்லாத இன்னொரு கண்ணாடியைக் காட்டும் பொழுது அழுக்கற்ற அக் கண்ணாடி மயமாய் வேறுபாடு இன்றி நிருவிகற்பம் ஆனாற் போல அளவிடற்கு இயலா, பரந்த உண்மை யறிவு இன்பம் ஆன பிரம்மத்துடன் கரைந்த மனம் பிரம்மமாகவே தெளிந்து விளங்கி நிற்கிறது. அப் பொழுது உலகமும் இல்லை; உலைவும் (சலனமும்) இல்லை. நீ ஐயம் விடுக.

**மனம் இறக்கவில்லையே**

19. **மாணாக்கன்** : ''வினைப் பயன்களை எத்தகை யோரும் புசித்தே தீர வேண்டும். அங்ஙனம் இருக்க, இரண்டற்றுப் பிரம்மமே யாகி மனமானது இறந்துவிடில்

சீவன்முத்தர் உடல் இருக்கு மட்டும் முன்வினைப் பயன்களை யாதினால் அனுபவிப்பார்கள்? போகங் களைப் புசித்துத்தானே தொலைக்க வேண்டும்? புசிப்பதா னால் மனம்தானும் இறக்க வில்லையே! மனம் இறக்க வில்லை என்றால் முத்தர் என்று சொல்ல குடியாதே?

மயக்கமான இந்த ஐயம் தெளியக் குருவே, நன்கு உரைத்தருள வேண்டும். ஐயத்தின் நீங்கித் தெளிந் தாலன்றோ முத்தி நிலை?''

**மன நாசம் இருவகை**

20. **ஆசான்** : ''மாணாக்கனே, மனநாசம் இரு வகைப் படும். ஒன்று உருவநாசம்-மனம் தன் வடிவினின்றும் அழிதல். மற்றொன்று அருவ நாசம்-மனமே அழிந்து போதல்.

இவற்றுள் முந்தியது, வாழும் போதே விடுதலை பெற்றவரிடம் (சீவன் முத்தரிடம்) உண்டாகும். பின்னது உடல் சுமையற்ற ஞானிகளிடம் (விதேக முத்தரிடம்) காணப்படும்.

தனக்கு இயல்பான சத்துவத்தில் மனம் இருக்க, ஏனைய இரு குணமும் நீங்குதல் மனத்தின் உருவ நாசமாகும். தீது இலா மைந்தனே, சத்துவமானது நுண் உடப்பு அழியும் பொழுது அழியும். அது அருவ நாசம், மனம் அழிதல் எனப்படும்.

* மனப் உருவநாசம் உறின் சீவன் முத்தி. அருவநாசம் உறின் விதேக முத்தி ஆகும்.

21. ''தூயதான சத்துவம் மனத்தின்முதற்காரணம். மனத்தை விட்டுத் துகளும் (இராசதமும்) இருளும் (தாமதமும்) போகுமானால் மனம் என்ற சொல்லும் ஒழியும். அந்த நிலையில் ஞானியர், வந்த உணவை உண்பர். சென்றது வருவது பற்றி எண்ணார். இன்ப துன்பம் கொள்ளார். வினை செய்வோராக அகந்தை கொள்ளார் (அகருத்தர்). மனத் தொழில்களையும் நனவு கனவு கனவற்ற ஆழ்துயில் என்ற மூன்று நிலைகளையும் காணும் சாட்சியாயிருப்பர்,

முத்தராயிருப்பர். முன்வினைப் பயனைப் புசித்தும் வருவர். அதற்குத் தடையில்லை ஆகவே நின் ஐயம் தவிர்க.

22. ''செயல் புரி நேரமெல்லாம் அமைதி (சமாதி) என்றால் செயல் என்பது மன அலைச்சலைக் குறிக்குமே. அந்த அலைவினால் அமைதி நழுவுமே என்று நீ வினவலாம். அதற்கு ஓர் உவமை கூறுவேன் ஆசை கொண்டு புதிதாகப் பர புருடனுடன் கூடி நயந்து சுகம் அனுப வித்த ஒரு பெண்ணின் மனமானது, தவமான இல் வாழ்க்கைக்கு உரிய செயல்களை அவள் செய்த போதும் முன் தழுவி அனுபவித்த விடயானந்த சுகத்தை விடாது அது போலச் சீவன் முத்தர் (உணவு உண்ணல் முதலிய) செயல் வேளையிலும் சீவ-பிரம்ம ஐக்கியத்தில் உறுதி யாக இருப்பர்.''

## விடுதலை அடைந்தோனுக்குச் செயல் நுகர்ச்சி இல்லை எனல்

23. **மாணாக்கன்** : ''உடல் மூன்றின் (கரு, பரு, நுண் உடல்கள் ஆகிய மூன்றின்) ஆதிக்கம் அற்றவனாக, செயல் புரிகின்றோம் என்ற நினைப்பு அற்று, தனித் தன்மை (சீவ பாவம்) இறந்து தன்னை மெய்ப் பொருளாக உணர்ந்தவன் (சீவன் முத்தன்) போகத்தை நுகர்கிறான் என்றால் அவன் செயல் புரிவோன் (கருத்தன்) ஆகி விடுகிறான் அல்லவா? மெய்ப்பொருளே தானாக உள்ள, விடுதலை பெற்றோர்க்கு முன்வினைப் பயனாம் செயல் நுகர்ச்சி எப்படி நிகழும்? துன்பம் யாவும் நீக்கும் ஆசானே. இதனை விளக்குதல் வேண்டும்.''

**ஆசான்** : ''உயர் வினைமுதல்வன், உயர் நுகர் வாளன், உயர் துறவாளன் (மா கர்த்தன் மா போகி மா தியாகி) இவர்களின் பொருமை கூறுவன் கேட்பாயாக,

## உயர் வினைமுதல்வன் இயல்பு

24. ''இயங்குதலோ இயக்குதலோ இன்றி ஒரு காந்த மலை இருக்கிறது அது சும்மா இருந்தாலும் அதன்முன் இரும்புத் துண்டுகள் அசைகின்றன. அது போல் ஒன்றைச் செய்தலும் செய்வித்தலும் இன்றி இருக்கின்ற என்முன் சடமாக உள்ள உலகம் எல்லாம் தத்தம் வேலை செய்து கொண்டு இருக்கிறது, உலகின் செயல் செயலின்மை என்ற யாவற்றுக்கும் கதிரோன் சாட்சியாக இருத்தல் போல உடம்புடன் கூடிய பொறிகள் உண்டாகும் செயல்கள் யாவும் அடங்கித் தன்வயமாக மெய்ப் பொருளோடு கலந்திருக்கும் பேரமைதி (சமாதி)க்கும் சான்றாக நான் இருக்கிறேன் என்ற அழுத்தமான அனுபவ நிலையினனே எங்கும் பரவியுள்ள உயர் வினைமுதல்வன்-மாகர்த்தன்—ஆவான்.

## உயர் நுகர்வாளன், உயர் துறவாளன் இயல்பு

25 கிடைத்தது எதுவோ, அது சுவையுடைத்தா இல்லையா, தூயதா இல்லையா, பத்தியமானதா இல்லையா என்ற வேறுபாடு காணாமல் பொறுமையுடன் தனக்கு எதிர்ப் பட்டதை எரிக்கும் காட்டுத் தீப் போல உணவு புசிப் போன் உயர் நுகர்வாளன் (மா போகி) ஆவான். சிறியதோ பெரியதோ, தன்னதோ பிறரதோ, நல்லதோ கெட்டதோ எதனை அடைந்தாலும் அடுத்ததன் நிறம் பற்றாப் படிகம் போல் மனம் பற்றின்றி நிற்பவனே உயர் துறவாளன்(மா தியாகி) ஆவான். ''விரதம் இம் மூன்றும் உடையவரே வீடுள்ளாரே'' அதாவது இம் மூன்று பண்புகளும் உடையவரே விடுதலை பெற்ற ஞானியராவர்.''

## ஞானி, செய்கை முடிந்தவரா?

26. **மாணாக்கன்** : ''நைக்கும் துன்பம் அகற்றிய குருவே, உடம்போடு கூடி நின்று முன்வினை (பிராரப்த கன்மம்) கொடுக்கின்றவாறு தாம் வாழ்ந்துகொண்டும் அத்துடன் கரும நெறி நிற்போருக்கு உறுதுணையாம் தொழில்

செய்துகொண்டும் இருக்கின்ற ஞானி, செய்யும் செய்கை முடிந்தவர் (கிருத கிருத்தியன்) என்று எப்படிச் சொல்ல முடியும், நன்கு தெரிவிக்க வேண்டும் குருவே''

27. **ஆசான்** : ''ஆடவர் செய்யும் தொழில் மூன்று வகைப் படும். அறியாமை வசத்தில் இருந்து போகத்தில் விருப்பும் யான் எனது என்னும் செருக்கும் உடையவர்க்கு இம்மை மறுமைகளுக்கான உழவு வாணிபம் வேள்வி போன்ற தொழில்கள் உண்டு. வீடு அணுகுவோம் என்ற இச்சையுள்ளார்க்கு மறைநூல் ஓதல், கேட்டல் முதலியன உண்டு. பரிபூரணம் ஆனவர்க்கு இம்மை மறுமைத் தொழில்களால் யாதொரு பயனும் இல்லை, ஆகவே அந்த ஞானிகள், செய்யும் செய்கை முடிந்தவர் (கிருத கிருத்தியன்) என்று அறிக''

28. **மாணாக்கன்** : ''ஆசிரிய முடிமணியே, கேட்டருள் வீர். சீவன் முத்தர் செய்கை முடிந்தவர் என்பது மெய்யே. மறுமை இம்மைத் தொடர்புடைய விருப்புகள் கொண்ட அறிவாளிகள் தாம் மெய்ஞ்ஞானப் பயிற்சி செய்வர். அவற்றினின்றும் நீங்கியோர் அந்த இம்மை மறுமைக் கான தொழில்களை விரும்புவார்களோ? விரும்பமாட்டார் கள். ஆயினும் மனம் ஆன்ம வடிவில் நிலைபெறும் பொருட்டுக் கேட்டல் நினைத்தல் தெளிதல் என்பன செயல்வேண்டும் அல்லவா?''

### கேட்டல் முதலியன செய்வோர் செய்யாதோர்

29. **ஆசான்** : ''அறிவாகி விளங்கும் மைந்தனே, நான் கூறுவது கேள். அறிவு மயமான மெய்ப்பொருளே தன் உண்மை வடிவு என்று அறியாதார் கேட்டல் (சிரவணம்) செய்தல் வேண்டும். கேட்ட பொருளின் உறுதிப்பாட்டில் ஐயமுள்ளோர் தளர்வு அற்று இருக்கச் சிந்தித்தல் (மனனம்) செய்தலாகிய முயற்சி செய்வர். உடம்பே ஆன்மா, உலகே மெய் என்று ஒன்றை ஒன்றாக அறி யும் மாறுபாடு உற்றவர்கள் தெளிதலை (நிதித்தியாச னம்) மேற்கொண்டு முயல வேண்டும். ஆனால் அறி வொளியாய், அலகிலா நிறைவாய் உள்ள ஞானியர் மேற்கொளத் தக்க (மூவகைப்) பயிற்சி யாதுமில்லை.

**இருந்தேன் போனேன் என்று ஞானி சொல்லலாமா?**

30. **மாணாக்கன்** : ''ஐயனே, மெய் யுணர்ந்த ஞானிகளும் அறியாதார் போல நான் அதைச் செய்தேன் இதைக் கண்டேன் உண்டேன் சென்றேன் என்று கூறுகின்றனரே, அப்படிக் கூறலாமா? பொய்யும் திரிபும் உடைய அறிவுகளினின்று அவர்கள் விடுபட்டார்கள் என்று சொன்னீர்களே, அங்ஙனம் இருக்க அவர்கள் இங்ஙனம் கூறுதல் மெய்ப்பொருள் உணர்ந்தமைக்கு ஒவ்வாதே? இது பற்றித் தாங்கள் விளக்குதல் வேணடும்.''

31. **ஆசான்** : ''நனவு இயக்கம் ஒழிந்த கனவில் கண்ட அனுபவங்களை ஒருவன் முன் வாசனையால் விழிப்பு நிலையில் உரைப்பான். அவ்வாறே தன்னை உணர்ந்த ஞானி, நான் செய்கிறேன் பார்த்தேன் உண்டேன் சென்றேன் என்று முன் வாசனையால் (நினைவு கூர்ந்து) கூறினாலும் அவன் நான் என்னும் தன்மையால் கட்டுண்டோன் அல்லன்.

[வாழ்வாங்கு வாழ்வதனால்] தேவனாக இருப்பவனும் இறந்து சாம்பலாகும் அளவும் மானிடன் என்றே பிறரால் விளம்பப் படுவான். மெய் வடிவாகும பிரம்மம் ஆகவே விளங்கும் சீவன் முத்தனும் உடல் நீங்கும் அளவும் மற்றையோரால் சீவன் ஏன்றே சொல்லப் படுவான். அவன் மற்றையோர் போன்றே நான் செய்கிறேன் பார்த்தேன் உண்டேன் என்றாற் போன்று உரைத்தலும் தொடர்ந்தே வரும்.''

* முன்வாசனையால் சிதாபாசனாகத் தன்னைக் கூறிக் கொள்ளினும் அவனுக்கு அகந்தை முடிச்சு இன்மையின் சிதாபாசன் ஆகான்.

32. **மாணாக்கன்** : ''அப்படி யானால் ஆசானே! காணப் படும் பொருள் எல்லாம் பொய் என்றாலும் அவற்றோடு தொடர்பு உடைய செயல்கள் எல்லாம் துன்பம் தருவன அல்லவா? அவை பேரின்பம் தருமா? செயல்கள் நீங்கி

னால் அல்லவா நல்லது? அவை நீங்கும் பொருட்டு ஒருமுக நிலை வேண்டும் அல்லவா? தன்மயம் ஆகும் சமாதி பயில்வானாகில் அவன், செய்கை தவிர்ந்தோன் என்று உரைப்பது எப்படி?''

33. **ஆசான்** : ''உண்மையை உசாவி அறியும் மைந்தனே! முன்வினை முடிந்தால் செயல்களும் முடிவுறும். வேறு அற்ற சாமதியும், நான் கண்டேன் சென்றேன் என்றாற் போன்ற உலகியற் செயல்களும் மனத்தின் செயல் அல்லவா? யாவும் கடந்த (துரிய) நிலையில் பரம் பொருளே ஆனவர்கள் தாமாக இருப்பதன்றி வேறு தொழில் செய்வதில்லை ஆனால் அரிய சமாதி நிலைகளைப் பயிற்சி செய்வோன் செயற்கை முடிந்தோன் (ஆரூடன்) அல்லன்.''

### சீவன்முத்தர் பயிற்சிகள் செய்கின்றனரே?

34. **மாணாக்கன்** : ''உத்தம குருவே, ஆன்மானுபவம் உள்ளோராக, செய்கை இல்லோராக இருக்கும் சிலர் மனம் அடங்கற்கான தியானம் முதலிய பயிற்சிகள் செய்கினறனரே, அது என்ன காரணத்தால்?''
**ஆசான்** : ''உயிரோடு இருக்கும் போதே விடுதலை பெற்றவராகிய மெய்யறிவினார், பலப்பல செயல் உடையவராய் இருப்பர் என்பதை முன்பே கூறினேன். முன்னை வினைப் பிரிவு எப்படியோ அப்படியே பல செயல்புரிவர் என்பதே நான் முன்னர்ச் சொன்ன செய்தி.''

### ஞானிகளின் செய்கை ஒப்புரவு கருதியது

35. **ஆசான்** : ''நல்லோனே, கேட்பாயாக? ''உலகு உபகாரம ஞானிகள் விவகாரம்''. அதாவது ஞானிகளின் செய்கைகள் யாவும் ஒப்புரவு கருதியனவே. அது தவிர அச் செய்கைகளால் அவர்க்கு ஒரு பேறும் இல்லை, பிணியும் இல்லை. படைத்தல் முதலிய தொழிலால் வரும் நன்மை தீமைகளை, அனைத்துயிர்க்கும் அருள் செய்யும் ஈசன் அடைவதில்லை. அவ்வாறே ஞானிகளும்

தம் செயல்களால் வரும் புண்ணிய பாவங்களை அனுப விப்பதில்லை.''

**ஈசனும் ஞானியும் எப்படிச் சமானம் ஆவர்?**

36. **மாணாக்கன்** : ''அருவமாகிப் பின் மாயையால் ஈசனாகி உருவம் கொண்டு என் முன் எழுந்தருளியுள்ள ஆசானே, ஈசனும் ஞானியும் சமானம் என்றீர்களே, அஃது எப்படி?''

**ஆசான்** : ''ஈசனும் ஞானியும் யான் எனது என்பவற்றி னின்று விடுபட்டு இருப்பதனால் ஒப்பாக உள்ளனர். (பிரம்மத்தை அறிந்தான் பிரம்மமே ஆகிறான் என்ற மறை மொழிப்படி) ஞானி ஈசனுக்கு ஒப்பாதலோடு ஈசனேயாகவும் எண்ணற்ற உயிர்களும் உலகங்களும் ஆகவும் உள்ளான்.''

37. **மாணாக்கன்** : ''நான் வினவிய பொருள் எல்லாம் உரைத்தருளும் ஆசானே, ஞானியானவன் எல்லாச் சீவர்களாகவும் உள்ளான் என்கிறீர்கள். அவ்வாறாயின் ஞானி மட்டும் விடுதலை எய்திவிட எல்லாச் சீவரும் விடுதலை (முத்தி) பெறாமல் இருப்பது ஏன்? எல்லாச் சீவரும் இவனின் வேறாக உள்ளனர் எனில் இவன், உயிர் உலகு ஈசனாக இருக்கிறான் என்பது எவ்வாறு பொருந்தும்?''

38. **ஆசான்** : ''நான் என்னும் ஆன்மாவானது முழுமை யான ஒன்றாக இருப்பது நான் என்னும் மனம் உடையவை பல ஆகலால் சீவர்களும் பலராக உள்ளனர். உலகு அனைத்துக்கும் குளிர்மை நல்கும் மதி ஒன்று தான், அது உலகின் கண் உள்ள ஏரி குளம் பள்ளம் சால் சட்டி குடம் என்ற உபாதிகள் பலவற்றில் பிரதி பலிப்பதால் மதிகளும் எண்ணற்றனவாக உள்ளன.

39. ''சட்டி குடம் முதலியவற்றில் ஒன்று உடைபட்டால் அதனுள் இருந்த நிழல்சந்திரன் இப்போது இல்லை. அது, காரணச் சந்திரனோடு ஒன்றிவிடுகிறது. மற்றைய ஏரி குளம் சட்டி பானைச் சந்திரர்கள் அப்படியே

இருக்கின்றனர். அதே போன்று தன்னைக் கட்டி வைத்திருக்கும் அறியாமை உபாதியினின்று விடுபட்ட சீவன் தனக்கு ஆதாரமான ஆன்ம வடிவில் ஐக்கியம் ஆகின்றது. அறியாமை என்ற கட்டு (உபாதி) நீங்காத சீவர்கள் ஆன்மப் பெருநிலையில் கைவல்லியம் (ஐக்கியம்) ஆகார்.''

## ஈசனின் இயல்புகள் ஞானிக்கு உளவா?

40. மாணாக்கன் : ''தவம் மிக்க ஆசானே, ஈசுவரனும் ஞானியும் ஒருநிகர் என்றீர்கள். அயன் மால் உருத்திரன் ஆகியோர் அகிலத்தையும் ஆக்கல் அளித்தல் அழித்தல் செய்வர். பிறரது நினைப்புகளையும் முக்கால நிலைமைகளையும் அவர்கள் அறிகுவர். எங்கும் பரந்து இருப்போர் அன்னோர். ஞானிக்கு அந்த இயல்புகளுள் ஒரு சிறிதும் காண்கிலேனே!''

41. **ஆசான்** : ''மைந்தா, தடத்து நீர், பெரிய தீவட்டி ஒளி என்பன ஊர் முழுமைக்கு உதவும்; குடத்து நீர், விளக்கு ஒளி என்பன ஒரு குடும்பத்துக்கு மட்டும் உதவும்; ''ஞானியும் ஈசனும் அறிவினால் பிரிவு இல்லை.'' அவர்கள் இருவரும் மெய்யறிவினால் வேறுபட்டோர் அல்லர், சத்துவ குண (மாயை) இரசோ குண (அவித்தை) இயல்புகளால் முறையே ஈசனும் ஞானியும் குணங்களால் வேற்றுமை உடையர்.

* ஈசனும் ஞானியும் குணங்களால் பேதம் உடையர்; அறிவினால் பேதம் உடையர் அல்லர்.

## மும் மூர்த்திகளும் ஞானிகளும் ஒருநிகர்

42. ''அதிகாரத்தால் அரசனும், ஆற்றலால் சித்தரும் மாந்தருக்குள்ளே மேல் நிலையில் இருப்பினும் மானிடத் தன்மையால் ஒப்பானவரே. அவ்வாறே, திருமால் முதலிய தேவர்கள் மாயையில் வல்லவராகவும் அணிமா முதலிய எண்வகைத் தனியாற்றல் பெற்ற மாதவத்தோர் ஆகவும் உள்ளனர். புவியில் உள்ள ஞானியர்க்கு

அவை இல்லை. ஆகவே அவர்கள் குறைந்தோர் போலக் காணப் படினும் ''பிரம்ம பாவனையால் இவர் அவர் எனும் பேதம் ஒன்றில்லை''. மெய்ப்பொருட் காட்சியில் மும் மூர்த்திகட்கும் ஞானிகட்கும் வேறுபாடு கிடையாது, ஒப்பானவர்களே.''

* **எண்வகைத் தனி ஆற்றல்கள் : அட்ட சித்திகள்** : I. பரமாணுப் போல் உடம்பை ஆக்கும் அணிமா. II. உடம்பை மிகப் பெரிதாக்கும் மகிமா. III. மிக எண்மை உடையதைத் திண்மையாக்கும் கரிமா. IV. மிகத் திண்ணியதை மிக எண்மையாக்கும் இலகிமா V. அனைத்தும் முன்னிற்க வைக்கும் பிராப்தி VI. நினைத்தபடி முடிக்கும் பிரகாமியம். VII. பூத பௌதிகங்களைப் படைத்துக் காத்து அழிக்கும் தனித் திறமாம் ஈசித்துவம் VIII. பூத பௌதிகங்களை வசம் செய்யும் வசித்துவம்.

43. **மாணாக்கன்** : ''எனக்கு விடுதலை அளித்த மெய் யாசானே, வையத்து முனிவர் பலர் அணிமா முதலிய எண் வகை ஆற்றல் பெற்றிருத்தல் அறிகிறோம். அவ்வாறு இருக்க, அந்த ஆற்றலாகிய செல்வம் ஈசற்கே உரியது என்கிறீர்கள். எனக்குத் தெளிவு உண்டாக உரைத்தல் வேண்டும்.''

**ஆசான்** : ''அம் முனிவரர் இறைவனை நாடி மன மொழி மெய்களால் செய்த வழிபாட்டால், நோன்பு களால், யோகப் பயிற்சிகளால் அவர்கட்கு அவை வாய்த்தன என்று அறிவாயாக.''

**இக் காலத்து ஞானியர்க்குச் சித்திகள் வாராவோ?**

44. **மாணாக்கன்** ''ஆசானாக எழுந்தருளியிருக்கும் சிவ வடிவே, இந்த ஆற்றல்களும் விடுதலையும் ஆகிய இரண்டும் தவம் உடையார் அடைகுவர் என்றால் அவர்களைப் போன்று இக்காலத்து உள்ள ஞானியர் யாவரும் அடைகுவர் அல்லவா? முன்னைத் தவஞானியர்

எண்வகைச் சித்திகளோடு விடுதலை (முத்தி)யும் எய்தினர் என்பதை நூல்களால் காண்கிறோம். இக் காலத்து இருப்போரை ஞானியர் என்று கூறின் அவர் கட்கு அணிமா முதலாம் அந்த ஆற்றல்கள் இல்லாதது ஏன்?''

## முன்னைநாட் பெரியோர் பெற்ற பேறு

45. **ஆசான் :** ''மைந்தனே, தவம் இரு வகை . வேண்டிய ஒன்றை அடைதற்கான தவம் ஒன்று. வேண்டுதல் எதுவுமின்றிச் செய்வதான தவம் மற்றொன்று.

பயன் நோக்கிய தவம் சித்திகள் கொடுக்கும்; பயன் நோக்காத் தவம் மெய்யுணர்வு கொடுக்கும். இவ்விரண்டில் ஒவ்வொன்றும் தன்தன் பயனைக் கொடுக்கும். இது தீர்வை (முறை). முன்னை நாளில் பெரியோர் இரண்டிலும் முயன்றனர், இரண்டிலும் பேறு பெற்றனர்.

## சித்திகள் முத்தியைத் தரமாட்டா

46. ''பழியிலா மகனே, சனகன் மாவலி பகீரதன் முதலானோர் மெய்யுணர்வைப் பயிற்சி செய்து விடுதலை பெற்றனரே அல்லாமல் அணிமா முதலிய ஆற்றல்களுக்கு முயற்சி செய்யவில்லை. முனிவர் சிலர் ''இனிய சித்தியே விரும்பினார், சிலர் இரண்டையும் முயன்றார்கள். சித்திகள் விநோத மாத்திரம் தரும், முத்தியைத் தாரா''. சித்திகள் பொழுதுபோக்கும் பிரமிப்பும் தரும் விளையாட்டுக்கள் ஆகும். அவை விடுதலை நல்கா.

* ஆகவே அந்த ஆற்றல்கள் பெற்றோர் அவற்றால் பயனில்லை என்று பின்னர் உணர்ந்து ஞான நன் முயற்சியால் வீடுபேறு எய்தினர்.

## சித்திகளுக்காகச் சிலர் உடலை வருத்தியது ஏன்?

47. **மாணாக்கன்** : (ஐக்கியம் அளிக்கும் இரண்டற்ற அறிவாகிய) யோக ஞானமே விடுதலை தரும் என்றால்

அதனை விட்டுச் சிற்சில சீவன்முத்தர் சித்திகளை விரும்பி உடல் வருந்தினர். அஃது ஏன்?''

**ஆசான்** : ''இன்ப துன்ப நுகர்ச்சி வடிவாக வரும் முன்வினைகள் அவற்றைப் புசித்தால் தான் நசித்து ஏகும். ஆகவே அவர்கள் பெற்ற அணிமா முதலிய திறங்கள் அவர்களின் முன்வினைப் பயனாகும் என்று அறிவாயாக.''

## அறிவு மொழிகள் அமுதமாக உள்ளன

48 **மாணாக்கன்** :''என் மனம் ஐயமற்று அசையாது உறுதி பெற்றிருக்குமாறு நிறைந்த மறைமொழியாலும் யுக்தி உரையாலும் விடையளித்த ஆசானே, என் மனத்துக்கண் உள்ள மயக்கம் நீங்கித் தூய்மையும் தெளிவும் அடைந்தேன். 'துலக்கமான கண்ணாடியை மேன்மேலும் துலக்கினால் குற்றம் அல்லவே.' என் அலக்கண் மாற்றிய தேவனே, தங்களின் அறிவு மொழிகள் எனக்கு அமுதமாக உள்ளன. புசிக்கப் புசிக்கத் தெவிட்டவே இல்லை; மேலும் கேட்க விழைகிறேன்.

* **மயக்கு ஐந்து வகை** : I. வேறுபாட்டு மயக்கு (பேதப் பிராந்தி); II. வினை முதல் நுகர்முதல் மயக்கு (கிருத்திருத்துவ போக் திருத்துவப் பிராந்தி); III. ஒட்டுதல் மயக்கு (சங்கப் பிராந்தி); IV. மாறுபாட்டு மயக்கு (விகாரப் பிராந்தி); V. உலகு உண்மை என்ற மயக்கு (ஜகத் சத்தியத்துவப் பிரா ந்தி.)

## முன் வினையும் ஞான நெருப்பும் : ஒரு கேள்வி

49. ''கருணையினால் என்னை ஆளும் ஆசானே, ஐயனே, முன்செய்த வினைகள் தம் பயனைத் தந்து அன்றி நீங்கா என்று மறை நூல் கூறுகின்றது. பிறவி பல எடுக்கக் காரணமான பழவினைகள் (சஞ்சித கன்மம்) தூய ஞானத் தீயால் வெந்து சாம்பர் ஆகும் என்றும் மறைநூல் மொழிகின்றது. மறைநூல்கள் பொய் கூற மாட்டா. ஆகலின் (முரணாகத் தோன்றும்) இவ் விரு கூற்றுள் எது உண்மை என்று எவ்வாறு துணிவேன்?''

## தொடக்க உரையும் முடிப்பு உரையும்

50. **ஆசான்**: ''சீவர்களுக்குள் உள்ள வேற்றுமை ஏராளம். மனத்தில் உள்ள காமம், உறுதி முதலியவற்றாலும் அவர்களின் செய்கைகளாலும் வேற்றுமைகள் எண்ணிறந்து இருக்கின்றன. ஆகவே அவர்களுக்கு நன்மை தீமைகள் நடக்கற்பாலன நடக்கும்.

பூத்துக் காய்த்துக் கனிதரும் மரங்கள் போல் முறையே அனுபவித்தால் அன்றிச் செய்த வினைகள் விடா என்ற உண்மையை முதற் கூறிலும் பழவினைகள் வேகுமாறு ஞானத் தீ சுடும் என்ற உண்மையை முடிவுக் கூறிலும் வைத்துச் **சீவர்களின் பக்குவத்திற்கு ஏற்பத்** தன் முப்பகுதிகளால் வேதம் நம்மைக் காக்கு முகத்தால் கூறுகின்றது.

* **வேதத்தின் மூன்று பகுதிகள்** : கர்ம காண்டம், பக்திக் காண்டம், ஞான காண்டம் என்பன.

முதற் கூறு-பூர்வ பட்சம்; முடிவுக்கூறு-சித்தாந்தம்.

## பிறப்பை அழிப்பது ஞானத் தீ மட்டுமே

51. ''கொடிய பாவிகள் நரகத் துன்பம் அடைவது உறுதி என்றாலும் கொடை மந்திரம் நோன்பு வேள்வி என்று செய்யப்படும் கழுவாய்களால் அவர்களின் பாவங்கள் தவிரும் என்று நூல்கள் உரைப்பது பொய்யாகுமோ? ஆகாது. அவ்வாறே அளவிறந்த பிறவிகட்குக் காரணமாம் முந்தைப் பழவினைகள் (சஞ்சித கன்மம்) எவ்வளவு இருப்பினும் ஞானத் தீ அவற்றை எரித்துவிடும் என்னும் வேத முடிநிலை மொழியை நம்பி ஒழுகினால் விடுதலை ஒருதலையாக (நிச்சயமாக) உண்டு.

* ஆகவே முன்னதை நீக்கி முடிவுக் கொள்கையை முழுமையாய் மேற்கொண்டு அறிவைக் கொளுத்தச் சஞ்சிதம் கெடும் என்பதாம்.

## கருமநெறி என்ற குழியில் வீழ்கின்றனரே

52. **மாணாக்கன்** : "என் நெஞ்சமே கோயிலாக் கொண்டு எப்போதும் எழுந்தருளியிருக்கும் ஆசிரியப் பெருமானே, தாங்கள் நவிலுதல் போல் மெய்யறிவானது பழவினைத் தொகுப்பின் வேராம் அறியாமையை அழித்துவிடும்; தன்மயம் ஆகும் விடுதலையை நல்கும் அது. அங்ஙனம் இருக்க விரிந்த புலமை உடைய திறமையாளரும் அதனை அறியாது செயல்நெறி (கன்ம மார்க்கம்) என்ற குழியில் வீழ்ந்து அழிகின்றனரே, அதன் காரணத்தைத் தாங்கள் உரைத்தல் வேண்டும்.''

## புற நாட்டமே கருமநெறிச் செலக் காரணம்

53. **ஆசான்** : ''யாவும் அழியக் கூடியனவாக இருக்க, உள் நாட்டம் உடையோர் அழிவற்றதாம் **அது** (மெய்ப் பொருள்) எனும் நிலை அடையப் பெறுவர். வழி நடப்போர் பராமுகமாகச் சென்றால் கண் திறந்திருப் பினும் பள்ளத்தில் வீழ்வர். அது போன்றே புற நாட்டம் (பகிர் முகம்) தமக்குப் பயனாகக் கருதிப் பொருள்களில் பழக்கம் உடையராகச் சுவர்க்க இன்பம் முதலியவற்றில் விருப்பு வைத்து முடிவற்றதான பிறவிக் கடலில் வீழ்குவர் மேலாம் வீடுபேறு (பர கதி) அடைய மாட்டார்.''

* எனவே, புற நாட்டமே கருமங்களிற் புகக் காரணம் என்று அறிக.

உடல் - இந்திரியம் - தான் - என்றும், மனைவி மக்கள் - தன - என்றும் பேதமாய்ப் பார்ப்பது புற நாட்டம்.

## நலம் தீங்கு செய்ய வைப்போன் ஈசன் அல்லவா?

54. **மாணாக்கன்** : ''துறவாற் சிறந்த ஆசிரியப் பெருந் தகையே, சிறந்த நன்மையும் தீமையும் செய்ய வைப் போன் ஈசன் அல்லவா? அங்ஙனம் இருக்க (சூத்திரப் பாவை போல் சுதந்திரம் இன்றி)ப் பிறந்த சீவர்கள்

என்ன செய்வார்கள், அவர்கள் மேல் குற்றம் கூற என்ன இருக்கிறது?''

**ஆசான்** : ''மறை கூறும் பொருள் நிலையைப் புரிந்து கொள்ளாத மூடர் கூறும் மயக்க வாக்கு அது காண், மைந்தனே.

**ஈசன் படைப்பு - சீவன் படைப்பு**

55. ''திகழும் ஈசனார் படைப்பும் தனிச் சீவர்களின் படைப்பும் வெவ்வேறு இயல்பினவாகும். இயங்கு திணை நிலைத் திணைப் பொருள்கள் **ஈசன் படைப்பாகும்.** இனவ பொதுவானனவ.

உடம்பில் அந்தக்கரணப் பரிணாமமாகிய 'யான்' 'எனது' என்றும் அகப்புறச் செருக்கு, காமம், வெகுளி கடும்பற்றுள்ளம், மானம், உவகை மதம் என்றாற் போல்வன **சீவர்களின் படைப்பு** இவை மனக் கற்பனையா யிருத்தலின் அவரவர்க்கும் தனித் தனியான வை. இவை ஈசனார் படைப்பு அல்ல.

**ஈசன் படைப்பு விடுதலைச் சாதனம்; சீவன் படைப்பு பிறப்பின் சாதனம்**

56. ''முத் தொழில் நிகழ்த்தும் ஈசனின் படைப்புகள் சீவர் யாவர்க்கும் விடுதலை அடைதற்கான சாதனம் ஆகும். ஆனால் சீவர்களின் படைப்புக்களோ அவர்களைப் பிணித்து மீட்டுமீட்டும் பிறக்க வைக்கும் சாதனம் ஆகும்.

உலகப் படைப்பு யாவும் முடிவுக்கு வரலாகும் காலத்தும் உயிர்களின் பிறப்பு நீங்காது. ஆனால் சீவர் களின் படைப்பாகிய காமம் கோபம் முதலிய கடும் உணர்ச்சிகள் முடிவுக்கு வரும்போது அவை கொடிய பிறவிப் பிணிக்கே முடிவாக அமையும்.

**பந்தமும் மயக்கும் சீவர்களின் படைப்பே**

57. ''ஈசன் படைப்பான பிரபஞ்சம், ஊழி முடிவில் அவரது நினைப்பின்படி அழியும். அங்ஙனம் அழிகின்ற காலத்தும்

பிறப்பினை எவர்தாம் ஒழிந்தார்? ஆயின், சீவர் சிலர் தேயம் காலம் தேகம் முதலிய ஈசுவரப் படைப்புகள் இருக்கும் போதே மாறுபட்ட படைப்பான காமம் கோபம் முதலியவற்றை வேதம் ஆசான் என்ற அறிவுத் துணைகளால் அழித்து, உயிரோடே விடுதலை அடைகிறார்கள். இப்படி யிருத்தலால், பந்தமும் மயக்கும் சீவர்களின் சொந்தப் படைப்பே அல்லாது ஈசன் உடையன அல்ல.

## இரண்டு பறவைகள்

58. ''அசுவத்தம் (அரசு) என்றொரு (விந்தையான) மரம். அதில் (அதாவது உடம்பில்) இரண்டு பறவைகள் வாழ்கின்றன. ஒன்று (இன்பம் விழையும் சீவன்) மரத்தின் கனிகளை நன்றாக இருக்கிறது சுவையாக இருக்கிறது என்று தின்கிறது. பிறிதொன்றாக, மதிப்பிற்கு உரிய பறவை (ஈசன்) கனியை நோக்கிய அளவுடனே தின்னாது இருக்கிறது

இந்தப் பறவைகளைக் குறிப்புப் பொருளாகக் கொண்டு உபநிடதம் (முண்டக உபநிடதம்) சீவனையும் ஈசனையும் பாகுபடுத்தி உரைத்த வகையை அறிந்து கொள்வாயாக.

* எதிரியின் வீட்டுக்கு உண்ணச் சென்ற ஒருவனை நோக்கி அவன் அன்பன், நஞ்சைத் தின் என்னும் பொழுது அதில் நஞ்சைத் தின்க என்பது நேர்பொருள்; தின்ன வேண்டாம் என்பது குறிப்புப் பொருள். அவ்வாறே மரம்-இரு பறவை-என்பன நேர் பொருளாக மரம் பறவைகளையும் குறிப்புப் பொருளாக உடம்பு, ஈசுவர சீவர்களையும் காட்டுகின்றன.

## பகை ஆறு - ஈசன் செயல் அன்று

59. ''இந்தச் சீவனால் உண்டாகும் காமம் முதலாம் பகை ஆறும் இவன் செயலால் தான் உண்டாகுமே அன்றி ஈசன் செயலால் உண்டாகின்றன என்பது அறியாமை. அங்ஙனம் நம்புவோர் கீழ்நிலை (அதோ கதி அடை

குவர். இவை ஈசனால் வந்தவை அல்ல, தம்முடைய னவே என்று தெரிந்த அறிவாளர் ஆராய்ச்சியால் அவற்றை அழித்து மாசிலா விடுதலை அடைகுவர்.

* **பகை ஆறு** ; I. காமம் = இல்லம் ஊர் பொருள் தானியம் இவற்றை மேன்மேலும் ஈட்ட வேண்டும் என்ற மனவிருத்தி II. குரோதம் = தான் ஈட்டும் பொருளிடத்து இடையே எவன் தடை செய்வனோ அவன் மேல் புலி போல் சீறிடும் மனவிருத்தி. III. உலோபம் = மிகத் துன்புற்று ஈட்டிய ஒண்பொருளில் ஒரு சிறு கூறும் செலவிடல ஒண்ணாது என்னும் மனவிருத்தி. IV. மோகம் = தான் தேடிய பொருளிடத்துப் பிரியம் மோதம் பிரமோதம் என்று கிளைவிடும் மனவிருத்தி. V. மதம் = பொருட்செருக்கு மிக்கு, செய்வன தவிர்வன அறியாது வேறுபடுத்தி வரும் மனவிருத்தி VI. மாற்சரியம் = தன்னை விடப் பேறு உள்ளவனிடத்து அது காணப்பொறாது எழும் மனவிருத்தி.

## சிலரை வாழவைத்தலும் சிலரைத் தாழச் செய்தலும் சரியா ?

60. **மாணாக்கன்** : ''ஆனந்தமே உருக்கொண்டு வந்த ஆசானே, தெய்வ நாயகன் அனைவர்க்கும் பொதுவானவன் என்றால் சிலரை வாழ வைத்தலும் சிலரைச் சினந்து தாழ வைத்தலும் தருமோ?''

**ஆசான்** : ''குலவும் மைந்தரைத் தந்தை, குணம் கணடு பாராட்டுதலும் குற்றம் கண்டு கோபித்தலும் போல் இறைவன் நல்லாரைக் குளிர்விக்கிறான். தீயோரைக் காய்கிறான். ''கலைகள் நலவழி வச்ர செய்யும் தண்டமும் கருணை என்று அறிவாயே''. அதாவது. நூல்கள் கூறும் நல்வழியில் வந்து சேர்தற் பொருட்டுத் தருகின்ற தண்டனையும் அவனது கருணையே என்று அறியக் கடவாய்.

## கற்பகம், நெருப்பு, தண்ணீர்

6. **ஆசான்** : ''உலகியல் என்னும் விலங்குகளை அறுத்த மைந்தனே, கற்பக மரம், நெருப்பு, தண்ணீர் ஆகிய

மூன்றும் தம்மை அணுகியோரின் வறுமை குளிர் தாகம் ஆகியவற்றைத் தவிர்த்துக் காக்கும். தம்மை அணுகாதோர்க்கு அவை உதவுவதில்லை. அவ்வாறே தன்னை அடைந்தோர்க்கு ஈசன் விருப்பு வெறுப்பு இன்றி அருள் செய்கிறான். எனவே இக் குற்றங்கள் எவரது குற்றங்கள் என்று நீயே எண்ணித் தெரிந்து கொள்.

### ஒரு கருத்து

62. ''கருத்து ஒன்று கூறுவேன், மைந்தனே; மானுடர்க்கு நன்மை செய்தற்பொருட்டு இறைவன் காட்டிய மறை நூல் வழியில் உறைத்து முயற்சி செய்து, மெய்யறிவாளரைப் பின்பற்றி நடந்து, காமம் முதலிய அழுக்குக் கறைகளை அகற்றி, மெய்யை (ஆன்மாவை) மெய் அல்லாதவற்றினின்று (ஆன்மாவல்லாதவற்றினின்று) பிரித்தறிந்து, அறியாமையாற் பிறந்த மயக்கத்தை (மாயையை) மறுத்துத் தள்ளிப் பிரம்மப் பேரறிவைப் பெற்றவரின் பிறவி நீங்கும். இது மறைநூல் முடிபு.

### ஞானம் வருவது எப்படி?

63. ''இந்த ஞானந்தான் வருவது எப்படியெனில் இடை விடா விசாரத்தால் வந்தடைந்திடும்.'' இடைவிடாது அக்கறையுடன் செய்யும் ஆன்ம ஆய்வினால் தத்துவ ஞானம் வந்து சேரும்.''

**மாணாக்கன்** : ''அந்த ஆராய்வு யாது?''

**ஆசான்** : ''மனம் முதலிய மூவுடலில் இருக்கின்ற இந்த நான் யார்? சித் (அறிவு) என்பது யாது? சடம் எது? அவை இரண்டும் கூடுதற்கு ஏதுவாக உள்ள பந்தம் என்பது யாது? அதிலிருந்து விடுதலை யாது? என்று உசாவி அறிதல் தன்னைப் பற்றிய (ஆன்ம) விசாரம் (ஆய்வு) ஆகும்.''

### ஆராய்ச்சி எதற்கு?

64. **மாணாக்கன்** : ''முந்தைய பிறப்புகளில் செய்து வந்த நல்வினைகளின் திரண்ட பலன் ஒருவனுக்கு

ஞானம் உண்டாக்கும் அல்லவா? அப்படியிருக்க ஆன்மா, ஆன்மா அல்லாதன என்ற ஆராய்ச்சி எதற்கு?''

**ஆசான் :** ''இறைவனுக்கு அர்ப்பணமாகத் தாம் தாம் செய்த பயன் நோக்கா நல்வினைகள் அழுக்குகளை மனத்தினின்று தடுத்து விடுகின்றன. மனம் தூயதாகின் றது. அங்ஙனம் தூயதாகிய மனம் ஆன்ம ஆய்வு (விசாரணை) செய்யத் தொடங்குகிறது. அதனால் அது ஞானம் அடைகிறது ''

## ஆய்வு இன்றி முடியாது

65. **மாணாக்கன் :** ''புண்ணிய வடிவான ஆசானே! கடவுட் பற்று அவாவின்மை சுவர்க்கம் முதலிய சுக வாழ்வு, அணிமா முதலிய ஆற்றல்கள், தவம் யோகம் தியானம் தெய்விக வடிவு ஆகியவற்றை அளிக்க வல்ல பல வகையான கருமங்கள் (சடங்குகள் வேள்விகள் முதலி யன) மயக்கத்தை ஒழிக்கும் மெய்யறிவைக் கொடுப்பது அரிதா? அங்ஙனமாகில் ஆன்ம ஆய்வு எதற்கு?''

## மாறுவேடம் பூண்டிருப்பவரை அறிதல்

66. **ஆசான் :** ''மகனே, கேள். மாறுவேடம் கொண்டு மறைந்திருப்போரை அறிய விரும்பினால் வேடம் மாறி யுள்ள அவர்களின் குணம் நடை அடையாளங்களை ஆராய்ந்து அவர் இன்னார் என்று அறிய வேண்டும். அங்ஙனம் செய்வதை விட்டு ஓடியும் குதித்தும் தலை கீழாக நின்றும் உயரமான கம்பத்தில் ஏறி ஆடியும் இன்னும் இவ்வாறான பல கருமங்களைச் செய்தாலும் அவர்களது உண்மை வடிவத்தை அறிய முடியாது.

67. ''அதைப் போன்றே வேதம் சொன்ன மெய்ப் பொருள் அறிவும் அதற்கான ஆய்வினால் தான் வருமே யல்லாது, வேதங்களை வாசித்தல் அன்ன தானங்கள் செய்தல் நோன்பு இயற்றல் வேள்விகள் புரிதல் மந்திரம் ஓதுதல் ஆசாரங்கள் கடைப்பிடித்தல் என்று என்ன தான் செய்யினும் தன்னைத்தான் அறிகின்ற மெய்யுணர்வு (பிரம்ம ஞானம்) இவற்றால் ஏற்படாது.''

## அறிவினால் எப்படித் துலக்க முடியும்?

68. **மாணாக்கன்** : ''மாசிலாக் குருவடிவே! (செம்பால் ஆன) கண்ணாடியில் உள்ள அழுக்கைச் செவ்வையாகக் கையால் துலக்கினால் போகும். அவ்வா றின்றி அறிவினால் அதனைத் துலக்கினார் எவரும் உண்டோ? அவ்வண்ணமே ஆன்மாவை மறைக்கும் அஞ்ஞானமாகிய களங்கம் செம்மையான புண்ணியச் செயல்கள் புரிதலால் தான் விடுமே அன்றி உள்ளத்தே உணரும் அறிவினால் எவ்வாறு ஒழியும்? உரைத்தருள்வீர்களாக.''

## ஆசானின் விடை

69. **ஆசான்** ; ''(செப்பு) கண்ணாடியில் எழும் அழுக்காகிகிய களிப்பு அதில் உண்டாகும் பொருள். ஆனால் மைந்தா, பளிங்குக் கல்லில் தென்படும் கருநிறம் அதன் உடன் தோன்றிய இயல்பு அன்று, பொய்த் தோற்றம். கண்ணாடியில் அழுக்கு அற வேண்டுமானால் சாதனத் தோடு தொழில் வேண்டும். ஆனால் படிகக் கல்லில் தோன்றிய கருநிறம் [அல்லது வேறு எந் நிறம் ஆயினும் அது] அதில் ஏறியுள்ளது என்று கண்டு அகற்றுதற்கு மனமே போதும்.

70. ''உண்மை அறிவு பேரின்பம் என்பவற்றின் வடிவான ஆன்மாவில் பொய் சடம் இடும்பை ஆகிய மூன்றும் (கயிற்றில் தோன்றும் பாம்பு போன்று) மாயா கற்பிதமே அல்லாமல் உடன் இயல்பான உண்மை அன்று. பழுதான அஞ்ஞானத்தைப் புண்ணிய கருமங்கள் ஒழிக்க மாட்டா, உறவு ஆகவே செய்யும். ''துங்க ஞானமே கரும அஞ்ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே''. அதாவது மேலாம் மெய்யறிவே-ஆன்ம அறிவியலே- செய்கை வடிவில் உளதாம் அறியாமையை எரிக்கின்ற நெருப்பாகும்.

71. ''பெட்டியில் வைத்து மறந்துவிட்ட பொருளை, அதை மறந்தவர் அதன் பொருட்டு நூறாண்டு அழுதாலும் அது கிடைக்க மாட்டாது, வைத்த இடத்தை

நினைத்து உணர்ந்தபின் அது கிடைக்கும். அவ்வாறே மாசிலா ஆன்ம ஞானமும் துயர்க்கெல்லாம் காரணமான அறியாமை மறதியைக் கெடுத்துத் தன் மெய்யறிவினால் காண வேண்டும். அவ்வாறு காணாமல் ''கனமான கன்மங்கள் நூறு உகம் செய்யினும் காணுமா? காணாதே!'' மறதி நீங்கின் முன்பு வைத்த பொருள் வெளிப்படல் போல ஆய்வு அறிவால் அறியாமை நீங்கின் முன்புளதாம் பிரம்மப் பொருள் வெளிப்படும். கன்மத்தால் வெளிப்படாது.''

## கரும காண்டம் விதித்திருப்பது எதற்கு?

72. **மாணாக்கன் :** ''நன்மையே வடிவாம் ஆசானே! ஞானமே உயர்பேரின்பத்திற்கு (ஒரே) வழி என்று என்று பேசும் வேதம், கரும காண்டத்தில் கருமத்தைப் புண்ணியம், பாவம், இரண்டு கலந்தது (மிசிரம்) எனவும் அவற்றைச் செய்த பின் முறையே தேவர்கள், விலங்குகள் முதலியன, மானிடம் என்று பிறப்புகள் உண்டாவதாகவும் மேலும் அவரவரும் தத்தமக்கு உரிய வெவ்வேறு கடமைகளைக் செய்வதே தவம் என்றும் அத் தவத்தாலே அவர்கட்குச் சுகம் எனவும் விதித்திருக்கிறதே, அது எதனால்?''

## இனிப்பு மருந்து

73. **ஆசான் ;** ''நாள்தோறும் மண்ணைத் தின்னும் குழந்தையின் நோய்க்கு இரங்கி, அது தீர்தற் பொருட்டு நல்ல மருந்துகளை இனிப்புப் பண்டத்துள் மறைத்து வைத்து அதனை எதிரே காட்டிக் குழந்தையை அழைக்கின்ற கருணையுள்ள தாய் போல, வேதத்தில் கரும காண்ட வாக்கியங்களும் மனை வாழ்க்கைக்கு உரிய அறங்களைச் செய், வேள்விகள் செய், அவை நன்மை தரும் என்று கூறுகின்றன. இங்ஙனம் கூறும் வேதத்தின் கருத்து வேறு. சுவர்க்கம் இன்பம் என்று நாடுவோர் அந்தக் கருத்தின் நிர்ணயத்தைப் புரிந்து கொள்ளார்.

74. ''போகத்தை அனுபவிக்க விரும்புவோர் எதிர்ப்பட்ட உணவை அருந்தலும் எதிரிட்ட பெண்டிரைப் பொருந்தலும் இயல்பே. இங்ஙனம் இயல்பாக உள்ளவற்றையா வேதங்கள் விதிக்கும்? அவ்வளவு தெரியாமலா அவை இருக்கின்றன? காகமே நீ கறுப்பாயிரு, நெருப்பே சுடு, வேம்பே கசப்பாயிரு, காற்றே அசை என்று ஒருவரும் அவற்றுக்கு விதிக்க வேண்டுமா? வேண்டாமே!

75. ''கள்ளும் ஊனும் உண்ண விழைந்தால் வேள்வி செய்து அவற்றை உண். பாலியல் வேட்கை உண்டாகுமானால் மனைவியோடு சேர் என்று வேதங்கள் விதித்தால், முறையற்றவற்றை மானிடன் தவிர்க்க வேண்டும் என்பதே அவற்றின் நோக்கம். வேதத்தின் நோக்கமே ''சகலமும் தவிர்வதே.''

**மாணாக்கன்** : ''அப்படியானால் இந்தக் கட்டளைகள் எதற்கு?''

**ஆசான்** : ''அவை தொடக்கப் பாடம் (பூர்வ பட்சம் : முதல் நிலை), முடிந்த நிலையின (சித்தாந்தம்) அல்ல.

76. ''வேள்வியில் பவித்திரம் ஆக்கிய மது மாமிசம் கொள்வாய் என்று உரைத்த வேதம் அவற்றை மோந்து மட்டும் பார் என்று பின்னர் விதிக்கிறது. அவ்வாறே மனைவியோடு கூடுதலும் மகப்பேற்றுக்கு மட்டுமே விரும்புக என்று விதிக்கிறது. பிறகு அதனையும் தவிர் என்கிறது. அதே சமயம் துறவிகளுக்கும் நயிட்டிக பிரம்மச்சாரிகளுக்கும் (வாழ்வில் மரண பரியந்தம் பிரம்மச்சாரியாக இருப்போர்) உலகில் பழியில்லாதிருப்பதையும் கவனி. ஆகவே பொருள் முறை முழுவதையும் கவனித்து, வேள்வி முதலிய கருமங்களையும் இன்ப விருப்புகளையும் விட்டுத் தத்துவ ஞானத்தால் பேரின்பம் அடைவாயாக,''

### அஞ்ஞானம் ஞானத்தோடு கூடி...

77. **மாணாக்கன்** : ''அஞ்ஞானத்தின் பரிணாமமே உலக வடிவம். அந்த அஞ்ஞானமும் வேள்வி முதலாம்

வினைகளும் உறவுடையன என்று தாங்கள் கூறியது ஒக்கும். பெயரும் வடிவும் எனப் பல வகையாகப் பரிண மித்துள்ள அஞ்ஞானமும் ஏகமாக உள்ள ஞானமும் பகை என்றால் வான்மதியில் களங்கம் கூடியிருப்பது போல அஞ்ஞானம் ஆகிய களங்கம் தூய ஞானத்தோடு கூடி இந்தப் படைப்புகளை எல்லாம் பண்ணவும் கூடுமோ?''

## நெருப்பு இருவகைப்படும்

78. **ஆசான்** : ''ஒளிமயமான ஞானம் சொரூப ஞானம் எனவும் விருத்தி ஞானம் எனவும் இருவகைப்படும். (கட்டையில் உள்ள நெருப்பும் கட்டையைக் கடைந்தால் வரும் நெருப்பும் போல்வன அவை) சொரூப ஞானமே விருத்தி ஞானமாக வெளிப்படுகின்றது. ஆகலின் அவை தம்முள் வேறுபட்டன அல்ல. (ஆனால் கட்டையிலுள்ள நெருப்பு இருட்டைப் போக்காது. அது போன்று) சொரூப ஞானம் அஞ்ஞானத்தைப் போக்காது. அதனை ஆழ்துயில் (சுழுத்தி) நிலையில் அறிந்தனை. ஆனால் அந்தச் சொரூப ஞானத்தில் மருவிய அஞ்ஞானத்தை விருத்தி ஞானம் பொசுக்கி விடும்.

* கட்டையிலுள்ள நெருப்பு **சாமானிய நெருப்பு**. கடைவதால் வந்த நெருப்பு **விசேட நெருப்பு**. அவ் வாறே **சொரூப ஞானம் விருத்தி ஞானம்** இரண்டும் ஞானம்தாம். சொரூப ஞானம் பரந்தும் அடங்கியும் இருக்கும்; அது சாமானிய ஞானம். விருத்தி ஞானம் செயலுக்கு ஊக்கி விடப்பட்ட விசேட ஞான மாகும். சாமானிய ஞானம் அஞ்ஞானத்தைப் போக்காது. ஆனால் நான் பிரம்மம் என்று அந்தக் கரண விருத்தியில் எழுகின்ற விசேட ஞானம் அஞ்ஞானத்தை அழித்து விடுகிறது.

79. ''துருத்தி போல விரிந்து குவியும் அஞ்ஞானத்தை ஆழ் துயில் நிலையில் சொரூப ஞானம் சுடவில்லை. ஆனால் அதுவே விழிப்பு நிலையில் விருத்தி ஞானமாகச் சுட்டெரிக்கிறது என்பது எப்படி என்று நீ கேட்கலாம்.

கதிர்கள் விரிந்து பரந்துள்ள சூரியன் எப் பொருளை யும் எரிக்காது. ஆனால் சூரிய காந்தக் கல்லில் (குவி ஆடியில்) அதுவே நெருப்பாகி எரித்து விடுகிறது. அவ்வாறு இருத்தல், விளங்குதல், வடிவத்தில் எங்கும் பரந்து விளங்கும் சொரூப ஞானம் எதனையும் கெடுக் காது. ஆனால் சமாதியிடத்துப் பொருந்தி 'நான் பிரம்மம்' என்னும் விருத்திவடிவ ஞானமாகத் தோன்றி அஞ்ஞானத்தைக் கெடுத்துவிடும் என்று அறிவாயாக.

* காரண வடிவச் சூரியக் கதிரால் கெடாத பொருள் காரிய வடிவச் சூரிய காந்தக் கல்லின் தீயால் கெடுவது போன்று காரண வடிவச் சொரூப ஞானத்தாற் கெடாத அஞ்ஞானமும் காரிய வடிவு விருத்திஞானத்தாற் கெடு கின்றது.

### ஞானமும் ஒரு கருமம் தானே?

80. **மாணாக்கன்** : ''ஐயனே, மனம் மொழி மெய் என்ற மூன்று கரணங்களால் ஆகிய தொழில் எல்லாம் கருமங்கள் அல்லவா? (நான் பிரம்மம் என்னும்) விருத்தி ஞானமும் அந்தக்கரணத்தின் காரியம் ஆகலின் அதுவும் கருமம் தானே? அதனால், கருமம் அஞ்ஞானத்தை அழிக்கும் என்று கூறாமல் மனத்தின் கருமத்திற்கு ஞானம் என்று ஒரு பெயர் இட்டுள்ள பெருமையை உரையுங்கள்.''

81. **ஆசான்** : ''ஒருதாய் மக்கள் தம்முள் பகை கொள்ளு தல் உலகில் காணக் கூடியது அல்லவா? அவ்வாறே விருத்திஞானம் அந்தக் கரணத்தின் விருத்தி (காரியம்) தான் என்றாலும் அது மற்ற [தியானம் முதலிய] கருமங்களுக்குப் பகையாக உள்ளது. கருமங்கள் (செயல்கள்) புருட தந்திரம். [அதாவது வினை முதலாகிய கருத்தனைச் சார்ந்தவை].'' ஞானம் புருட தந்திரம் அன்று, வத்து தந்திரம்''. அதாவது ஞானம் வினைமுதல்வனின்-கருத்தனின்-சார்புடையது அன்று; அந்தப் பொருளையே சார்பாக உடையது.

## தியானமும் ஞானமும் தம்முள் வேறுபட்டவை

82. ''நூல்கள் விதித்த செயல்களை (உபாசனை முதலிய வற்றை)ச் செய்யலாம், செய்யாமல் விடலாம். ஒன்றை விட்டு மற்றொன்றைச் செய்யலாம். பூரண ஞானம் அத் தகையது அன்று. ஒன்றை மற்றொன்றாக (சாலிக் கிராமத்தை விட்டுணுவாக)ப் பாவிக்கின்ற தியான யோகம் கற்பிதமாகும். கண் கூடாகக் கண்ட அறிவே ஞானம். இவற்றில் அறியாமை உடையனாய் மயங்குதல் ஒழிக.

* மனச் செயலாம் தியானமும் விசாரத்தால் விளையும் விவேக ஞானமும் அந்தக் கரணங்களின் செயல்களே யாயினும் வெவ்வேறேயாம்.

## தியானம் கற்பிதம், ஞானம் உண்மை

83 ''ஒன்றை அனுபவித்து அறிந்தது ஞானத்தின் வடிவாம். பிறர் சொல்லக் கேட்டு அதன்படி பாவிக்கும் பாவனை தியானத்தின் வடிவாகும். ஒன்றைக் கண்டோர் சொல்லிக் கேட்பது (தியானம்) அது (தியானம் இல்லாத போது) மறந்து போவதாம். பார்த்தது மறவாது. தான் அனுப வித்துப் பார்த்தது உண்மையாகும். பாவிக்கின்ற (தியான) பொருள்கள் பொய். அஞ்ஞானத்தைப் பார்த்த அக் கணமே சினந்து அதைக் கெடுப்பது ஞானமே, தியானம் முதலிய கருமம் அன்று.

84 ''அனைத்தும் பிரம்ம மயம்'' என்னும் வீட்டைக் கொடுக்க வல்ல தியானத்தையும் உண்மை அன்று என்று கூறினால் அத் தியானத்தின் பரிபாக வசத்தால் அது தானாகும் போது நேரிடையாக அனுபவித்து அறிந்த பிரம்ம சொரூபம் உண்மையன்று என்று ஐயுறாதே. திருமால் முதலிய தேவர் வடிவைக் கேள்வி யுற்றவன் சிந்திக்கும் பொழுது அந்த வடிவு உண்மை யன்று. அப் பாவனையானது திடமாக அவ் வடிவே ஆகும் பொழுது கண்கூடாக அறிந்தது உண்மையாகும்''.

* பாவனைவடிவப் பிரம்மம் உண்மையன்று. தியான முயற்சியினால் அடைந்த பிரம்ம வடிவு நிலைபேறு உண்மை.

## பொய்யாம் தியானத்தில் மெய்யாம் விடுதலையை உண்டாம் சக்தி இது எனல்

85. **மாணாக்கன்** : ''பொய்யாகிய தியானம் மெய்யாகிய முழு விடுதலையைக் கொடுத்தற்கான வலிமை உடையதாயிருப்பது எப்படி?''

**ஆசான்** : ''அவரவர் தியானமே பிறப்பாகும்''. அதாவது அவரவர் மரண காலத்தில் சிந்திக்கும் சிந்தனையின் வடிவாகவே மறுபிறப்பு எய்துவர். ''உடலம் ஆசையால் தியானிக்கில் தியானித்த உடல்கள் ஆகுவர்''. மைந்தா, தொடர்ந்து வரும் பிறவி கெட ஆன்ம சொரூபத்தைத் தியானிக்க அச் சொரூபமே ஆவர். இஃது உண்மை.''

* சகுண பிரம்மத்தைத் தியானித்தால் சகுண பிரம்மம் ஆவர்; நிர்க்குண பிரம்மத்தைத் தியானிப்போர் நிர்க்குணப் பிரம்மம் ஆவர்.

## ஆன்ம வினாதலுக்கு என்ன அவசியம்?

86. **மாணாக்கன்** : ''பிரம்ம வடிவைத் தியானித்தோர் பிரம்மமே ஆகுவர் என்றால் மானிட வடிவில் இருக்கும் ஆசானே, நான் யார், அறிவு எது, என்று ஆய்கின்ற ஆன்ம வினாதலுக்கு என்ன இன்றியமையாமை இருக்கின்றது?''

**ஆசான்** : ''பிரம்மத்தினைத் தியானிப்பது என்பது, கேள்விப்பட்ட அறிவினை அடிப்படையாகக் கொண்டது. அந்தத் தியானம் கைவந்ததும் கண்கூடான அறிவாகின்ற அவ் அறிவே ஆன்மிக ஆய்வு – அறியாமையை அழிக்கும் மெய்யுணர்வு - அதுவே முத்தி-இதுவே உறுதியான முடிவு என்று அறிவாயாக.

### தேற்றாங் கொட்டை போல

87. **ஆசான் :** ''பானை நீரிலுள்ள மண்கலப்பினைத் தூய்மையாக்க அதில் இடப் பட்ட தேற்றா விதைப் பொடி சேற்றை வேறுபடுத்தித் தானும் மண்ணொடு மாய்ந்துவிடும். அவ்வாறே அறியாமையைப் பகைத்துக் கெடுத்த விருத்தி ஞானமும் அதனோடு (அறியாமை யோடு) கெடும். அங்ஙனம் கெடுவதால் தடையற்ற முழுமையான சுக அனுபவம் உண்டாவதற்கு யாதொரு தடையும் இல்லை.''

### விடுதலை பெற்ற மெய்யறிஞரின் அனுபவம்

88. **மாணாக்கன் :** ''விடுதலை (முத்தி) பெற்ற மெய் யறிவாளரின் அனுபவம் எப்படி இருக்கும்?''

**ஆசான் :** ''பசை பிணி முதலிய தொல்லை எதுவும் இன்மையால் எந்த விதச் சிந்தனையும் இல்லாத பூமண்டலத்து அரசனைப் போன்றும் சின்னஞ்சிறு குழந்தையைப் போன்றும், எண்ணங்கள் அற்று, இருக் கிறார்கள். பந்தம், முத்தி (கட்டு, வீடு) என்ற எண் ணங்கள் அவர்களை விட்டு அடியோடு நீங்கி விடுகின் றன. ஆகையால் பந்தம் முத்தி இருக்கின்றன என்று பிறர் கூறினால் அவர்களைப் பார்த்துச் சிரிக்கிறார்கள். ஆகாயத்தை ஒரு கொசுகு விழுங்கிக் கக்கியது என்று கூறுபவரைப் பார்த்து யாரே நகைக்க மாட்டார்?

### உலகு மயக்கு – ஒரு கதை

89. ''மலடியின் மகனும் கட்டையில் காணப்பட்ட மனிதனும் ஆகாய மலர்களைச் சூடிக்கொண்டு கிளிஞ்சலில் தோன் றிய வெள்ளியின் விலைப் பொருட்டால் கந்தருவ நகரத்தில் முயற் கொம்பைக் கொண்டு சண்டையிட்டு அதனால் ஒருவரை ஒருவர் குத்திக் கொண்டு மாண்ட னர்; பிசாசுகள் ஆயினர்.

—புத்தியுள்ள எவரும் இக் கதையினைக் கேட்டு மயங்கமாட்டார்.

* உலகமாம் அற்ப மயக்கில் ஏமாறாதே என்பதே கருத்து.

* கந்தருவ நகரம் என்பது இங்கு, வானவெளியில் ஊர் வடிவமாக நீலம் பொன் ஆகிய நிறம் கொண்ட மேகங்களால் ஆனதொரு வேறுபாடு.

90. ''மாயை என்பது பொய் எனில் அதனால் உண்டானவை எல்லாம் பொய்யாக இருத்தல் வேண்டும்.

''தாயின் இனம் போன்றே மகவின் அமைப்பு (மக்கள் யானை புலி என்றாற் போன்று) இருத்தல் முடியும். ஆகவே சுவர்க்கம் நரகம், நன்மை தீமை, என்றெல்லாம் கருதாமல் உண்மை அறிவுப் பேரின்ப நிறைவாக நீ இருப்பாயாக.''

**தேவர், புனிதத் தீர்த்தம் தலம் விரதம் என்பன பொய்யா?**

91. **மாணாக்கன்** : ''மலர்மேல் இருப்பவனாம் அயன் முதலான பல தேவரும், பாரில் உள்ள பெரியோர், கங்கை முதலிய புனித நீர்த் துறைகள், புண்ணிய நாடு நகரங்கள், புண்ணிய காலங்கள், நால்வேதம், அவற்றின் துணைப் பகுதி ஆறு, மந்திரங்கள், நோன்புகள் என் பனவும் பொய் என்று கூறினால் அது குற்றம் அல்லவா? அதன் உண்மையை உரைத்தருளல் வேண்டும்.''

92 **ஆசான்** : ''சொப்பனத்தில் காணப்படும் தேவர்களும் நோன்புகளும் பொருள்களும் பொய் என்று, விழித்தவன் நனவு நிலையில் சொல்வது பிழையானால் மாயையில் தோன்றிய உலகங்கள் அனைத்தையும் உண்மையில்லை என்று கூறுவதும் பிழையேயாம். கனவிற் கண்டதை விழிப்பு நிலையில் பொய் என்று கூறலாம் என்றால் மாயையில் தோன்றிய உலகை, தன்னில் விழித்த ஞானி, பொய் என்று கூறலாம் பிழையில்லை.

**மெய்யை மெய் என்று சொல்பவர்களைக் குற்றம் சாட்டுதல் உண்டா?**

93 ''[பிரம்ம ஞானிகள் தம் அனுபவத்தால் பொய் என விளக்கிய தேவர், கங்கை நீர், புண்ணிய தேசம் காலம் முதலியவற்றை உண்மையெனக் கொண்டு நீராடல் போற்றல் அருச்சித்தல் நிகழ்த்தும்] மெய்யறிவு இல்லாதவரைப் புண்ணியர் என்று புராணங்கள் கூறு மானால், மெய்யாம் இரண்டற்ற பிரம்மத்தை மெய் யென்று கூறும் ஞானியைக் குற்றம் சாற்றிய சாத்திரமும் உண்டா? ஆகலின், தன்னை உணர்ந்த ஞானி உலகு உயிர் கடவுளரைப் பொய் என்று கூறுதலால் யாதொரு குற்றமும் இல்லை. பொய் எது என்று கேட்டால் வெவ் வேறு பெயர் உருவுகளாகக் காட்சி தரும் ஐம்பெரும் பூதங்களும் அவற்றின் கலவைகளும் ஆம். மெய் எது என்றால் உண்மை அறிவுப் பேரின்பமாகப் பரந்துள தாம் ஆன்மாவே ''

94. **மாணாக்கன்** : ''மாயை என்னும் இருள் மேகங் களை அகற்ற வல்ல சுழல் காற்றாம் குருமூர்த்தியே, மாயை என்பது யாது, அது எப்படி வந்தது, அது உண்டான காரணம் யாது. மாயை பிரம்மத்தின் வேறானால் பொருள் இருமை (துவைதம்) என்பது தவிர்க்க முடியாதே, மாயையும் பிரம்மமும் ஒன்றெனில் மாயை போல் பிரம்மமும் பொய் அன்றோ?

—இவற்றுக்கு விடையருளல் வேண்டும்.''

* மாயை அஞ்ஞானம் அவித்தை பிரகிருதி சக்தி என்பன ஒருபொருட் சொற்கள்.

**சொற்களுக்கு அகப்படாதது மாயை**

95. **ஆசான்** : ''மைந்தனே, அம் மாயையை இத் தன்மை உள்ளது என்று சொல்லிவிட முடியாது. இந்த நிலம் வீடு எனக்குப் பொருள், இவ் வுடம்பே ஆன்மா, உலகமே மெய் என்ற முடிவுடையார் மாயை யுடையார். இந்தப் பொய் வந்து உதித்தது எப்படி என்று கண்டவர் இல்லை. அது வந்ததற்குக் காரணம் ஆன்ம ஞான ஆய்வு இன்மையே.

* கூறுபட்டது (பின்னம்) அபின்னம் (கூறு படாதது) பின்னாபின்னம் (கூறுடைமையும் கூறின்மையும் ஆனது) உண்மை (சத்து) பொய் (அசத்து) உண்மையும் பொய் யும் ஆனது (சதசத்து) உறுப்புடையது [சாவயவம்] உறுப்பற்றது (நிரவயவம்) உறுப்புளதும் இல்லதுமானது (சாவயவ நிரவயம்) என்று இவற்றுள் இத்தகைய வடிவுடையது என்று உறுதி கண்டு சொல்வது இயலாதது மாயை; ஆகவே அது சொல்லிறந்தது.

* ஆன்மிக ஆய்வாவது நானார் என் உள்ளமார் ஞானங்கள் யார் என்னை யாரறிவார் உலகு எது என்று நுண் மாண் நுழை புலத்தால் வினவி வினவித் தன்னை அறிவது.

**மாயாவியும் வித்தைகளும்**

96. ''இந்திர சாலம் காட்டுபவனுடைய வித்தை அருவ மானவை. அவற்றை அவன் காட்டுமுன் அவை வெளிப் பட மாட்டா. அவனது மாயாசாலத்தால் கந்தருவப் படைகள் உண்டான பிறகு அவ் வித்தைகளும் விளக்க மாகும். அவ் வாறே பிரம்ம சக்திகள் அருவமானவை, எண்ணில்லாதவை. அவற்றைக் கண்டு பிடித்தல் இயலாது. விரிந்துள ஐம்பெரும் பூதங்களைக்கண்டு, கருத லளவையால் (அனுமானப் பிரமாணத்தால்) கருதுங்கால் பலர்க்கும் அச் சக்திகள் வெளியாகும்.

97. ''இந்திர சாலக்காரன் அவனது மாயா வித்தையால் தோன்றிய கந்தருவப் படைகள் காண்போர்க்கு நேரிடை யாகத் தோன்றும். அந்தச் சக்தி நேரிடையாகத் தெரி வதில்லை. அது போல, பெயர் வடிவ (நாமரூப) உலகமும் அச் சக்திக்கு ஆதாரமான பிரம்மமும் காண் போருக்கு நேரிடையாகத் தோன்றுவதில்லை, ஆதலால் ஆதாரமான பேரியல் (மகத்தான) பிரம்மத்துக்கும் காரியமான உலகத்துக்கும் வேறாக எண்ணற்ற சக்திகள் உளவாகும்.

* பிரம்மத்திற்கும் உலகிற்கும் இடையீடாகப் புகுந்த மாயை தனியே ஒரு முடிவாகி பிரம்மத்திற்கு வேறுபட்

டிராது அதனால் பொருள் (வஸ்து) இரண்டாக மாட்டாது.

98. ''அறிவுள்ள மைந்தனே, இந்திர சால சக்தியானது அதனைக் காட்டிய மாயாவியை விட்டு வேறு அன்று. மாயாவியான அவன் உண்மை, ஆனால் அவனது சாலங்கள் உண்மை அல்ல. இந்தச் சான்றிலிருந்து, சர்வ சக்தி உடைய பரிபூரண ஆன்மாவின் உண்மை இயல்பை உறுதியாகத் தெரிந்து கொள்ளலாம். மாயையை நடத்துவது அது, நடத்துகின்ற அது அப்படியே பரிபூரணமாக - ஆன்மாவாக-இருக்கிறது.

* கானல் நீரால் களிமண் நிலம் நனையாது. அது போல மாயையால் பிரம்ம சொரூபம் கெடாது.

99. **மாணாக்கன்** ''மாயா சக்தி இல்லாதது; (பொய்). அதாவது பிரம்மத்திற்கு வேறாக இருப்பதில்லை. அங்ஙனமேல் அஃது உண்டு என்பது எப்படி?''

**ஆசான்** : ''நல்லியல் மைந்த, புல் முதலான சடப் பொருள் எல்லாம் பூக்கும் காலத்துப் பூத்தும் காய்க்கும் காலத்துக் காய்க்கும் விந்தைகள் பாராய். அப் பொருள் களில் பிரம்மத்தின் சிற்சக்தி (பிரம்ம சக்தி, பிரகாச சக்தி) பரந்திருக்கிறது. அவ்வாறு இல்லையெனில் தொன்று தொட்டு வரும் இயங்குதிணை நிலைத்திணை உயிர்கள் யாவும் இயல்பு மாறிப் போயிருக்கும்.

**ஒழுங்கு செய்யும் சக்தி இல்லையானால்...**

100 **ஆசான்** ; ''முட்டையுள் நீர்வடிவமாக இருந்த கரு பின்னர் பல நிறம் கொண்ட பறவைகளாகத் தோன்றும் புதுமையைப் பார்க்கிறாய். அவ்வாறு கண்களுக்குப் புலப்படாது ஒழுங்கு செய்யும் சக்தி இல்லையாயின் அனைத்து உலகும் அரசன் இல்லாத நகரம் போல் மாறுபாடு அடையும்.''

**மாணாக்கன் :** ''அஃது எவ்வாறு மாறுபாடு அடையும்?''

**ஆசான் :** ''நெருப்பு நீராகும். கசப்பு இனிப்பாகும்.

தகாதோன் மறை ஓதுவான். மலையும் முகில்போல் உலவும். கடல் எல்லாம் மண்ணாகும். புவனம் இயல்பு திரியும் ''

101. **மாணாக்கன்** : ''மேலாம் மெய் ஆசிரிய வடிவே! யாவர்க்கும் பார்க்கவும் உணரவும் இயலாது என்றும் இன்னதென்று உரைக்க முடியா வடிவு என்றும் பெயர் உருவப் பயிர்களை உண்டாக்கும் வித்து என்றும் தாங்கள் சொல்லிய சிற்சக்தி [பிரம்மத்தின் மாயா சக்தி]யை ஒழிப்பது எப்படி? ஒழித்தல் இயலாது என்றால் அகமும் பிரம்மமும் (ஆன்மாவும் பரம்பொருளும்) ஒன்றாய் (அத்து விதமாக)க் காண்பது எப்படி? முத்தி ஆவது எப்படி?''

**மாயையை விலக்கும் உபாயம்**

102. **ஆசான்** : ''மந்திரவாதி மணி மந்திர மருந்துகளால் வாயுத் தம்பனம் (காற்றை அடக்கி வெளியில் நிற்றல்) நீர்த்தம்பனம் (நீர்மேல் நடத்தல்) நெருப்புத்தம்பனம் (நெருப்பிடை நிற்றல்) என்னும் இவற்றைச் செய்வானாயின், காற்று நீர் நெருப்பு என்ற அவ்வப் பொருளிலுள்ள தனித் திறங் களான அசைவு, நெகிழ்ச்சி (திரவம்), சூடு என்பன எங்கே இருக்கின்றன? நீ அந்தச் சத் சித் ஆனந்த வடிவேயாகி வேறு ஒன்றையும் நினையாதிருப்பாயாகில் மாயாசக்தி மீண்டும் எழாது நீங்கும். அதனை நீக்க இதனைத் தவிர வேறு எந்த மந்திரமும் உபாயமும் மறைநூல்களிற் கூறப்படவில்லை.

103. குடம் வனைவோர் கைவைப்பதற்கு முன் மண்ணில் வெளிப்படாதிருந்த சக்தி (அவ்யக்தம்) அவரது செய் கைக்குப் பின் வெளியாகி (வியக்தம் ஆகி)க் குடம் என்ற பெயர் அடைகிறது. அக் குடம் உடைந்தால் அதனை மண் என்பர். குடம் இருந்தது உடைந்தது என்பது சொல் அளவாய் இருக்கிறது. ஆக, பெயர் உருவம் என்பவற்றை எண்ணாது மண்ணாகப் பார்த்

தலே உண்மை அறிவு. உயிர்களின் பேதமாகிய பெயர் உருவமாம் கற்பனைகள் பொய் என நீக்கி அனைத்தையும் அறிவு மாத்திரமாக் கண்டு சத் சித் ஆனந்தச் சின்மயம் ஆகுவாய்.''

## விபரீதத்தைத் துடைப்பது எப்படி?

104. **மாணாக்கன்** : ''[நகை முழுதும் பொன் பூரணமாக இருத்தல் போல் பொய் யுலகு அனைத்தும்] பூரணமாயிருக்கும் பிரம்மத்தில் பொய் (அசத்) சடம் துக்கம் என்ற மூன்றும் இல்லையாயினும் இருப்பன போல் தோன்றுகிற பாழாகிய அந்த விபரீதத்தைத் துடைப்பது எப்படி?''

**ஆசான்** : ''தடாக நீரில் பிரதிபலித்துத் தோன்றும் தன் நிழல் தலைகீழாக இருக்கிறது. அலைகிறது. ஆயினும் பூமியில் உள்ள தனது உருவத்தைப் பார்த்தால், தன் நிழல் பொய் என்று தோன்றும், அவ்வாறு தன்னைக் கண்டுகொண்டால் கற்பிதமாம் பெயர் உருவு என்னும் வேறுபாடுகள் பொய்யாகின்றன.

* காரண ஞானத்தால் காரியம் பொய் என உணர்க.

105. ''அறிவு காரணம், அறியப்படும் பொருள்கள் காரியம். பெயர் உருவங்கள் என்ற பேய்கள் எங்ஙனம் வந்தன, எங்ஙனம் அவை அழிகின்றன என்று ஆய்தல் பயனற்றது.

பெருமையுள்ள மைந்தனே, நெடுங்கனவாகிய இந்த உலகம் வந்ததும் போனதும் நினையாமல் ''உன் போதமாய்ப் பூரணமாய் இருப்பாயே''. உனது ஆன்மாவாகப் பரிபூரணப் பிரம்மமாக இருக்கக் கடவாய். இதுவே நீ செய்யத் தக்கது.

## உண்முகப் பார்வை

106. ''மைந்தா, மெய் போலத் தோன்றும் பெயர் உருவுகளாம் பிரபஞ்சத்தின் பற்றை விட்டு உன் உண்முகப்

பார்வையை எவ்வளவுக் கெவ்வளவு உண்மையின்பால் திருப்புகிறாயோ அவ்வளவுக்கு அவ்வளவு பார்வை வலுப் பெறுகிறது. இவ்வாறு நிரந்தரமாகப் பழக்கம் செய்ய, மனமானது உன் வசம் நின்று சின்மாத்திர வடிவானால் வெறுக்கத் தக்க உடம்பில் இருந்தாலும் பேரின்பக் கடலாக விளங்குவாய்.

107. ''தான் அல்லாமல் பிறிதொன்றும் தன்னிடத்தில் இல்லாத ஆன்மா பூரண சச்சிதானந்த குணமாய்த் தேகத்தின்கண் ஒவ்வொரு சீவரிடத்தும் ஒருசுவைத் தாகும் (ஏக ரசம்) அவ் ஆன்மா எவ்வாறு ஒத்திருக்கும் என்று எனக்குப் படவில்லை. 'நான், நான்' என்று நடக்கும் சீவர்கள் (சத் ஆக) இருப்பது தெளிவாகத் தெரிகிறது. நான் கண்டேன் கேட்டேன் சுவைத்தேன் என்று அவர்கள் ஞானங்கள் வெளிப் படலால் அவர்கள் சித்தாக இருத்தலும் பொருந்துகிறது. அங்ஙனம் (சத்தாக, சித்தாக) இருக்க, ஆனந்தம் மட்டும் வெளிப் படையாகவும் தோன்றாத காரணம் யாது? ஐயனே. அதனை உரைத்தல் வேண்டும்.''

**ஆசான்** : ''மைந்தனே, பூ ஒன்றில் உரு மணம் சுவை ஊறு என்பன ஒன்றாக இருக்குமாயினும் அவை ஒவ்வொரு பண்பும் ஒவ்வொரு பொறி வாயிலாகத் தோன்றுகின்றன. ஒன்றால் அனைத்தும் அறியப்படல் இல்லை. அவ்வாறே அருமருந்தன்ன சத்சித் ஆனந்தமாம் இயல்புகள் ஆன்மாவின் வடிவாக இருப்பினும் அவை உலக மயமான தன்மைகளால் (விருத்திகளால்) வேறுபடுகின்றன. அதனால் பேதங்களாகத் தோன்று கின்றன.

### மூடம் கோரம் சாந்தமாம் நிலைகள்

109. ''என் மைந்தா, தாமதம் இராசதம் சாத்துவிகம் என்ற மூன்று குணங்களால் மூடம் கோரம் சாந்தம் என்ற நிலைமைகள் தோன்றுகின்றன. தம்மை அடைந் தோர்க்கு இன்பக் கடலாக விளங்குதற்கு ஏதுவாக உள்ள சத் சித் ஆனந்தம் என்பவை ஆன்மாவின் சொரூபமாய் என்றும் ஒன்றாகவே இருக்கின்றன. ஆயினும் அவை மூடம் கோரம் சாந்தங்களின் செயல்

வகை வேறுபாட்டால் வேறுபட்டனவாகத் தோன்று கின்றன.

110. ''சடமும் மூடமும் ஆன கல் மண் மரம் என்பவற்றில் ஆன்மாவின் இயல்பான சத் சித் ஆனந்தம் என்பவற்றில் சத் (இருத்தல்) ஒன்று மட்டும் காணக் கிடக்கிறது. (சித்தும் ஆனந்தமும் அவற்றில் வெளிப்படல் இல்லை) நஞ்சு போலும் மயக்கும் இரசோ குணக் கூறான காமம் முதலிய கோர விருத்தியில் ஆனந்தம் விளையாது. அறியாமை மயமான மூட விருத்தியிலும் ஆனந்தம் விளையாது. அவை இரண்டிலும் சத்தும் சித்தும் வெளிப்பட்டிருக்கும். புறத்தினின்றும் விடுபட்ட உண்முக விருத்தியாம் சாந்த விருத்தியிலோ சத் சித் ஆனந்தம் ஆகிய மூன்றும் வெளிப்பட்டிருக்கும். ஆகவே ''மடமான மூடங்கள் கோரங்கள் விடுபட்ட சாந்த மனத்தில் ஆனந்தம்'' தடையற்றுத் தோன்றும்.''

**சத் எது சித் எது ஆனந்தம் எது?**

111. **மாணாக்கன்** : ''இவ் வுலகத்தின் ஆசானாக எழுந் தருளியுள்ள இறைவனே, சத் சித் ஆனந்தம் என்பதன் இலக்கணம் அறியேன். சத் எது சித் எது ஆனந்தம் எது?''

**ஆசான்** : ''முக் காலத்தும் கெடாது இருப்பது சத்; வேறுபாடு அறிதல் சித் ஆகும். விருப்பாய பொருள் கிடைக்கப் பெற்று அதனை நுகரும் போது உண்டாகும் தன் இனிய அனுபவச் சுகம் ஆனந்தம் ஆகும்.''

112. **மாணாக்கன்** :''ஐங்கோசங்களும் நீ அல்லை என்று, கோட்டைகளை இடித்துத் தகர்க்கும் மத யானை போல் ஐயம் திரிபு அற விளக்கிய ஆசானே,

அறிதற்கு இயைந்த உடம்பில் உள்ள உடம்போனை (சரீரியாகிய ஆன்மாவை) நோக்கி நான்கு வேத மகா வாக்கியங்கள் நீ உண்மை யறிவின்பம் (சத் சித் ஆனந்தம்) நீயே பிரம்மம் (செம் பொருள்)என்று கூறி னாலும் இந்த உடம்பினுள்ளோனுக்கு அந்த அனுபவம் பொருந்துவது எப்படி?''

* மகா வாக்கியங்கள் : அறிவே மெய்ப்பொருள் (பிரஞ் ஞானம் பிரம்மம்); நான் மெய்ப்பொருளாயிருக்கிறேன் அகம் பிரம்மாஸ்மி); அது நீயா யிருக்கிறாய் (தத் துவம் அசி); இந்த ஆன்மா மெய்ப்பொருள் (அயமாத்மா பிரம்மம்) இவை முறையே இருக்கு யசுர் சாம அதர்வண மறைமுடிபான தொடர்கள்.

## ஆன்மா 'சத்' எனல்

113. "முந்திய பிறப்புகளில் செய்த வினைகளின் விளைவுகள், தவிர்க்க முடியாப் பலன்கள் தரும் என்பதால் இவன் சென்ற காலத்தில் இருந்திருக்க வேண்டும் அல்லவா? எதிர்காலத்தும் உடல் உண்டு அல்லவா? இப்போது செய்யும் வினைகளுக்குச் சுவர்க்கம் நரகு உண்டு என்றால் அதற்கேற்பத் துன்புறும் உடல், தெய்விக உடல், மானிட உடல் என மாறிமாறி வந்து அழியும். தன் மாய உடல் கெடினும் இவன் (உடம்பில் இருப் போன்) முக் காலத்தும் இருப்பன். ஆகவே இவன் 'சத்' (இருத்தல்) என்பது பொருந்தும்.

* துக்க விசேடம் நரகம், சுக விசேடம் சுவர்க்கம் எனப் படும்.

## ஆன்மா சித்; ஆனந்தம் என்பதற்கு அனுபவம்

114. ''மைந்தனே, இரவின் இருள் போல்எதுவும் தோன்றா வாறு அதனை மறைக்கும் சுழுத்தி என்னும் உறக்கத் திலும், இரவுப் பொழுதிலும், ஒளியற்ற பகற் காலத்தும், இருளையும் பொருள்களையும் மயங்காது அறிதல் காரணத்தால் சித் (அறிதல்) என்பது உணரப்பெறும்.

பேரின்பம் மிக்க தானே தன்னிடத்தில் நீங்கா அன்பு (பிரியம்) வைப்பதனாலும் குறைவற்ற அன்பு எவர்க்கும் சுகத்தின்பால் உண்டாவது அனுபவம் ஆதலாலும் இவன் 'ஆனந்தம்' என்பது உணரப்பெறும்.

## ஆன்மா ஒரு சாதனமா?

115. "உண்பன பருகுவன முதலியவை சுகத்துக்குச் சாதனம்.

ஆகையால் அவை யாவர்க்கும் மிகு பிரியமாம். இங்ஙனம் ஆன்மாவும் ஆனந்தம் அடையச் சாதனமாக இருக்கின்றது எனக் கருதுதல் பொருந்தாது.''

* ஆன்மா சுகசொரூபம்; சுக சாதனம் அன்று.

**மாணாக்கன்** : ''அருகாத பிரியம் சுகத்தில் வரும் என்றீர்கள். ஆகவே ஆன்மா மற்றச் சாதனம் போல் சாதனம் என்று கூறல் ஆகாதா?''

**ஆசான்** : ''மற்றச் சுக சாதனங்களோடு ஆன்மாவும் சாதனம் என்று வைக்கப்படுமானால் சுகம் சுகிப்போனை விட்டு எங்கே தனியாக இருக்கிறது? அதனை அனுப விக்கும் கருத்தா உன்னைத் தவிர வேறே யார்? ஆனந்த வடிவமான ஆன்மா, அதனை அனுபவிக்கும் கருத்தா உன்னைத் தவிர வேறே யார்? ஆனந்த வடிவமான ஆன்மா அதனை அனுபவிக்கும் ஆன்மா என்று இரண்டு ஆன்மாக்கள் உண்டோ? இல்லை. அங்ஙனம் இரண்டு ஆன்மாக்கள் இல்லாமையின் ஆன்மா ஆனந்த வடிவமேயன்றி அதற்கான சாதனம் அன்று.

**விடய சுகங்களில் வரும் பிரியம் குறைவே**

116. ''புறப் பொருள்களால் வரும் சுகத்தில் விருப்பம் இருப்பது உண்மையே. ஆனால் ஆன்மாவில் எழும் விருப்பம் இணையற்றது. புறப்பொருள் வழிச் சுகத்தில் உள்ள விருப்பம் மாறிமாறிச் செல்கிறது. ஆனால் ஆன்மாவின்மேல் வரும் விருப்பம் மாறுதல் இல்லாதது. புறப்பொருள் சுகங்களை விடலாம் கொள்ளலாம், ஆன்மாவோ தள்ளத் தக்கதும் இல்லை கொள்ளத் தக்கதும் இல்லை. ஆகவே ஆன்ம இன்பத்தைக் கொள்வார் யார், விடுவார் யார், நன்றாக எண்ணிப் பார். புறப்பொருள் சுகங்களை விட்டுவிட்டவன், தன்னை வெறுத்துப் புறம்படுத்தக் கூடுமோ? ஒரு நாளும் கூடாதே!''

* விடய ஆனந்த (புறப் பொருளால் வரும் சுக) அனுபவங்களை விடும் ஆன்மாவை அவ் ஆன்மாவாலே ஒரு நாளும் விட முடியாது. ஆன்மானந்தத்தை வேறு ஒன்று பற்றுதலும் விடுதலும் இல்லை என்பதாம்.

## ஆன்மா மேல் வெறுப்பு உண்டாகிறதே

117. **மாணாக்கன்** : ஆன்மா விருப்பமானது என்றால் அதன்மேல் வெறுப்பும் அதன் காரணமாகத் தற்கொலை செய்தலும் உண்டாதல் ஏன்?''

**ஆசான்** : ''வேகின்ற கோபங்களால், என்னை நான் கொல்கிறேன் என்று சிலர் இறக்கின்ற படியினால் ஆன்மா தன்னைத் தானே கொன்று மடிகின்றது என்று நினைப்பது கேள்வி ஆகாது. ஏனென்றால் உடலைக் கொன்று கொள்பவனால் நீக்கப்பட்ட உடம்பு அவன் அல்லனே! உடம்பின்மேல் கோபம் வந்ததே யன்றி ஆன்மாவுக்குத் தன்மேல் வந்த வெறுப்பாகாதே அது? ஆன்மா ஒருபோதும் தன்னை வெறுப்பதில்லை.

* உடம்பின்மேல் கோபம், வெறுப்பு என்பன உண்டாகின்றன. நுண் உடம்பாம் மனத்திலுள்ள காமம் குரோதம் முதலியவற்றாலும் பருவுடம்பில் உள்ள வயிற்றுவலி தலைவலி போன்றவற்றாலும் அவ்வாறு கோபம் வெறுப்பு ஆகியன உண்டாகின்றன.

## ஆன்மாவே மிகுந்த விருப்புக்கு உரியது-ஓர் ஒப்பீடு

118. "விருப்புடன் ஈட்டிய செல்வங்களை விட மைந்தன் மேல் உள்ள பிரியம் அதிகம். அம் மைந்தனை விடத் தன் உடம்பின்மேல் பிரியும் அதிகம். அந்த உடம்பை விடப் பொறி புலன்கள்மேல் விருப்பு அதிகம். அப் பொறிபுலன்களினும் உயிர் மிகுந்த பிரியத்துக்கு உரியது. மனத்தோடு ஒன்றாக இருக்கும் உயிர்மூச்சினும் ஆன்மா மேல் உள்ள பிரியம் அதிகம் ஆதலால் ஆன்மாவே அடிப்படையானது. இவ் ஆன்மாவே ஏனைய மூன்று ஆன்மாக்களினும் முக்கியமானது.

மற்றைய ஆன்மாக்களாவன : I. சம நிலையில் உள்ள ஆன்மா : மகன் II. பொய்யான ஆன்மா : உடம்பு III. வினை முதல் ஆன்மா : சீவான்மா. இவை ஒன்றை விட அடுத்தது அதிகம் பிரியத்துக்கு உரியதாக உள்ளது.

## மற்றைய மூன்று (துணை நிலை) ஆன்மாக்கள் எவ்வெப்போது முக்கியம் எனல்

119. ''சாகும் தருணத்தில் தன் காணி முதலியவற்றின் ஆதீனத்துக்கு வேண்டும் தன் மகன் என்ற **கௌணான்மா** முக்கியம், II. உடல் நலம் குன்றி விட்டதால் இனி உடல் வலிமை பெருக்குவேன் என்று தனிக் கவனத்துடன் உண்டு உடல் பேணும் தருணத்தில் உடம்பு என்ற **மித்தையான்மா** முக்கியம் III. உயர் கதி அடையத் தவம் முதலியன புரியுங் காலத்தில் **சீவான்மா** முக்கியம்.

பெயர் உருவ உலகானது தனக்குக் காரணமாம் அறியாமையோடு அழியும் விடுதலைக் காலத்து ஒருவனுக்கு **ஞான ஆன்மாவாகிய தானே** மிகவும் முக்கியம் ஆகும்.

## விருப்பு வெறுப்பு நொதுமல் என்ற மூன்றும் நீங்கிய பேரின்பமே ஆன்ம சொரூபம்

120. ''துன்பம் தரும் புலியும் அனுகூலமான காரியம் செய்யுமாகில் அது விருப்புக்கு உரியதாகின்றது. அன்புக்குரிய மைந்தன் பகையான செயல் செய்வானாகில் வெறுப்புக்கு உரியனாகிறான். உலகில் இவ் இருவகையும் இல்லாத புல் முதலியன உதாசீன புத்திக்கு (நொதுமல் மதிக்கு)ப் பொருள் ஆகும். அவை ஒவ்வொரு சமயம் விருப்புக்கும் வெறுப்புக்கும் உரியவாகின்றன. ஆனால் அழுக்கற்ற தூய அறிவு மயமான ஆன்மா எவ்வாற்றானும் இவ் வண்ணம் இன்றி, விருப்பம் நீங்காதிருக்கிறது. அலகிலா ஆனந்த வடிவான உன் வடிவை (ஐங்கோசத்தினின்றும்) வேறுபடுத்தி ஆய்ந்து நுகர்வாயாக

* நொதுமல் உதாசீனம் உபேட்சை தூஷ்ணீம் ஸ்திதி என்பன ஒருபொருள் தருவன.

**ஆனந்தம் எத்தனை வகை?**

121. **மாணாக்கன்** : ''பெருமை சான்ற ஆசானே, ஆனந்தம் எத்தனை வகைப்படும்?''

**ஆசான்** : ''தன் ஞானத்தால் (ஆழ்துயில் நிலையில்) விளங்கும் பிரம்மானந்தம்; துயில் நீங்கியும் நீங்காது இருக்கும் சமயம் உண்டாகும் வாசனானந்தம் (நினைவு கூர் இன்பம்); நினைத்தது கிடைத்தலால் மனத்தில் பிரதிபிம்பம் செய்யும் விடயானந்தம் என்று ஆனந்தம் மூவகையாகும். சிலர் அதனை எட்டு வகை என்றும் வகுத்துரைப்பர். எட்டும் இம் மூன்றிலே அடங்கும். இருப்பினும் எட்டு எவை என்று கூறுவேன்.

* இனிக் கூறப்படும் முக்கியானந்தம் ஆன்மானந்தம் அத்துவிதானந்தம் என்று சொல்லப்படுவன பிரம்மானந் தத்திற்கு வேறு அல்ல.

**எண் வகை ஆனந்தம்**

122. 1. ''போகங்களில் வருகின்ற சுகம் விடய சுகம்.'' அதாவது விரும்பியது கிடைத்து அதனை நுகரும் பொழுது உண்முகமான மனத் தொழிலில் எதிரொளி செய்யும் ஆனந்தம் விடயானந்தம் ஆகும்.

2. ''நித்திரைப் போது உளது பிரம்ம சுகம்.'' ஆழ் துயில் நிலையில் உள்ள, சுயம் பிரகாசமான ஆன் மானந்தம் பிரம்மானந்தம் எனப்படும்.

3. மயக்கமாகிய துயில் தெளிந்து வரும் சமயம் உள்ள சுகம் வாசனைச் சுகம். விழித்து எழுந்தபின் சில நிமிடங்கள் அது பற்றி நினைவு கூர்ந்து எழும் ஆனந்தம் வாசனானந்தம்.

4. ''முழுப் பிரியம் ஆன்ம சுகம்''. பொருள் புத்திரர் இவற்றிலுள்ள அன்பு கைவிடப் படினும் தன்பால் உள்ள அன்பு கைவிடப்படாமையால் அன்பின் முடிவெல்லைக்கு நிலைக்களன் ஆன ஆன்மானந்தம்.

5. ''யோகத்தில் உள்ள முக்கிய சுகம்''. அறியாமைத் திரை அடியோடு அகன்ற சமாதிநிலைப் பேரின்பம் முக்கியானந்தம்.

6. ''உதாசீனம் உற்ற சுகம்ஈ நிச சுகம்''. விருப்பு வெறுப்பு இரண்டும் இல்லாத நொதுமல் நிலையில் வரும் ஆனந்தம் நிசானந்தம்.

7. ''ஏகத்தை நோக்கல் அத்துவித சுகம்''. பெயர் வடிவு என்பன பொய் என்று உணர்ந்து அவற்றை விலக்கும் தெள்ளறிவால் இரண்டற்றுத் தன்னை நோக்கும்போது தோன்றுவது அத்வைத ஆனந்தம்.

8. மறை வாக்குகளின் வழி ஆன்ம ஆய்வினால் உதயமாம் ஆனந்தம் (பிரம்ம) வித்தியானந்தமாம்.

### புலனின்பம் : விடயானந்தம்

123. ''முற்கூறிய இன்பங்களின் வேறுபாடுகளான தன்மை களைச் சொல்லக் கேட்பாயாக. விழித்திருக்கும் போது அங்குமிங்கும் அலைகின்றவன் களைத்துப் போய்ப் படுக்கையில் ஓய்கிறான். அவன் மனம் உள்முகமாகத் திரும்புகிறது. அந்த நிலையில் சுயம் பிரகாசமான சித்தின் நிழல் பிரதிபலிக்கிறது. அவ்வாறு அவன் மனவிருத்தி ஆன்மானந்த பிரதிபிம்பம் பெறுதலால் அவன் அனுபவிக்கும் சுகம் விடய (புறப் பொருள்) ஆனந்தம் எனப்படும்.

### பிரம்மானந்தம்

124. ''புலனின்பம் (விடயானந்தம்) ஆனது நுகர்வோன் நுகர்ச்சி நுகர்பொருள் என்ற மும்மை சேர்ந்து இருத் தலால் அது துன்பம் சார்ந்தது என்று கருதி அது தீர்தற் பொருட்டு, பருந்து ஆகாயத்திலிருந்து வேகமாக வந்து தன் கூட்டில் விழுந்து அடங்குதல் போல, மனத்தின் புடைபெயர்ச்சி இன்றி உறங்கும் அந்தச் சீவன், எல்லை யற்ற பிரம்மத்தோடு ஒன்றுகிறான். ஒப்பற்ற தன்னை யன்றிப் பிறிது எதனையும் கருதானாய் ஆனந்தமயம்

ஆகிறான். (ஆழ்துயிலின் கண்-சுழுத்தியின் கண் உள்ள) அவ் ஆனந்தம் பிரம்மானந்தம்.

## பிரம்மானந்த இலக்கணம் சுருதியுக்தி அனுபவ பூர்வமாகக் கூறல்

125. ''அத் துயில் இன்பம் (சுழுத்தியில் சீவன் அடைந்துள்ள) பிரம்மானந்தம் என்பது சுருதிகள் கூறும் கருத்தாகும். உறங்குவோர் உறக்கம் நன்கு அமைய மலர் அணையை நன்கு அமைத்துக் கொள்வர். சுழுத்தியின் கண் ஆனந்தம் உண்டு என்பதற்கு யுக்தியாகும் அது. நன்மை தீமை, ஆண் பெண், என்று தெரியாமல் கூடியிருக்கும் பொழுது உள் வெளி விவகாரங்கள் எதனையும் கருதாது இருக்கும் அனுபவ ஆனந்த நிலை பிரம்மானந்தம்.''

## மனத்தின் நினைவாக எழுவது பற்றிய வினா

126 **மாணாக்கன் :** ''தேவரும் துதிக்கும், வல்லமை யாவும் பெற்ற ஆசானே, காரணமும் விளைவுமாயுள்ள இந்த உலகில் ஒருவனது அனுபவம் மற்றொருவன் மனத்தில் உதியாது. மனமய கோசத்தோடு விஞ்ஞான மய கோசமும் இறக்கின்ற துயிலை அடைந்து ஆனந்த மயன் அல்லவா அனுபவிக்கிறான்? இந்தச் சுகமானது விஞ்ஞான மயனான கருத்தாவின் காரண வடிவமான மனத்தில் நினைவாக எழுதல் எவ்வாறு பொருந்தும்? இதை விளக்கியருளல் வேண்டும்.''

## வெல்லமும் பாகும் போல்வர்

127 **ஆசான்** : ''நெய்யும் வெண்ணெயும் பெயர் வடிவு என அறியும் மனத்திற்கு வேறுபட்டனவேயன்றிச் சுவை யில் ஒன்றேதான். அவ்வாறே ஆனந்தமயன் விஞ்ஞான மயன் என்ற இருவரும் முறையே அவித்தை அந்தக் கரணம் என்ற ஆதாரங்களின் நோக்கில் வேறுபட்டவர் கள், ஆனால் சித்தின் பிரதிபிம்ப வடிவினர் என்ற நோக்கில் ஒற்றுமை யுடையவர்கள். விழிப்பு நிலையில் விஞ்ஞானமயன் துன்பம் தரும் மனத்துடன் சேர்ந்திருக் கிறது. மனம் நழுவி விட்டால் அதுவே ஆழ்துயில்

நிலை, அனுபவிப்பவன் ஆனந்தமயன். அவர்கள் மழைத்துளியும் தண்ணீரும் போல்வார்கள்; வெல்லமும் பாகும் போல்வார்கள்.''

**வாசனானந்தம்**

128 **மாணாக்கன்** : ''அப்படி யாயின் ஒன்றிவிட்ட ஆனந்தமயன் பிரம்மப் பேரின்ப நிலையை விடுவானேன், விழிப்பு நிலைக்கு வருவானேன்?''

**ஆசான்** : ''முன் செய்த வினையானது (பூர்வ கன்மம்) ஆனந்தமயனை வெளியே இழுத்துக் கொண்டு வருகிறது. ஆழ்துயில் (சுழுத்தி) விட்டு எழுந்தவன் நன்றான அந்தச் சுகத்தை விட்டு அகலான், புறம்பிலும் செல்லான், மறதியையும் அடையான். ஆழ்துயில் அன்று, விழிப்பும் அன்று, ஆயினும் அவை இரண்டுமாம் என்று சில கணம் உறங்கினான். அந்தச் சில கணம் தோன்றும் ஆனந்தம் வாசனானந்தம்.

**நிசானந்தம்**

129 ''(அந்த வாசனானந்தத்திலே இருக்க முடியாமல் அது நீங்குகிறது) உடல் நான் என்று நினைக்கிறான். உலக இடர்கள் வந்து அலைக்க ஆழ்துயிலில் அனுபவித்த ஆனந்தத்தை மறந்து விடுகிறான். முன்னர்ச் செய்து அறப்பாவம் என்பன அவனுக்குச் சுகதுக்கம் தருகின்றன. அந்தச் சுகதுக்கங்களின் நடுவில் சும்மா இருக்கும் நிலை, அவனுக்கு உதாசீனத் தன்மை (இன்ப துன்பம் அற்ற நொதுமல் நிலை) உண்டாக்குகிறது. இந்த நிலையை ''ஒரு சிந்தையுமற இருந்தேன்'' (ஒரு நினைப்பும் இல்லாமல் இருந்தேன்) என்று எத்தகையவரும் கூறு தலால் அறிகிறோம். இவ்வாறான உதாசீன காலத்துத் தோன்றும் ஆனந்தம் நிசானந்தம் ஆகும்.

* நனவு நிலையிலும் நிசானந்தத்தின் தோற்றம் உண்டு என்பது அறியத் தக்கது.

**முக்கியானந்தம்**

130 ''சும்மா இருந்தேன்'' என்ற உதாசீன நிலை

(இன்பமான நிசானந்தம்) முக்கியானந்தமோ எனின் இல்லை, குடத்தின் புறத்தே உள்ள ஈரம் குடத்துத் தண்ணீர் ஆகாது அவ்வாறே உதாசீன நிலைக்கண் ''நான் இருக்கிறேன்'' என்ற சாமானிய அகந்தை உண்டு; ஆனால் உலகப் பொருள்களை நினையாமல் மறந்து துயிலுதலும் இல்லாமல உடலானது தறிபோல் அசையாது இருக்கும் சமமாகிய நிலை (பிரம்ம சொரூப மாகி விட்ட நிலை)யே முக்கிய ஆனந்தமாகும்.

## இன்பங்களின் அளவு

131. ''உலகு அனைத்தையும் ஒரு குடை நிழலில் ஆளும், இளமை அழகு கல்வி வலிமைகள் உள்ள அரசன் அனுப விக்கும் இன்பம் பெரிது. அதனினும் நூறு மடங்கு உயர்ந்தது மானுட கந்தருவர், நுகரும் இன்பம். அவ் வாறே தேவ கந்தருவர், ஒளி மயமான பித்ருக்கள், பின்னர்த் தேவராயினோர், முக்கிய தேவர்கள் (வசுக்கள் எண்மர் கதிரவர் பன்னிருவர் உருத்திரர் பதினொருவர்) இந்திரன், பிருகஸ்பதி (தேவகுரு:வியாழன்), பிராசாபதி (விராட் : பருவுலகைப் படைப்போன்), இரணியகருப்பன் (பிரமன்) ஆகியோர் நுகரும் இன்பங்கள் நிரலே ஒன்றி னொன்று நூறு மடங்கு பெரியவை. இருப்பினும் அவை யெல்லாம் பிரம்மானந்த அனுபவத்தை நோக்க, நீர்த் திவலைகளும் நுரைத் தெறிப்புகளும் போல்வனவே. பிரம்மானந்தமோ பிரளய வெள்ளம் போன்றது!

132. ''துரியம் கடந்த நிலையில் (துரியாதீதம்) மிக உயர்ந்த ஏழாம் பூமியில் இருப்போர் யாவராயினும் அவர் நாரதர் சுகர் முதலிய முனிவரர் சிவன் மால் அயன் ஆகிய மூவர்களுக்கு உள்ள அனுபவமாகிய அறிவானந்த இன் பத்தில் இருப்பார். பார்வை செயல் என்பன அற்று உறக்கமின்றி அறிவானந்த வடிவாகிய இந் நிலையை முக்கிய அனுபவானந்தம என்று கூறினோம். அதனை அனுபவிப்போரின் அடிப்பொடி என் தலைமேல் தரிக்கத் தக்கது.

**வித்தியானந்தம்**

133. ''இதுகாறும் ஐந்துவித ஆனந்தம் கூறினோம். இனி வித்தியானந்தம் பற்றிக் கூறுவோம். மாயை, சத் சித் ஆனந்தம் பற்றி முன்பு விளக்கியபோது ஆன்ம இன்பம், அத்துவித இன்பம் என்ற இரண்டும் உரைத்தோம். இருமை அழியப் பெற்ற மைந்தனே, இன்னும் உனக்கு ஏதாவது ஐயம் இருந்தால் கேள்.''

**உண்மை அறிவு இன்பம் - ஒன்றா? மூன்றா?**

134 **மாணாக்கன்** : ''முருகனையும் என்னையும் உலகினையும் படைத்து அளித்துக் காக்கும் ஆசானே, சத் சித் ஆனந்தம் பற்றி நீங்கள் உரைத்தீர்கள். அவை மூன்றும் வெவ்வேறாகப் பொருள் வேறுபட்டனவாகத் தோன்றுகின்றன. அப்படியிருக்க, ஏற்கெனவே, தாவிச் செல்லும் தன்மையுள்ள மனம் அதன்மேல் (மொத்தமான அந்தச் சத் சித் ஆனந்தம் என்பதன் மேல்) எப்படி நிலை கொண்டு நிற்கும்? அம் மூன்று சொற்களும் ஒரு பொருளைத் தரும் (பரியாயச்) சொற்களும் இல்லை. ஆகலின் அவற்றின் பொருளை, தேனீக்கள் ஒன்றாகவும் ஒருசுவைத்தாகவும் எடுத்துச் சேர்த்த தேன் போன்று தெரிவிக்க வேண்டும்.

**தண்ணீர் மூன்றாகுமா? நெருப்பு மூன்றாகுமா?**

135. ''குளிர்ச்சி நெகிழ்ச்சி வெண்மை என்று முக் குணம் கொண்டிருக்கிறது தண்ணீர் என்றால், தண்ணீர் மூன்று என்று பொருளா? ஒளி வெம்மை சிவப்பு என்று மூன்று பண்புடைமையின் நெருப்பு முப் பொருள் ஆகுமா? அவ்வாறே வெளி முதலாக உள்ள உலகம், அசத்து மூடம் (சடம்) இடர் (துக்கம்) என்னும் மூன்றாம் என்று வேறுபடுத்தி விலக்கி எளிதில் உணருமாறு அவற்றுக்கு எதிராக மொழிந்த சத்து சித்து ஆனந்தம் என்று பிரம்மத்தினை வருணிக்கிறது வேதம். அஃது ஒன்றே, மூன்று அன்று.

## ஆன்மாவின் தன்மைகள் (உடன்பாட்டு முறையில்)

136. என்றும் உள்ளது (நித்தியம்) நிறைவுடையது (பூரணம்) ஒன்றானது (ஏகம்) உயர் பொருள் (பரமார்த்தம்) மேலாம் செம்பொருள் (பரப்பிரம்மம்) காரண மாத்திரம் (நிதானம்) அமைதி (சாந்தம்) இருப்பது (சத்தியம்) மோட்சத் தனிநிலை (கேவலம்) நாலாவது (துரியம்) யாவற்றிலும் நிகர்நிலை (சமம்) காண்பது (திருக்கு) பட்டடை போல் திரிபின்றி உள்ளிருப்போன் (கூடஸ்தன்) சாட்சி அறிவு (போதம்) தூய்மை (சுத்தம்) குறிப்பால் அறிவிக்கப்படுவது (இலக்கியம்) எக்காலத்தும் ஒரே வடிவினது (சனாதனம்) உடல் மூன்றால் வளைவுபட்டிருப்பது (சீவன்) மெய்யானது (தத்துவம்) விண், அறிவொளி (சோதி) தான் (ஆன்மா) விடுதலை (முத்தம்) பரந்திருப்பது (விபு) நுண்மை (சூக்குமம்).

—இவ்வாறு ஆன்மாவின் குணங்களை வேதம் உடன்பாட்டு முறையில் எடுத்துரைகின்றது.

## ஆன்மாவின் தன்மைகள் [எதிர் முறையில்]

137. ''சலனம் அற்றது (அசலம்) கறையில்லாதது (நிரஞ்சனம்) மரணமற்றது (அமிர்தம்) அளவைக்குப் பொருளாகாதது (அப்பிரமேயம்) மாசிலாதது [விமலம்] சொல் கடந்தது (வசனாதீதம்) நோயற்றது (அநாமயம்) ஒட்டு இல்லாதது (அசங்கம்) உவமையில்லாதது (அதுலம்) இடையீடு அற்றது (நிரந்தரம்) அடைதற்கு அரிதானது [அகோசரம்] பகுப்பற்றது (அகண்டம்) பிறவாதது [அஜம்] முடிவிலாதது (அனந்தம்) குணம் அற்றது (நிர்க்குணம்) வடிவங்களற்றது (நிஷ்களம்) உறுப்பிலாதது (நிரவயவம்) தொடக்கம் இல்லாதது (அநாதி) உடப்பிலாதது (அசரீரம்) பிறப்பு இறப்பு வளர்ச்சி முதலிய வேறுபாடு இல்லாதது (அவிகாரம்) இரண்டற்றது (அத்துவிதம்)

—இவ்வாறு ஆன்மாவின் குணங்களை வேதம் எதிர் மறைச் சொற்களால் எடுத்துரைக்கின்றது.

**அடைமொழி மூன்று; சுவை ஒன்று**

138 "இவ்வாறு உடன்பாடாகவும் எதிர்மறையாகவும் எடுத்து உரைக்கப்பட்ட குணங்கள் எல்லாம் நன்கு ஒருமித்துக் கூடிய பொருள் ஒன்றேயன்றி இரண்டு அல்ல. ஒரு பொருளின் பண்புகளைச் சொல்லக் கூடியவை, சொல் லால் வேறுபட்டன, பொருளால் அல்ல. அவ்வாறே இருப்பு அறிவு இன்பம்-சத் சித் ஆனந்தம்-என்ற அடை மொழிப் பொருளான பிரம்மமும் ஒன்றே, ஆகலின் அதன் ஒருமையை உணர்ந்து அலகிலா நிறைவாக நீ ஆகக் கடவாய்.

* கைமலை, கறையடி, புழைக்கை என்னும் சொற்கள் பின்னச் சொல் ஆயினும் பொருளால் (யானை என்ற பொருளால்) பின்னம் ஆகாது ஒன்றேயாம். தந்தை மகன் தம்பி என்று ஒருவன் பல சொற்களால்-உறவு நிலையால்-அழைக்கப் படினும் அவன் அனேகன் ஆகான் ஒருவனேயாவன். அவ்வாறே சத் சித் ஆனந்தம் முதலிய சொற்களால் மறை கூறும் பிரம்மமும் அலகிலா ஒரு சுவையதாய் இருத்தலின் ஐயம் ஒழிந்து அதுவாயிரு என்பதாம்.

**பிரம்மத்தின் குணங்கள் அல்ல, பிரம்மமே!**

139. "சற்குணனே, குணமற்ற பிரம்மத்திற்குக் குணங்கள் உரைத்தது, தாய்மலடி என்று கூறுவதுபோல் முரண் பட்டு இருக்கிறதே என்று கருதாதே. பிறர் உரைத்துக் கேளாமல் ஒரு பொருளின் நிலையை அறியவல்ல திற முடையாரும் இருக்கின்றனரோ? அவ்வாறே அருள் சான்ற வேதங்களும். பயிற்சியாளர் சீவன்முத்தி அடையும் பொருட்டுப் பிரம்ம ஞானம் தோன்ற உரைத்தன. உரைத்த அக் குணங்கள் பிரம்மத்தின் குணங்கள் அல்ல; பிரம்ம சொரூபமே தாம்!"

**"யுக்திக்கும் பொருந்தக் கூறுங்கள்"**

140. **மாணாக்கன்** : "என் அறியாமை, இருள் கெட உதித்த கோடி அருணன் போலும் குருவே, இன்னும்

நான் வேண்டுதல் கேட்பீர்களாக.சுருதிகள் மொழிந்தபடி, தனி நிறைவாம் என் உண்மை வடிவம் என் உள்ளத்தே அழுந்துமாறு அறிந்து கொண்டேன். அதற்கு ஏற்ப யுக்தியும் பொருந்த உரைப்பீர்களானால் அது என் நெஞ்சில் பசுமரத்து ஆணி போல் உறைத்து நிற்கும்.

141. **ஆசான்** : I. ''சத் (இருப்பு) என்பதே சித் (விளக்கம்) ஆகும். சத்துக்குச் சித் வேறுபட்டது எனில் அப்போது அது (சத்) இல்லை என்று ஆகின்றது. அது இல்லை என்றால் அஃது எங்ஙனம் சாட்சியாகும்?

II. சத்தே சித்தாயிருத்தல் போல் சித்தே சத்தா யிருக்கிறது. சித்துக்குச் சத்து வேறுபட்டது எனில் அது (சித்) சடப் பொருள் ஆகும். சடப்பொருளுக்கு இருப்புக் கிடையாது.

III. இங்ஙனம் ஒத்தே தோன்றிய சத்தும் சித்தும் ஆனந்தத்துக்கு ஒத்தே உள்ளன. சத் சித் ஆகியவற்றுக்கு ஆனந்தம் வேறுபட்டது எனின் அப்பொழுது ஆனந்தத் திற்கு இருப்பும் விளக்கமும் இல்லை. அங்ஙனம் இருப்பும் விளக்கமும் இல்லை யெனில் ஆனந்தம், அசத்தும் சடமும் ஆகும். அசத்து சடம் என்பவற்றால் ஆனந்த அனுபவம் உண்டாகாது ஆகவே சத்தும் சித்தும் ஆனந்தமாம்.

* சத்தே சித் ஆகாவிடில் தன்னை அறியும் தன்மை இல்லை. சித்தே சத் ஆகாவிடில் அனைத்துப் பிரம்மமா விளங்குதல் இல்லை. இவ் விருமையின் ஒருமையில் உதிப்பதே வேறற்ற பேரின்பம் [நிரதிசயானந்தம்]. வேறுபட்டதாயின் இச் சச்சிதானந்தம் பொய்—சட-துக்கம் ஆகும்.

142. ''முக் காலத்தும் அழியாத சத் விளங்குவது [விளக்குப் போன்று] தன்னாலா [குடம் போன்று] வே று ஒன்றாலா எனில் வேறு ஒன்றால் என்று கூறக் கூடும், அங்ஙனம் கூறினால் சத்திற்கு வேறான அந்த வேறொன்று சத்தா? இல்லை. அசத்து என்றால் அது ''மலடிமகன்

தொழில் புரிந்தான்'' என்றாற் போல்வதாம். எனவே, அசத்தினால் சத்து (இருப்பு) விளங்குகிறது என்பது பொருந்தாது. அந்த அசத்தையும், சத்து அசத்து என்று பிரித்துப் பிரித்துச் சொல்லிக்கொண்டே போனால் அது முடிவிலாமை (அனவத்தை)க் குற்றமாகும். அதனை விட்டொழிதல் வேண்டும்.

143. ''சச்சிதானந்தம் ஒரே சுவையானது (ஏக ரசம்) என்பதற்குச் சுருதி, யுக்தி என்பன மாறுபடாது இருத்தல் போல் அனுபவமும் ஒத்திருத்தல் கேட்பாயாக. ஆழ்துயில் நிலையில் கண்ட ஆனந்தம் விழித்தபோது (சுகமாய் உறங்கினேன் என்று) நினைவு வடிவில் தோன்றுகிறது. அந்த ஆனந்தமே அறிவாம் (சித் ஆம்) வேறில்லை. அந்த ஆனந்தம் தவிர வேறு சித்துக் கிடையாது. ஆகவே அறிவானந்தம் ஒருமைச் சுவைத்து. ஊழி முடிவு, ஆழ்துயில் என்னும் இரு நிலையிலும் நீ அறிவின்ப வடிவாய் இருந்து (இருத்தல்:சத்) இருளை அறிகிறாய். ஆகவே நீ சச்சிதானந்த வடிவன். இதனைப் புத்தியால் கருதி முழு நிறை பிரம்மமாக இருப்பாயாக.''

### மாணாக்கனின் பேரின்ப அனுபவம்

144. ஞானநூல் பலவும் நன்கு உணர்ந்து சமாதி நிலையும் முறையே அடையப் பெற்ற குரு மொழிந்தபடி சுருதிக்கும் யுக்திக்கும் ஏற்ப, பல மலரில் ஈக்கள் திரட்டிய தேன் போல ஒரே சுவைத்தான பிரம்ம அனுபவத்தை விடாமல் கொண்டு நெடுநேரம் கண்மூடிச் சமாதியில் இருந்தான். பின் கண் விழித்துப் பார்த்தபோது பல வடிவாம் இயங்கு திணை நிலைத் திணைப் பொருள்கள் பலவும் சித்திரமாகத் தோன்றும் ஓர் ஆடையாகத் தன்னைக் கண்டான்.

### ஏழாம் நிலை

145. **மாணாக்கன்** : ''இதயமொத்த சற்குருவே, இந்த அனுபவத்தை விடவும் வேறொன்று நமக்கு வேண்டுவது உளதோ? அதையே உரைத்தலும் அதையே நினைத்தலும் திளைத்து இருத்தலும் அன்றி ஞானிகளுக்கு வேறு நியமம் இருக்கிறதோ? தாங்கள் முன்பு உரைத்த

துரியாதீதம் என்னும் ஏழாம் நிலை முக்கியம் என்ற தன்மையையும் எனக்கு எளிதாகத் தெரியும் வண்ணம் சொல்லுதல் வேண்டும்.''

## அஞ்ஞானபூமி-அறியாமைப் படிநிலை-ஏழு

146. **ஆசான்** : ''ஆராய்ந்த மேலோர், அஞ்ஞான பூமிகள் (அறியாமைப் படிநிலைகள்) ஏழ் எனவும் ஞான பூமிகள் (அறிவுப் படிநிலைகள்) ஏழ் எனவும் கணித்துள்ளனர்.

அஞ்ஞான பூமிகள் ஏழினை முதலிற் கூறுவேன், கேட்பாயாக.

1) தனிவித்து நனவு (பீஜ ஜாக்கிரம்) 2) நனவு (ஜாக்கிரம்) 3) பெரு நனவு (மகா ஜாக்கிரம்) 4) நனாக் கனவு (ஜாக்கிர சொப்பனம்) 5) கனவு (சொப்பனம்) 6) கனா நனவு (சொப்பன ஜாக்கிரம்) 7) ஆழ்துயில் (சுழுத்தி: சுஷுப்தி).

## அஞ்ஞான பூமி விவரம்

147. ''1 தொடக்கத்தில் இருப்பு நிலையிலிருந்து உண்டான விழிப்பில், அறிவு மட்டும் எழுகிறது. அது வித்து நனவு ஆகும். 2. இந்த விழிப்பு நிலையில் இதற்கு முன் இல்லாத அகந்தை, முளை போல் நுட்பமாக எழுகிறது. அது நனவு ஆகும். 3, பிறவி தோறும் யான் எனது என்னும் செருக்கு வளர்ந்து வலுப் பெறுகிறது. அது பெருநனவு (மகா ஜாக்கிரம்) 4, முன்னர்த் தான் அறிந்தது அல்லது அறியாதது பற்றி அக மமதையால் மனோராச்சியம் செய்தல் நனாக் கனவு.

148. ''5. நன்றாக உண்டு உறங்கி மனோராச்சியம் (வீண் கற்பனை) செய்வது கனவு. 6, பண்டு கனாக் கண்டு மறந்ததை மீண்டும் நினைவு கூரல் கனாநனவு. 7. முந்திய ஆறு நிலைகளும் நீங்கப் பெற்று அஞ்ஞான இருளால் மூடப்பட்ட நிலையே ஆழ்துயில் (சுழுத்தி) நிலை.

இவையே அஞ்ஞான பூமியின் வகைகள் ஏழு. இனி முத்தி தரும் ஞானபூமி (படிநிலை) கூறுவோம் கேட்பாயாக.

149. ''களங்கமில் மைந்தா, முதற்பூமி சுபேச்சை(சுப இச்சை; நன்மை நாட்டம்). இரண்டாவது விசாரணை (மனனம்). மூன்றாவது தனுமானசி (மனம் சிறுகல்; அழுக்கு நினைவுகளாம் இச்சைகளை விடுதல்). நான்காவது தத்துவாபத்தி (உண்மையில் நிலைப்புறல்; தன்னை யறிதல்). ஐந்தாவது அசம் சத்தி (பெயர் வடிவுத் தொடர்பு அறுத்தல்). ஆறாவது பதார்த்த பாவனை (பதார்த்த நினைவு ஒழிதல்). ஏழாவது துரியம்.

## ஞான பூமி - அறிவுப்படி நிலை-விளக்கம்

150. ''1. தீயோர் குழாத்தை விட்டு நீங்கிப் பிரம்ம ஞானம் விரும்புவது சுப இச்சை ஆகும். 2. நல்லோர் கூட்டத்தைச் சேர்ந்து அவர்களின் உரை கேட்டு ஞான நூல் மனனம் செய்தல் விசாரணை. 3. மனைவி மக்கள் செல்வம் என்பவற்றில் விருப்பு விடல் தனுமானசி. முற் கூறிய மூன்று பூமிகளில் இருந்து பெற்ற பயிற்சி வலிமையால் தூய நினைவு கூடிய மனத்தில் மெய் யுணர்வு பிறத்தல் சத்துவ ஆபத்தி (மெய் அடைவு) ஆகும்.

151. ''சீவ-பிரம்ம ஐக்கியத்தில் மனம் அழுந்தி (உறைத்து) அஞ்ஞானத்தையும் அதன் செயல்களையும் நினையா திருத்தல் அசம் சத்தியாகும். அத்துவிதானந்தம் மேலிட, காண்பான் காட்சி காண் பொருள் வடிவு என்ற மூன்றும் (திரிபுடி) நீங்கப் பெறல் பதார்த்த அபாவனை. இவ் ஆறு பூமிகளில் பயிற்சி மிகலால், பிரம்மம் இருக்குமாறு இருக்கும் மோன நிலையே துரியம் ஆகும்.

இந்தத் துரிய பூமியை முன்பு துரியாதீதம் என்று கூறினேன். அதன் காரணம் கூறுகிறேன், கேட்பாயாக.

## துரியாதீதம்

152. ''முதலிற் கூறிய பூமிகள் மூன்றிலும் (சுபஇச்சை

விசாரணை தனுமானசி என்பன) ஆன்ம ஞானம் முழுமையாக வரப் பெறல் இல்லை. உலகம் உண்மை யாகத் தோன்றுதலால் அவை நனவு நிலையாம். நான் காம் பூமியில் உலகம் கனவு போல் தோன்றலால் கனவாம். அக் கனவு மெல்ல நீங்குகின்ற ஐந்தாம் பூமியே சுழுத்தியாகும். இம் மூன்று (நனவு கனவு சுழுத்தி என்பன) அவத்தைக்கு வேறாக இருப்பது அடுத்ததான துரியம். ஆனந்த மிகும் ஆறாவது பூமி அது. இத் துரியத்திற்கு அப்பால் சத்து அத்து என்ற கற்பனைகள் ஒரு சிறிதும் கிடையா. அது துரியாதீத பூமியாம். இந்தத் துரியாதீத பூமியைச் சுருதி மௌன மாகக் (குறிப்பு விருத்தியால்) காட்டுகின்றது.

153. ''அன்பனே, சுருதி உணர்ந்த மேலோர் துரிய நிலத் தைத் துரியாதீதம் என்று கூறினால், மந்த புத்தியுடை யார்க்கு மயக்கம் உண்டாகும் என்று எண்ணி விதேக முத்தியைத் துரியாதீத நிலம் என்று கூறுவர். அவ்வாறு கூறும் கணக்கின்படி ஆறாம் பூமியான பதார்த்த அபாவனையைக் காட சுழுத்தி (கனமான சுழுத்தி) என்பர்.

அந்தக் கணக்கின்படி துரியாதீதத்தை ஏழாம் பூமி யாகக் கூறுவர். இவ்வாறு அவர் கூறும் ஞான பூமி வேறுபாடு இன்னும் உண்டு. கூறுவன், கேட்பாயாக.

## ஞான பூமி வேறுபாடு

154. ''ஏழு ஞான பூமிகளுள் முதலில் உள்ள (சுப இச்சை, விசாரணை, தனுமானசி என்ற) மூன்று நிலையினரும் பயிற்சி நிலையினரே, சீவன் முத்தர் அல்லர்.

பின்னே யுள்ள நிலங்கள் மூன்றில் (அசம் சத்தி பதார்த்த அபாவனை துரியம் என்பவற்றில்) முறையே ஏறியோர், வரன் வரியான் வரிட்டன் எனப்படுவோ ராவர். நடுவிலுள்ள நாலாம் பூமி (சத்துவாபத்தி)யினை அடைந்த ஞானிகள் பிரம்மவித் எனப்படுவர். வித், வரன், வரியன், வரிட்டன் என்ற இந் நால்வரும் சீவன்

முத்தராவர். மேலும் அந்த ஞான நிலங்களின் பெருமையை நீ அறிதற் பொருட்டுக் கூறுவன், கேட் பாயாக.

155. ''மூன்று பூமிகள் (படிநிலைகள்) அடைந்து பழகி நான்காம் பூமியை அடையும் முன் மரணம் அடைந் தோர் மேலாம் (சுவர்க்கம் முதலிய) பதம் பெற்று நுகர்ந்து பின் மெல்ல மெல்ல வந்து பூமியிற் பிறப்பர். மயக்கத்திற்கு ஏதுவான பிறவிகளை அவர் இங்கு அடையார். முதல் பூமியான சுபேச்சை என்ற நிலை கைவசம் ஆவதே கடினம். அது கைவரப் பெற்றால் முத்தி அவனுக்குத் திண்ணம் என்று கூறலாம்.

156. ''இப் புவியில் ஞானப் படிநிலையில் முதலாவது அல்லது இரண்டாவதை அடைந்தோர், மிலேச்சர் ஆயினும் விடுதலை பெற்றோரே (சீவன் முத்தரே) யாவர். குரு வடிகள் ஆணையாக இஃது உண்மை.* இதனைப் பொய்யுரை என்போர் கேடு அடைவர். நடுவு நிலை யான மறைகளை நீ ஐயுறாதே.

மறை சொல்லும் மொழிவழியே உறுதியுடைய வனாய் ''அகம் பிரம்மம்'' (கூடஸ்தனே பிரம்மம்; பிரம்மமே கூடஸ்தன்), என்று சமாதி நிலை கொண்டு தெளிவாயாக.

* இந் நூலில் ஆசிரியர் ஆணையிட்டுக் கூறும் இடம் மூன்று. அவற்றுள் இது மூன்றாவது.

* 'அகம் பிரம்மம்' 'பிரம்மம் அகம்' என்று சொல் மாற்றிக் கூறல் வேண்டும். மகா வாக்கியங்களை இவ்வாறே மாறிக் கூறல் வேண்டும்.

**துறவு அவசியமா?**

157. **மாணாக்கன்** ; ''முளைக்கும் நெல் போல் பிறந்து இறக்கும் என்னை அரிசி போன்று, அறியாமை நீக்கி மரணமிலாப் பெருவாழ்வு தந்த ஆசிரியரே!

வெறுக்கத் தக்க கொடியோரும் முடிவான விடுதலை (விதேக முத்தி) அடைய இட்டுச் செல்லும் ஞான பூமி என்று கூறினீர்கள். மனைவியையும் குடும்பத்தையும் விட்டுத் துறவு பூண்டு தனித்திருந்தால் ஒழிய முத்தி (விடுதலை) பெற முடியாது என்று சிலர் சொல்கிறார்களே, அந்த மயக்கத்தை நீக்கல் வேண்டும்.''

### துறவு நான்கு வகை

158. **ஆசான்** :''ஒழுக்கம் உடையோர் புகழும் மைந்தனே, உன் ஐயம் நன்று. கட்டு (பந்தம்) அழியும் துறவு நான்கு வகை. உலகில் படுதுயர் யாவும் கெடுக்க வல்லவை அவை.

1. குடீசகம் 2. பகூதகம் 3. அம்சம் (ஹம்சம்) 4. பரம அம்சம் (பரம ஹம்சம்) என்பன அவை.

துறவுக்குக் காரணம் (ஒன்றிலும்) ஆசையின்மையே (ஆசையின்மை: விராகம், நிராசை, பற்றறுதி) தவிர வேடம் (காவி முதலியன) அன்று.

159. ''ஆசையின்மை (விராகம்) மூன்று வகைப்படும் 1. மந்தம் 2. தீவிரம் 3. தீவிரதரம் என்பன அவை. அவற்றுள்,

மனைவி மக்களையோ பொருளையோ இழந்தோ பிறவகையாலோ வெந்துயர் வரும் பொழுது குடும்ப வாழ்வை (சம்சாரத்தை) வெறுக்கும் விராகம் (வைராக்கியம்) **மந்தம்** ஆகும் இந்த உடல் உள்ளவரை மனைவி செல்வம் முதலியன வேண்டா என்று துறத்தல் **தீவிரம்**. அந்தணர் கூறுவதும் பெரும் புண்ணியத்தால் கிடைப்பதும் ஆன பிரம்ம லோகம் (சிவலோகம் வைகுந்தம்) என்பது வெறும் பொய் என்று துறத்தல் தீவிர தரம் (மிக்க தீவிரம்) ஆகும்.

160. ''மந்த நிலைப் பற்றறுதி, துறவுக்குத் தகுதி ஆகாது. நால்வகைத் துறவில் ஒன்றற்கும் அது பொருந்தாது. ஆழ்ந்த நிலைப் பற்றறுதி (தீவிர விராகம்) முதலில்

உள்ள இருவகைத் துறவுக்குத் திறம் தரும். நடந்து திரிந்து அலைய வலு இல்லாதார்க்குக் **குடிசகம்** (ஓர் இடத்தில் குடிசை போட்டுக் கொண்டு இருப்பது) என்பதும் உலகெலாம் அலைந்து திரிய வல்லார்க்குப் **பகூதமும்** (யாத்திரை செய்துகொண்டிருத்தல்) பொருந்துவன என்று உரைத்தனர் மேலோர்.

161. ''மிக ஆழ்ந்த பற்றறுதி (தீவிர தர விராகம்) உடையோர் **அம்சம்** (ஹம்சம்). **பரம் அம்சம்** (பரம ஹம்சம்) என்ற நிலையை மேற்கொள்ளலாம் (வரிசையில் வரலாம்). அவர்கள் உயர் உலகம் (சத்யலோகம்) புகுவர், இம்மையில் விடுதலை இல்லை ஆனால் பரம அம்சர்கள் தகுதி மிக்கவர்கள். ஞானத்தால் அவர்கள் வீடு அடையலாம். உறுதியுள்ளோராகிய பரம அம்சத் துறவோர் இருவகையினர்.

**பரம ஹம்சர் இருவகையினர்**

162. ''பரம அம்சரில் ஒரு பிரிவு, தன்னை அறியும் ஆர்வம், மிக்கோர் (சிஞ்ஞாசு). அவர்கள் ஞான பூமியாம் அறிவு அடுக்கம் ஏழில் முதல் மூன்றில் நடக்கும் அறிவாளர். இரண்டாவது பிரிவு, தன்னை அறிந்த தூயர், ஞானவான்; இங்கே இப்போது விடுதலை கண்ட மேலோர். இவருள் முதல் வகையினரான தன்னை அறியும் ஆர்வ மிக்க பரம அம்சர் (சிஞ்ஞாசு) இரு வகையினராக உள்ளனர்.

163. ''மகனே, குடும்பக் கட்டுகளை (பந்தம்) விட்டுச் சிலர் துறவோர் (அதிதி) ஆகி உயர்பேரறிவு அடைகுவர். அவர்கள் அந்தணர் அரசர் வணிகர் உழைப்பாளர் என்று இருந்து கொண்டே உயர் அறிவு பெறுவர்.

இதனை மெய்யறிவு நூல்களாலும் [ஆகம அளவையானும்] உண்மை உலக அனுபவத்தாலும் (காட்சி அளவையானும்) பார்த்திருந்தும் மனதில் ஐயம் ஏன்? இல்லறத்தில் இருப்பார் விடுதலை அடையார், துறவோரே பெறுவர் என்ற மயக்கம் ஏன்? சுருதி யுக்தி

அனுபவம் என்பவற்றால் தெளிக நீ. பரம அம்சர்கள் துறவறத்திலும் இல்லறத்திலும் இருத்தலை அறிவாயாக.

164. ''பிறத்தல் என்ற ஒன்று இருக்குமாயின் இறத்தல் என்ற ஒன்றும் உண்டு. ஒருபோதும் நான் பிறந்ததே இல்லை. ஆகவே நான் பிரம்மம். ஆனால் பிறந்தது நான் என்றால் நான் என்ற சொற்கு வாச்சியார்த்தம் (நேர் பொருள்) அகந்தை என்பதாம்; இலட்சியப் பொருளான பிரம்மம் அன்று. ஆகவே பிறப்பும் இறப்பும் அற்ற அந்த பிரம்மமாகிய அந்த நான் தான் நான். [ஒட்டு இல்லாத கூடஸ்தனே நான்].

* அவித்தை காமம் கர்மம் என்பன கூடிச் செயல் படுவது அகந்தை.

**நான் என்ற சொல்லின் பொருள்**

165. **மாணாக்கன்** : ''நான் என்ற பிரம்மம் நான் என்றால், அதை நான் அறிய முடியவில்லையே?''

**ஆசான்** : ''இப்பொழுது நான் என்று கூறுவது யார்?''

**மாணாக்கன்** : ''நம் புத்தி.''

**ஆசான்** : ''அந்தப் புத்தி ஆழ்துயில் (சுழுத்தி) மயக் கத்தில் மறைந்து விடுகிறது. எது அழியாமல் என்றும் நிறை மெய்யறிவாக இருக்கிறதோ அந்த ஞானமாம் நான் (ஆன்மாவே) தான் உண்மையான நான்.''

**166. ஆன்மா ஆனந்த வடிவா யிருத்தலால் பரிபூரண வடிவு எனல்**

**மாணாக்கன்** : ''நான் நிறைந்தவன் என்பது எக் காரணத்தால்? அந்த உறுதி நிலைக்கான காரணம் யான் அறிந்திலன்.''

**ஆசான்** : ''ஆழ்துயிலில் ஆனந்தத்தின் அனுபவம் இருக்கிறது அந்த ஆனந்தமே அப் பூரணம். ''குறைந்த

தற்கு ஆனந்தம் உலகத்தில் இல்லை'', அதாவது பணம் இல்லை, மகவு இல்லை, உடல் வலிமை இல்லை என்றாற் போலக் குறை அல்லது தேவை இருக்குமானால் ஆனந்தம் காணப்படாது. ஆகவே இந்த ஆன்மா ஆனந்தமாயிருக்கிறது என்றால் அது நிறைவுடையது என்பது தெளிவு. இந்தப் பரிபூரணம் பிரம்ம வடிவமான ஆன்மாவே உலகத்தில் அனைத்துக்கும் முதற்காரணம்.

**உலகிற்கு ஆதிகாரணம் ஆன்மா**

167. ''ஆகாயம் முதல் உடம்பு ஈறாக உள்ள இந்த உலகம் மனோபாவனையால் உண்டானதே. ஆய்ந்து பார்ப்பின் உலகங்களின் இருப்பு ஆன்மாவில் என்பதன்றோ உண்மை? ஆய்வினை அதற்கு மேலும் ஆன்மாவில் தனித்திருந்து செலுத்தினால், மனத்திற்கும் அதன் காரியமாம் உலகிற்கும் அப்பாற்பட்டு, எல்லையற்றதாக இணையற்றுப் பூரணப் பொருளாக நிறைந்தவன் நானே என்று விளங்கும்.''

* மூவுடலினின்று சீவனையும் பிரபஞ்சத்தினின்று பரமான்மாவையும் பிரித்தறிக என்பதாம்.

**பேரின்பம் நுகர எவ்வாறு இருத்தல் வேண்டும்**

168. **மாணாக்கன்** : ''தாங்கள் குறிப்பிட்டு உரைத்த பேரின்பத்தை நுகர நான் எவ்வாறு இருத்தல் வேண்டும்?

**ஆசான்** : ''விழிப்பு கனவு ஆழ்துயில் என்ற மூன்று நிலைகளிலும் முறையே எழுகின்ற புலன்களின் செயல். மனத்தின் செயல், அறியாமையின் செயல் என்ற நடவடிக்கைகளை (விருத்திகளை) நீக்கினால் நீ அவ்வாறு அனைத்துக்கும் அப்பாற்பட்டு, எல்லையற்ற, தனியாய் நிறைவாய் இருந்து கொண்டு ஆனந்தம் அடையலாம்.''

**விருத்திகளை அடக்கும் உபாயம்**

169. **மாணாக்கன்** : ''காண்டல் முதலிய அனுபவத்தின்

காரியமான நினைப்பிற்கு ஏதுவாக இருக்கும் வாசனை (சம்ஸ்காரம், பாவனை) யினால் வருகின்ற நடவடிக்கை களை எந்த உபாயத்தால் அடக்கலாம்?''

**ஆசான்** : ''ஆன்ம ஞான வடிவமான அரசாக இருந்து கொண்டு (ஒருவன்) புத்தியையும் புலன்களையும் ஏவலாளர் ஆக்க வேண்டும். அப்பொழுது அனைத்தும் அடங்கி நிற்கும்.''

## உள் நடவடிக்கைகளை ஒடுக்க இன்னும் இரண்டு உபாயம்

170. **ஆசான்** : ''துருத்தி போல் ஊதும் மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்தும் பயிற்சியினால் மனத்தின் செய்கைகள் நீங்குகின்றன.

அந்த யோக நெறிப் பயிற்சியில் நிற்க உனக்கு விருப்பம் இல்லை என்றால் பருவுடல் நுண்உடல்களுக்குக் காரண உடலாக உள்ள பெருத்த அறியாமையை அழிப்பின் மனத்தின் நடவடிக்கைகள் ஒடுங்குகின்றன. ஆகவே யோகப் பயிற்சி அல்லது ஞானப் பயிற்சியை மேற்கொள்ள வேண்டும்.''

* மூச்சைக் கட்டுப் படுத்தும் பயிற்சி பிராணயாமம் (உயிர்த்தடை) ஆகும்.

* அவித்தையைக் கிள்ளிக் களையின் விருத்திகள் அடங்கும் என்பதாம்.

## அறியாமையைக் கெடுப்பது எப்படி?

171. **மாணாக்கன்** : ''காரண உடலாக உள்ள அறியாமையைக் கெடுப்பது எப்படி?"

**ஆசான்** : ''மறைநூல் பொய் கூறுவதில்லை. ஆகவே அதன் உட்பொருளை அகத்தினில் வை. "நான் பரிபூரண சொரூபம். என்னிலே எல்லா உலகங்களும் கற்பிதமாகத் தோன்றுகின்றன'' என்ற மறைமொழியில் உறுதி

(தாரணை) கொள். அந்த உறுதி உனக்கு உண்டானால் அறியாமை எங்கே இருக்கும்?''

**பொன்னும் நகையும் போல**

172. **மாணாக்கன்** : ''அலைபாயும் மனத்தோடு நான் உலக விவகாரங்களில் ஈடுபடுகிறேன். அப்படியிருக்க நான் எவ்வாறு அங்ஙனமே (பூரணம் ஆகிய என்மேல் புவனங்கள் தோன்றும் என்று தாரணையோடு) இருக்க முடியும்?''

**ஆசான்** : ''என்னை விட்டு ஒன்றும் இல்லை''. காணப் படுவன யாவும் (பொன் நகை, மண் குடம், கடல் அலை முதலியன போன்று) என்மயமே. ஆகலின் என்னை விட்டு ஒன்றும் இல்லை. அவ்வாறு இருத்தலால் கனவு போல் யாவும் கட்டுக்கதையாம். என்று பார்க்கும் அறிவே (சைதன்னியமே) நான் என்று உணர்க.

பெயர் வடிவுகளாற் பரவலாகக் காணும் யாவும்—நுரை குமிழி அலை முதலியன எவ்வாறு நீர்மயமோ அவ்வாறே பிரபஞ்சம் என்மயமே காணப்படுவன சொப்பனம் போற் கற்பிதமாம் என்று உறைத்து நின்று ஒட்டின்றிக் காணும் சித்தே நான் என்பதாம்.

173. ''அறிவான்மா ஆகிய நானே நிறைந்தோன்(பூரணன்) என்ற உறுதியை மறவாதிருந்தால் அவன் மனம் அலைந்தாலும் வாய் என்ன உரைத்தாலும் எச்செயலை மெய் செய்தாலும் அவற்றால் ஒரு கெடுதியும் இல்லை. துயில் உணர்ந்த பிறகு நிற்கும் கனவுக் காட்சிகள் போல எல்லாம் பொய்; நானே ஆனந்த வடிவு என்று நீ உணரக் கடவாய்.''

**மாணாக்கனின் தெளிவு**

174. **மாணாக்கன்** : ''எண்ணற்ற முந்திய பிறவிகளில் தேகத்தையே நான் என்று பிழைபட நம்பினேன். அப்போது தாழ்ந்தோரும் உயர்ந்தோரும் ஆக இருந்த

அனைத்தும் கானல் நீர் போன்று இப்போது ஆசானின் கருணையினால் உண்மை தெரிந்து, தனித்தும் பின்ன மற்றும் இருக்கும் பின்னமே நான் என்று கண்டு ஈடேறினேன்.''

## குரு அருளை வியத்தல்

175. **மாணாக்கன்** : ''என்ன புண்ணியம் செய்தேனோ! எனது பாக்கியம் யாது எனக் கூற இயலாது இருக்கிறேன். **நன்னிலம்** என்னும் ஊரில் எழுந்த **நாராயணன்** கிருபையாலே நான் பேறு பெற்றவன் ஆனேன். அந்த மகிழ்ச்சிப் பெருக்கில் எனது மேல் துண்டை வீசுகின்றேன். பேறு பெற்ற நான் குதித்து ஆடுகின்றேன் [**தாண்டவம்** ஆடுகின்றேன்].

* நன்னிலம் என்ற ஊரில் இருந்த நாராயணர் என்பவர் இந் நூலாசிரியரின் ஞான ஆசிரியர்.

## தாண்டவரின் மகிழ்ச்சி

176. **மாணாக்கன்** : ''மெய்யறிவு கை கூடப் பெற்ற பேருவகையான அற்புதத்தினால் 'இவன் எப்போதும் ஆனந்தக் கூத்தாடுவான்' என்னும் நிலைமையை முன்னமே தெரிந்து கொண்ட உண்மையால் அன்றோ என்னைத் ''தாண்டவா!'' என்று அழைத்தனர் அன்னையும் தந்தையும்? அவர்கள் எவ்வளவு மகிமை உடையவர்கள்!

* ஆசிரியரின் பெயர் தாண்டவர். தாண்டவராயர், தாண்டவராய சுவாமிகள் என்றும் கூறப்படுவார். தாண்டவர் என்று தனக்குப் பெயரிட்ட தாய்தந்தையரையும், தாய் தந்தையாக விளங்கிய ஆசானையும் பராட்டுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

## மகிழ்ச்சிப் பெருக்கு

177. **மாணாக்கன்** : ''மெய்யறிவால் உண்டான இந்த ஒப்பற்ற ஆனந்த மகிழ்ச்சியை எவரிடத்தில் உரைப்பேன்!

உள்ளிருந்து எழுந்து பொங்குகிறது, உலகமெலாம் அது பரவி நிறைந்து எல்லையில்லாததாயிற்று. 'அப்படி வேதாந்த மந்திர [மகா வாக்கிய] உண்மையினை அருள் செய்ய ஆசானாகி வந்த இறைவனின் மலரடி பணிந்து வணங்குகின்றேன்.''

## நூலைப் பயில்பவர் எய்தும் பயன்

178. ''இவ்வாறு இருக்கிறது அறிவுப் பேரின்பம் (வித்தியானந்தம், ஞானானந்தம்) என்று கூறினோம். அன்பு மிக இந்த நூலைப் பயில்பவர் மிக உயர்ந்த நிட்டையாகிய பிரம்ம ஐக்கிய ஞான நிலையை அனுபவமாக அறிந்து, என்றுமுளதாகிய சீவன் முத்தியை அடைந்திருக்கும் தவ மேலோருள் ஒருவராவார்.

## ஆசான் அருளிய பேரின்ப நூல் இது

179. ''வேத முடிவின் பொருளாக உள்ள வித்தியானந்தம் (ஞானானந்தம்) விளங்கும் பொருட்டுக் கூற வேண்டும் சாதனங்களுள் ஒன்றும் குறைவில்லாமல் **கைவல்லிய நவநீதம்** என்னும் இந் நூலைப் பூரணம் ஆக்க வேண்டிப், பழமையான **நன்னிலம்** என்ற ஊரில் எழுந்தருளிய **நாராயணர்** ஆகிய ஆசான் எனக்குக் கனவில் (சமாதியில்) வந்து இந்நூல் முற்ற அருளிச் செய்தார்.

## கைவல்லிய நவநீதம் நூலைப் பயில்வார் பெரும் பேறு

180. ''ஞான ஆசிரியரின் பாதக் குளிர்புனலைத் தலைமேல் தெளித்துக் கொண்டோர், உலகினில் உள்ள புண்ணியப் புனல் எல்லாம் மூழ்கினோர் அடையும் பேறு யாவும் முற்ற அடைவார்கள்.

அது போல நலமும் மெய்யும் ஆகிய **கைவல்லிய நவநீதம்** என்னும் நூலைக் கற்றோரும் மெய்யறிவுக் கலை நூல்கள் பலவும் பயின்ற பெருமைக்கு உரியோராகவும் ஞானிகளாகவும் உலகில் சிறப்புற்று வாழ்வார்கள். □

# இணைப்பு – பாடல்கள்

## மதிப்புரை

நம்மனோர் பிறவிக் கடலைக் கடப்பதற்குத் தோணியாகவும், வேதாந்த சாஸ்திரங்களி னரிய பெரிய பொருள்களை யறிந் துணர்தற்குச் சிந்தாமணியாகவும், மன வொருமை யென்னும் விசிராந்தி பெறுதற்கு மாநச சரோவரமாகவும் (ஏரியாக வும்), ஆநந்தாநுபவத்தினது சங்கற்பத்தைப் பூர்த்தி செய்வதற்குக் கற்பகத்தருவாகவும், துக்க நிவிர்த்தி பெறுவ தற்குக் காமதேநுவாகவும், தன்னை மறைத்த பந்தமென்னு மஞ்ஞான வடிய யானையைக் கொல்வதற்குச் சிங்கமாகவு முள்ள இந்நூல் தமிழ்ப் பாஷையி லிருப்பது தமிழ் மக்கள் செய்த பெரும் புண்ணியத்தின் பயனே யாகும். இந்நூலின் முறை யதியற்புதமா யிருப்பதால், இது தெலுங்கு முதலிய பாஷையிலும் மொழி பெயர்க்கப் பட்டிருக்கின்றது. ஐரோப்பாக் கண்டத்துள்ள ஜெர்மன் தேசத்திலே ஜெர்மன் பாஷையிலும் இது மொழி பெயர்க்கப்பட்டிருப்பதை யுணர் வார்க்கு இந் நூலினருமை பெருமை மிகச் செவ்விதாக விளங்குவனவாம்.

— பெரும்புலவர்

**கோ. வடிவேலு செட்டியார் (1922)**

# கைவல்லிய நவநீத வசனம்

## பாயிரம்

பொன்நிலம் மாதர் ஆசை பொருந்தினர் பொருந்தார் உள்ளம்
தன்னில்அந் தரத்தின் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்
எந்நிலங் களினும் மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம்
நன்னிலம் மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி. 1

ஈன்றளித் தழிக்கும் செய்கைக் கேதுவாம் அயனாய் மாலாய்
ஆன்றஈ சனுமாய்த் தானே அநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமாய் இன்பப் புணரிஆ தவனாய் நாளும்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே. 2

எவருடை அருளால் யானே எங்குமாம் பிரமம் என்பால்
கவருடைப் புவனம் எல்லாம் கற்பிதம் என்ற றிந்து
சுவரிடை வெளிபோல் யான்என் சொரூபசு பாவம் ஆனேன்
அவருடைப் பதும பாதம் அநுதினம் பணிகின்றேனே 3

என்னுடை மனது புத்தி இந்திய சரீரம் எல்லாம்
என்னுடை அறிவி னாலே இரவிமுன் இமமே ஆக்கி
என்னுடை நீயும் நானும் ஏகம்என் றைக்யம் செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்றும் ஈசனை இறைஞ்சினேனே'
4

அந்தமும் நடுவும் இன்றி ஆதியும் இன்றி வான்போல்
சந்தமும் ஒளிரும் ஞான சற்குரு பாதம் போற்றிப்
பந்தமும் வீடும் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா
மந்தரும் உணரு மாறு வத்துதத் துவம்சொல் வேனே. 5

படர்ந்தவே தாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு முந்நூற்
குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்
கடைந்தெடுத் தளித்தேன் இந்தக் கைவல்ய நவநீ தத்தை
அடைந்தவர் விடய மண்தின் றலைவரோ பசிஇ லாரே. 6

முத்தனை வேங்க டேச முகுந்தனை எனையாட் கொள்ளும்
கத்தனை வணங்கிச் சொல்லும் கைவல்ய நவநீ தத்தைத்
தத்துவ விளக்கம் என்றும் சந்தேகம் தெளிதல் என்றும்
வைத்திரு படலம் ஆக வகுத்துரை செய்கின்றேனே. 7

# 1. தத்துவ விளக்கப் படலம்

நித்திய அநித்தி யங்கள் நிண்ணயம் தெரிவி வேகம்
மத்திய இகப ரங்கள் வருபோகங் களில்நி ராசை
சத்தியம் உரைக்க வேண்டும் சமாதிஎன் றாறு கூட்டம்
முத்தியை விரும்பும் இச்சை மொழிவர்சா தனம்இந் நான்கே
1

சமம்தமம் விடல்ச கித்தல் சமாதானம் சிரத்தை ஆறாம்
சமம்அகக் கரண தண்டம் தமம்புறக் கரண தண்டம்
அமர்தரு கருமம் பற்றா தறுத்தலே விடல்என் றாகும்
மமர்செயும் காமம் ஆதி வரின்அடக் குதல்ச கித்தல். 2

சிரவணப் பொருளைத் தானே சித்தம்சிந் திக்குமாறு
சரதமா வைக்கும் இத்தைச் சமாதானம் என்பர் மேலோர்
பரமசற் குருநூல் அன்பு பற்றலே சிரத்தை ஆகும்
வரம்மிகு சமாதி ஆறு வகையின்சொற் பொருள், இதாமே. 3

சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை
ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க் கறிவுண்டாகும்
நூ தன விவேகி உள்ளம் நுழையாது நுழையும் ஆகில்
பூதசன் மங்கள் கோடி புனிதன்ஆம் புருடன் ஆமே. 4

இவன்அதி காரி ஆனோன் இந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும்
தவனம்மூன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல்
வெம்பிப்
பவம்அறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே. 5

ஆனபின் மனைவி மக்கள் அர்த்தஏ டணைகள் மூன்றில்
கானவர் வலையில் பட்டுக் கைதப்பி ஓடும் மான்போல்
போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணம் சென்று
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே. 6

வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனும்
சோகத்தால்
வணங்கினேன் ஐய னேஎன் உள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்னம் ஆக்கி
இணங்கிய குருவே என்னை இரட்சித்தல் வேண்டும்
என்றான். 7

அன்னதன் சிசுவை ஐயன் ஆமைமீன் பறவை போலத்
தன்னகம் கருதி நோக்கித் தடவிச்சந் திதிஇ ருத்தி
உன்னது பிறவி மாற்றும் உபாயம்ஒன் றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பா யாகில் தொடர்பவம் தொலையும்
என்றான். 8

தொடர்பவம் தொலையும் என்று சொன்னதைக் கேட்ட
போதே
தடமடு மூழ்கி னான்போல் சரீரமும் குளிர்ந்துள் ஆறி
அடரும்அன் பொழுகு மாபோல் ஆநந்த பாஷ்பம் காட்டி
மடல்மலர்ப் பாதம் மீண்டும் வணங்கிநின் றீது சொல்வான். 9

சொன்னது கேட்க மாட்டாத் தொண்டன்ஆ னாலும் சுவாமி
நின்னது கருணை யாலே நீரெனை ஆளல் ஆமே
உன்னது பிறவி மாற்றும் உபாயஒன் றுண்டென் றீரே
இன்னதென் றதைநீர் காட்டி ஈடேற்றல் வேண்டும்
என்றான். 10

அடங்கிய விருத்தி யான்என் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கை போலத்
தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவ வேண்டி
உடம்பினுள் சீவ னைப்பார்த் துபதேசம் ஓது வாரே. 11

வாராய்என் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து
தீராத சுழற்காற் றுற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையில் திரிவன்போதம்
ஆராயும் தன்னைத்தான்என் றறியும்அவ் வளவுந் தானே. 12

தன்னையும் தனக்கா தாரத் தலைவனை யும்கண் டானேல்
பின்னை அத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத்
தீர்வன்
உன்னைநீ அறிந்தாய் ஆகில் உனக்கொரு கேடும் இல்லை
என்னைநீ கேட்கை யாலே ஈதுப தேசித் தேனே. 13

என்னைத்தான் சடனா உள்ளத் தெண்ணியோ சொன்னீர்
ஐயா
தன்னைத்தான் அறியா மாந்தர் தரணியில் ஒருவர் உண்டோ
பின்னைத்தான் அவர்கள் எல்லாம் பிறந்திறந் துழலு வான்
ஏன்
நின்னைத்தான் நம்பி னேற்கு நிண்ணயம் அருளு வீரே. 14

இன்னது தேகம் தேகி இவன்என உணர்வான் யாவன்
அன்னவன் தன்னைத் தான்என் றறிந்தவன் ஆகும் என்றார்
சொன்னபின் தேகி யார் இத் தூ லம்அல் லாமல் என்றான்
பின்னது கேட்ட ஐயர் பீழையும் நகையும் கொண்டார். 15

தேகம் அல் லாமல் வேறே தேகியார் காணேன் என்றாய்
மோகமாம் கனவில் வந்து முளைத்தவன் எவன்நீ சொல்வாய்
சோகமாம் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவன்ஆர்
சொல்வாய்
ஆகநீ நனவில் எண்ணும் அறிவுதான் ஏது சொல்வாய். 16

நனவுகண் டதுப் நான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதும்சு ழுத்தி கண்டதும் வேறொன் றேபோல்
தினம் அநு பவிப்ப தொக்கும் தெரியவும் இல்லை சற்றே
மனதினில் உதிக்கும் பின்னே மறைக்கும்அ தருளு வீரே. 17

தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்
ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டு வார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபம் ஆன
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே. 18

அத்தியா ரோபம் என்றும் அபவாதம் என்றும் சொல்லும்
உத்தியால் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்தம் எல்லாம்
மித்தையாம் ஆரோ பத்தால் பந்தமாம் அபவா தத்தால்
முத்தியாம் இவ்வி ரண்டின் முந்திஆ ரோபம் கேளாய். 19

ஆரோபம் அத்தி யாசம் கற்பனை ஆவ எல்லாம்
ஓரோர்வத் துவினில் வேறே ஓரோர்வத் துவினை ஓர்தல்
நாரூடு பனியாய்த் தோன்றல் நரனாகித் தறியில் தோன்றல்
நீரூடு கானல் தோன்றல் நிறம் தலம் வெளியில்
தோன்றல் 20

இப்படிப் போல நாம ரூபங்கள் இரண்டும் இன்றி
ஒப்பமாய் இரண்டற் றொன்றாய் உணர்வொளி நிறைவாய்
நிற்கும்
அப்பிர மத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம் எல்லாம்
செப்புகற் பனையினாலே செனித்தவென் றறிந்து
கொள்ளே. 21

அதுதான்எப் படிஎன் றக்கால் அநாதியாம் சீவர் எல்லாம்
பொதுவான சுழுத்தி போலப் பொருந்தும் அம் வியத்தம்
தன்னில்
இதுகால தத்து வப்பேர் ஈசன்உட் பார்வை யால
முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தம் ஆமே. 22

உத்தம வெளுப்புச் செம்மை உரைத்திடும் கறுப்பும் ஆகும்
சத்துவ குணத்தி னோடு ரசோகுணம் தமோகு ணந்தான்
சுத்தமோ டழுக்கி ருட்டாச் சொல்லுமுக் குணமும் மூன்றாய்
ஒத்துள வேனும் தம்முள் ஒரு குணம் அதிகம் ஆமே. 23

ஒருவழி இதுவாம் இத்தை ஒருவழி வேறாச் சொல்வர்
மருவும்அவ் வியத்தம் தானே மகத்தத்வம் ஆகும் அந்த
அருள்மகத் தத்து வந்தான் அகங்காரம் ஆகும் என்றும்
கருஅங் காரம் மூன்றாக் காட்டிய குணம்ஆம் என்றும். 24

இக்குணங் களிலே விண்போன் றிருக்கும்சிற் சாயை
தோன்றும்
முக்குணங் களினும் தூய்தாம் முதற்குணம் மாயை ஆகும்
அக்குணப் பிரமச் சாயை அந்தரி யாமி மாயை
எக்குணங் களும்பற் றாதோன் நிமித்தகா ரணனாம் ஈசன். 25

ஈசனுக் கிதுசு ழுத்தி இதுவேகா ரணச ரீரம்
கோசம்ஆ நந்தம் ஆகும் குணம்இரா சதம்அ வித்தை
தேசறும் அவித்தை தோறும் சிற்சாயை சீவ கோடி
நாசமாம் உயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞன் ஆமே. 26

அழுக்கொடு பற்றும் சீவர்க் கதுவேஆ நந்த கோசம்
சுழுத்திகா ரணச ரீரம் சொன்னதில் மட்டும் மோகம்
முழுக்குணத் திரண்டால் வந்த மூலஆ ரோபம் சொன்னோம்
வழுத்துசூக் குமஆ ரோப வழியும்நீ மொழியக் கேளாய். 27

ஏமமா யாவி னோத ஈசனார் அருளி னாலே
பூமலி உயிர்கட் கெல்லாம் போகசா தனம்உண் டாகத்
தாமத குணம்இ ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமம்ஆம் மூடல் என்றும் விவிதமாம் தோற்றம் என்றும். 28

தோற்றம்ஆம் சத்தி தன்னின் சொல்லிய விண்ணாம்
விண்ணின்
காற்றதாம் காற்றின் தீயாம் கனலின்நீர் நீரில் மண்ணாம்
போற்றும்இவ் வைந்தும் நொய்ய பூதங்கள் என்று பேராம்.
சாற்றுமற் றிவற்றின் போக சாதன தனுஉண் டாகும். 29

ஆதிமுக் குணம்இப் பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும்
கோதில்வெண் குணத்தில் ஐந்து கூறுணர் கருவி ஆகும்
ஓதிய பின்னை ஐந்தும் உளம்புத்தி இரண்டாம் ஞான
சாதனம் ஆம்இவ் வேழும் சற்குணப் பிரிவி னாலே. 30

இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்தும் ஐந்தும்
பிராணவா யுக்கள் என்றும் பெருந்தொழிற் கருவி என்றும்
பராவிய பெயராம் இந்தப் பதினேழும் இலிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய உயிர்கட் கெல்லாம்.
31

இவ்வுடல் மருவும் சீவன் இலங்குதை சதன்என் றாவன்
இவ்வுடல் மருவும் ஈசன் இரணிய கர்ப்பன் ஆவன்
இவ்வுடல் இரண்டு பேர்க்கும் இலிங்கசூக் குமச ரீரம்
இவ்வுடற் கோசம் மூன்றாம் இதுகனா அவத்தை ஆமே. 32

சூக்கும சடம்இம் மட்டும் சொல்லினோம் இப்பால் தூலம்
ஆக்கும்ஆ ரோபம் தானும் அடைவினின் மொழியக் கேளாய்
தாக்கும் இவ்வுயிர்க்குத் தூல தனுவும்போ கமும்உண்டாகக்
காக்கும்அவ் வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் தானே. 33

ஐந்துபூ தமும்பத் தாக்கி அவைபாதி நந்நான் காக்கி
நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்கும் கூட்ட
வந்தன தூல பூதம் மகாபூதம் இவற்றி னின்றும்
தந்தன நான்காம் தூல தனு அண்ட புவன போகம். 34

தூலமே மருவும் சீவன் சொல்லிய விசுவன் ஆகும்
தூலமே மருவும் ஈசன் சொலும்விராட் புருடன் ஆகும்
தூலமே அன்ன கோசம் துன்னும்சாக் கிரஅ வத்தை
தூலகற் பனைஈ தென்று தொகுத்தது மனத்திற்
கொள்வாய். 35

சீரிய ஈச னார்க்கும் சீவர்க்கும் உபாதி ஒன்றேல்
ஆரிய குருவே பேதம் அறிவதெப் படிஎன் றக்கால்
காரிய உபாதி சீவன் காரண உபாதி ஈசன்
வீரியம் மிகுச மட்டி வியட்டியால் பேதம் ஆமே. 36

மரங்கள்போல் வியட்டி பேதம் வனமெனல் சமட்டி பேதம்
சரங்கள்தா வரங்கள் பேதத் தனியுடல் வியட்டி என்பார்
பரம்பிய எல்லாம் கூட்டிப் பார்ப்பதே சமட்டி என்பார்
இரங்கிய பலசீ வர்க்கும் ஈசர்க்கும் பேதம் ஈதே. 37

கற்பனை வந்த வாறு காட்டினோம் காண்ப எல்லாம்
சொற்பதை போலும் என்றே துணிந்தவன் ஞானி ஆவான்.
செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தஆ காசம் போல
அற்புத முத்தி சேரும் அபவாத வழியும் கேளாய். 38

அரவன்று கயிறென் றாற்போல் ஆளன்று தறிஎன் றாற்போல்
குரவன்சொல் உபதே சத்தால் கூறுநூல் ஒளியைக் கொண்

புரம்அன்று புவனம் அன்று பூதங்கள் அன்று ஞானத்
திரம்என்னும் பிரமம் என்று தெளிவதே அபவா தம்காண். 39

படமும்நூ லும்போல் செய்த பணியும்பொன் னும்போல் பார்க்கின்
கடமும்மண் ணும்போல் ஒன்றாம் காரிய கார ணங்கள்
உடல்முதல் சுபாவம் ஈறா ஒன்றில்ஒன் றுதித்த ஆறே
அடைவினில் ஒடுக்கிக் காண்ப தபவாத உபாயம் ஆமே. 40

தூடண தமத்தில் வந்த தோற்றமாம் சத்தி செய்யும்
ஏடணை விகாரம் சொன்னீர் இரண்டுசத் திகள்என் றீரே
மூடலாம் சத்தி செய்யும் மோகமும் சொல்லும் ஐயா
கேடறக் குருவே என்னக் கிருபையோ டருள்செய் வாரே. 41

தான்நிகர் தனக்காம் ஈசன் தனையும்தங் களைத்தாம் கண்ட
ஞானிகள் தமையும் அன்றி நாஸ்திந பாதி என்னும்
ஊனிடை உயிர்கள் உள்ளத் துணர்விழி குருடாம் வண்ணம்
வான்நிலம் திசைகள் மூடும் மழைநிசி இருள்போல் மூடும் 42

பூன்றமாம் பிரமத் துக்கும் புறத்துள விகாரங் கட்கும்
ஆன்றகூ டத்த னுக்கும் அகத்துள விகாரங் கட்கும்
தோன்றிய பேதம் சற்றும் தோன்றாமல் மறைத்து மூடும்
ஊன்றிய பவவி யாதி உண்டாக்கும் உபாதி ஈதே. 43

ஆதாரம் மறைந்து போனால் ஆரோபம் எங்கே தோன்றும்
ஆதாரம் மறையா தாகில் ஆரோபம் இலையே என்றால்
ஆதாரம் சமம்வி சேடம் ஆமென இரண்டு கூறாம்
ஆதாரம் சமமாம் எங்கும் ஆரோபம் விசேடம் ஆமே. 44

சகமதில் இதுஎன் சுட்டாம் சமானந்தான் மறைந்தி டாது
மிகஇது கயிறாம் என்னும் விசேடந்தான் மறைந்து போகும்
அகம்எனும சமானம் தன்னை அஞ்ஞானம் மறைத்தி டாது
பகர்விசே டமதாம் சீவன் பரம்எனும் அதனை மூடும் 45

கேவல நிலைதோன் றாமல் கெடுத்தது பஞ்ச கோசம்
சீவனும் சகத்தும் ஆகிச் செனித்தவிட் சேபம் அன்றோ

ஆவர ணம்தா னேபாழ் அனர்த்தம்என் றுரைத்த தேதோ
மேவரும் குருவே என்று வினாவிடின் மகனே கேளாய். 46

தோற்றமாம் சத்தி தானும் துன்பமாம் பவம்ஆ னாலும்
ஆற்றலால் முத்தி சேர்வார்க் கனுகூலம் ஆகும் காண்நீ
ஊற்றம்ஆம் பகற்கா லம்போல் உபகாரம் நிசியால் உண்டோ
மாற்றம்என் உரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல்
லாதே 47

சுழுத்தியில் பிரள யத்தில் தோற்றம்ஆம் சகங்கள் மாண்டும்
அழுத்திய பவம்போய் முத்தி அடைந்தவர் ஒருவர் உண்டோ
முழுத்தவிட் சேபம் எல்லாம் முத்தியில் கூட்டு கிற்கும்
கொழுத்த ஆவரணம் முத்தி கூடாமல் கெடுத்த கேடே. 48

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றம் ஆன
சத்தியும் பொய்யே என்றால் சத்திசா தனமா வந்த
முத்தியும் பொய்யாம என்னின் மோகநித் திரைவி லங்கால்
நித்திரை தெளியு மாபோல் நிருவாண நிலைமெய் யாமே, 49

இப்பரில் நஞ்சை நஞ்சால் இருப்பினை இரும்பால் எய்யும்
அம்பினை அம்பால் பற்றும் அழுக்கினை அழுக்கால் மாய்ப்பர்
வம்பியல் மாயை தன்னை மாயையால் மாய்ப்பர் பின்னைத்
தம்பமாம் அதுவும் கூடச் சவம்சுடு தடிபோல் போமே. 50

இந்தமா யையினால் சீவர்க் கேழவத் தைகளுண்டாகும்
அந்தஏழ் அவத்தை தம்மை அடைவினின் மொழியக் கேளாய்
முந்தஅஞ் ஞானம் மூடல் முளைத்தல்கா ணாத ஞானம்
சந்ததம் கண்ட ஞானம் தழல்கெடல் குளிர்மை ஆதல். 51

பிரமமாம் தனைம றந்த பேதைமை யேஅஞ் ஞானம்
பரன்இலை காணோம் என்று பகர்தல்ஆ வரணம் மூடல்
நரன் ஒரு கருத்தால் சீவன் நான்என முளைத்தல் தோற்றம்
குரவன்வாக் கியத்தால் தன்னைக் குறிக்கொளல் பரோட்ச
ஞானம். 52

தத்துவ விசாரம் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தம்தான் ஆதல் அபரோட்ச ஞானம் ஆகும்

கர்த்தனாம் சீவ பேதம் கழிவதே துக்கம் போதல்
முத்தனாய் எல்லாம் செய்து முடிந்ததா நந்தம் ஆமே. 53

இதுநினக் கறியும் வண்ணம் இப்படி ஒருதிட் டாந்தம்
புதுமையாம் கதைகேள் பத்துப் புருடர்ஓர் ஆற்றை நீந்தி
உதகதீ ரத்தில் ஏறி ஒருவன்ஒன் பதுபேர் எண்ணி
அதனோடு தசமன் தான்என் றறியாமல் மயங்கி நின்றான். 54

அறியாத மயல்அஞ் ஞானம் அவன்இலை காணோம் என்றல்
பிறியாஆ வரணம் ஆகும் பீழைகொண் டழல்விட் சேபம்
நெறியாளன் தசமன் உண்டு நிற்கின்றான் என்ற சொல்லைக்
குறியாக எண்ணி நெஞ்சில் கொள்வது பரோட்ச ஞானம். 55

புண்ணிய பதிகன் பின்னும் புருடர்ஒன் பதின்மர் தம்மை
எண்ணும்நீ தசமன் ஆவை என்னவே தன்னைக் காணல்
கண்ணினிற் கண்ட ஞானம் கரைதல்போ வதுநோய் போதல்
திண்ணிய மனதில் ஐயம் தெளிதல்ஆ னந்தம் ஆமே. 56

தசபுமான் தனைக்கண் டாற்போல் சற்குரு மூர்த்தி யேஎன்
நிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டும் என்றான்
சுசிபெறும் இலக்கி யார்த்தம் தொம்பதம் தத்ப தங்கட்கு
அசிபத ஐக்கியம் செய்யும் அதுசெயும் உண்மை கேளாய். 57

விண்ஒன்றை மகாவிண் என்றும் மேகவிண் என்றும் பாரில்
மண்ஒன்று கடவிண் என்றும் மருவிய சலவிண் என்றும்
எண்ணுங்கற் பனைபோல் ஒன்றே எங்கும்ஆம் பிரமம் ஈசன்
நண்ணும்கூ டத்தன் சீவன் நான்குசை தந்யம் ஆமே 58

பூச்சிய ஈசன் புகல்பதம் இரண்டி னுக்கும்
வாச்சியம் லட்சி யம்தான் மலம் இலாப் பிரமம் ஆன்மா
காய்ச்சிய பாலில் நெய்போல் கலந்தொன்றாம் கடைந்தெ
டுக்கும்
ஆச்சியம் என்ன உன்னை அறிந்துநீ பிறிந்து கொள்ளே, 59

பிறிவதெப் படிஎன் றக்கால் பிணமாகும் உடல்நான் என்னும்
அறிவினைக் கொல்லல் வேண்டும் ஐம்பூத விகாரம் அன்றோ
வெறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போல்உன் மூக்கால்
எறிபிரா ணனும்நீ அல்லை இராசத குணவி காரம். 60

கரணம்ஆம் மனதுபுத்தி கர்த்தாவாம் அவைஆன் மாவோ
தரமுள இரண்டு கோசம் சத்துவ குணவி காரம்
வரம்அறு துயில்ஆ நந்த மயனையும் நான்என் னாதே
விரவிய தமஅஞ் ஞான விருத்தியின் விகாரம் ஆமே. 61

சத்தொடு சித்ஆ நந்தம் சமம் திரம் சாட்சி ஏகம்
நித்தியம் வியாபி ஆன்மா நீஅது வா அறிந்து
பொத்தொடு சடம்துக் காதி பொருந்துபே தங்கள் ஆன
குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியில் ஆவாய். 62

பஞ்சகோ சமும்விட் டப்பால் பார்க்கின்ற பொழுது பாழே
விஞ்சிய ததுஅல் லாமல் வேறொன்றும் தெரியக் காணேன்
அஞ்சன இருளை யோநான் அகம்என அநுப விப்பேன்
வஞ்சம்இல் குருவே என்ற மகன்மதி தெளியச் சொல்வார்.
63

முன்புகல் தசமன் புத்தி மோகத்தால் எண்ணி எண்ணி
ஒன்பது பேரைக் கண்ட ஒருவன்ஆம் தனைக்கா ணாத
பின்பவன் இடையில் கண்ட பெரியபாழ் அவனோ பாராய்
அன்புள மகனே காண்ப தடங்கலும் காண்பான் நீயே 64

தூலசூக் கும அஞ் ஞானம் தோன்றும்முன் றவத்தை தாமும்
காலம்ஓர் மூன்றும் சன்மக் கடல்எழும் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனஎத் தனைஎன் பேன்நான்
ஆல்அமர் கடவுள் ஆணை அவைக்கெலாம் சாட்சி நீயே. 65

எல்லாம்கண் டறியும் என்னை ஏதுகொண் டறிவேன் என்று
சொல்லா தேசுயமாம் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ
பல்லார்முன் தசமன் தன்னைப் பார்த்ததும் தனைக்கொண்
டேதான்
அல்லாமல் பதினொன்றானும் அவனிடத் துண்டோ பாராய்.
66

அறிவுக்கும் அறிவு செய்யும் அறிவுவேறு உண்டென்
றெண்ணும்
அறிவற்ற குதர்க்க மூடர்க் கனவத்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருள்நீ அல்லை அறிபடாப் பொருள்நீ அல்லை
அறிபொருள் ஆகும் உன்னை அநுபவித்து அறிவாய் நீயே.
67

மதுரம்ஆம் கட்டி சுட்ட மாப்பணி யாரம் எல்லாம்
மதுரம்ஆக் கியஅ தற்கு மதுரம்தான் சுபாவம் அன்றோ
அதுஇது எனும்ச டங்கள் அறிவாக அறிவைத் தந்தே
அதுஇது இரண்டும் ஆகா அகம்பொருள் அறிவாய் நீயே. 68

இந்தநீ துவம்ப தத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்
பந்தம்இல் பிரம மேதற் பதந்தனின் இலட்சி யார்த்தம்
அந்தம்ஆம் சீவன் ஈசன் அவர்களே வாச்சி யார்த்தம்
சந்ததம் பேதம் ஆவார் தமக்கயிக் கியப்கூ டாதே. 69

பேதம்ஆ னதுவும் கேளாய் பெயராலும் இடங்க ளாலும்
ஓதரும் உபாதி யாலும் உடலாலும் உணர்வி னாலும்
பாதலம் விசும்பு போலப் பலதூ ரம் அகன்று நிற்பர்
ஆதலால் இவர்க்கெந் நாளும் அயிக்யமென் பதுகூடாதே. 70

வடநூ ல்வல் லவர்கள் சொல்லும் வாக்கியப்
பொருள்சே ராமல்
இடராகின் பொருளாம் வண்ணம் இலக்கண உரையால்
கொள்வார்
திடமான அதுவும் மூன்றாச் செப்புவார் விட்ட தென்றும்
விடல்இலா தென்றும் விட்டு விடாததென் றுப்பே ராமே. 71

கங்கையில் கோஷம் என்றும் கறுப்புச்சேப் போடு தென்றும்
தங்கிய சோயம் தேவ தத்தன்என் றுப்சொல் வார்கள்
இங்குதா ரணங்கள் ஆக்கி இந்தமூன்று உரைக ளாலே
துங்கநூல் விரோதம் ஆன சொல்எலாம் பொருளாம்
தானே. 72

பன்னிய சோயம் என்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்
அந்நிய தேசம் காலம் அவன் இவன் என்ப எல்லாம்
சொன்னஇவ் விரோதம் விட்டுத் தொடர் இலக்கியம்வி
டாமல்
உன்னிடில் தேவ தத்தன் ஒருவனை வெளியாக் காட்டும். 73

தத்துவம் எனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி ஆன
வத்துவை விடாமல் பேத வாச்சியார்த் தத்தை விட்டு
நித்தமும் அதுநீ ஆகும் நீஅது ஆகும் என்னும்
அத்தமும் அகண்டம் என்றே அசிபத ஐக்கியம் காட்டும் 74

கடநீரில் மேக நீரில் கண்டவான் இரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானும் கூடிஒன் றாம்எப் போதும்
இடம்ஆன பிரமம் சாட்சி இரண்டும்எப் போதும் ஏகம்
திடமாகச் சுவாநுபதி சிவோகம் என் றிருந்தி டாயே. 75

தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமும்கடந்து பாழையும் தள்ளி உள்ளில்
கொஞ்சம்ஆம் இருப்பும் விட்டுக் கூடத்தன் பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி ஒன்றாய் நின்றபூ ரணத்தைக்
கண்டான் 76

அநுபவா நந்த வெள்ளத் தழுந்தியே அகண்டம் ஆகித்
தனுகர ணங்கள் ஆதி சகலமும் இறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேகம் ஆனசற் குருவும் காணா
நனவினில் சுழுத்தி ஆகி நன்மகன் சுபாவம் ஆனான். 77

அளிமகன் நெடும்போது இவ்வா று ஆனபின் மனது மெள்ள
வெளியில்வந் திடஉணர்ந்தான் விமலதே சிகனைக்
கண்டான்
துளிவிழி சொரியப் பாதம் தொழுதுவீழ்ந் தெழுந்து
சூழ்ந்தான்
குளிமுகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான். 78

ஐயனே எனதுள் ளேநின் றநந்தசன் மங்கள் ஆண்ட
மெய்யனே உபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யுமா றொன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி.
79

சிட்டன்இவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா எனஇ ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டம்ஆம் தடைகள் மூன்றும் தொடராமல் சொரூப ஞான
நிட்டன்ஆய் இருக்கின் ஈதே நீசெயும் உதவி ஆமே. 80

நீநான்என்று இரண்டி லாமல் நிறைந்தபூ ரணமாய் எங்கும்
நான்ஆகத் தெளிந்த ஞானம் நழுவுமோ குருவே என்றான்
தான்ஆகும் பிரம ரூபம் சற்குரு நூலால் தோன்றும்
ஆனாலும் தடைகள் உண்டேல் அநுபவம் உறைத்திடாதே.
81

தடைஎவை எனில்அஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
உடன்உடன் வரும்வந் தக்கால் உயர்ஞானம் கெடும்இ
வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே.
82

அக்கினி கட்டுப் பட்டால் அற்பமும் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே வந்தபந் தமுப்வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே.
விக்கின மடம்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே 83

பிரமபா வனையை மூடிப் பேதம்காட் டுவதஞ் ஞானம்
குரன்வாக் கியம்நம் பாமல் குழம்புவ தாம்சந் தேகம்
திரம்அறு சகம்மெய் என்றும் தேகம்நான் என்றும் உள்ளே
விரவிய மோகம் தானே விபரீதம் என்பர் மேலோர் 84

தத்துவ அநுபோ கம்தான் சாதித்தல் கேட்டல் என்பார்
ஒத்துள பொருள்ஊ கத்தால் உசாவல்சிந் தித்தல் என்பார்
சித்தம் காந்தம் ஆன தெரிசனம் தெளிதல் என்பார்
நித்தம்இப் படிச்செய் தக்கால் நிருவாணம் பெறுவாய் நீயே.
85

எத்தனை நாள்ஞா தாவும் ஞானமும் இருக்கும் உன்பால்
அத்தனை நாளும் வேண்டும் அப்பால்ஓர் செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோல் பற்றா ஞேயம்மாத் திரமாய்ச் சீவன்
முத்தர்ஆ னவர்வி தேக முத்திபெற் றிருப்பாய் என்றும். 86

ஞானம்ஆர் சீவன்முத்தர் நால்வகை ஆவர் கேளாய்
வான்நிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்
ஆனவர் நாமம் ஆகும் அவர்களில் பிரம வித்தின்
தானமும் மற்றைமூவர் தாரதம் மியமும் சொல்வேன். 87

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்
வாரமாய் இருந்த தங்கள் வருணம்ஆச் சிரமம் சொன்ன
பாரகா ரியம்ஆ னாலும் பலர்க்குப காரம் ஆக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர். 88

காமம்ஆ திகள்வந் தாலும் கணத்தில்போம் மனத்தில் பற்றார்
தாமரை இலைத்தண் ணீர்போல் சகத்தொடும் கூடி வாழ்வார்
பாமரர் எனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரும் ஆவார் உள்ளத்து உவகையாம் சீவன் முத்தர். 89

பேதகன் மத்தால் வந்த பிரா ரத்தம் நாநா ஆகும்
ஆதலால் விவகா ரங்கள் அவரவர்க்கு ஆவ ஆகும்
மாதவம் செயினும் செய்வார் வாணிபம் செயினும் செய்வார்
பூதலம் புசிப்பார் ஐயம் புகுந்துண்பார் சீவன் முத்தர். 90

சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து
பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா ஒன்றும் பாரார்
நன்றுதீது என்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர். 91

பின்னைமூ வரில்இ ரண்டு பேர்களும் சமாதி யோகம்
தன்னைஉற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தம் தானாய்
உன்னுவோன் வரன்வேற் றோரால் உணர்பவன் வரியான் ஆகும்
அன்னியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டான் ஆமே. 92

அரிதாகும் இவர்கள் இவ்வாறு அநேகர்ஆ னாலும் முத்தி
சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலன்ஏ தென்றால்
பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித்து அநுப விப்பான்
வரியாலும் வரனும் மற்றை வரிட்டனும் சுகமாய் வாழ்வார். 93

பிரமஞா னிகளும் கர்மப் பேதையர் போல வாழ்ந்தால்
திரமுறும் அஞ்ஞா னம்போய்ச் செனியாத வழிஏது என்றால்
பரவும்ஆ காசம் ஒன்றில் பற்றாது மற்றை நான்கும்
விரவின தோடும்கூடும் விதம்இரு வோரும் ஆவார். 94

சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவன்அயன் நெடுமால் ஆன
மூவரும் மகிழ நோன்பு முழுவதும் செய்து சன்ம
பாவனம் ஆனார் என்று பழமறை முழங்கும் இப்பால்
மேவரும் சீவன் முத்தர் விதேகமுத் தியும்நீ கேளாய் 95

பஞ்சினை ஊழித் தீப்போல் பலசன்ம விவித வித்தாம்
சஞ்சிதம் எல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீ றாக்கும்
சிஞ்சித்ஆ காமி யம்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சின பிராரத் தத்தின் வினைஅநு பவித்துத் தீரும். 96

பொறுமையால் பிராரத் தத்தைப் புசிக்கும்நாள் செய்யும் கர்மம்
மறுமையில் தொடர்ந்தி டாமல் மாண்டுபோம் வழிஏ தென்றால்
சிறியவர் இகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வார்
அறிவுளோர் அறிந்து பூசித்து அறம்எலாம் கைக்கொள் வாரே. 97

அரியமெய்ஞ் ஞானத் தீயால் அவித்தையாம் உடல்நீ றாகும்
பெரியதூ லமும்கா லத்தால் பிணம்ஆகி விழும்அந் நேரம்
உரியசூக் கும சரீரம் உலைஇரும் புண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய்நின்ற சொரூபத்தில் இறந்து போமே. 98

கடம்எனும் உபாதி போனால் ககனம்ஒன் றானாற் போல
உடல்எனும் உபாதி போன உத்தரம் சீவன் முத்தர்
அடிமுடி நடுவும் இன்றி அகப்புறம் இன்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதம்அடைந் திருப்பர் என்றும். 99

சொல்லிய மகனே எங்கும் சூழ்வெளி இருக்க மண்ணைக்
கெல்லிய பின்பு தோன்றும் கிணற்றின்ஆ காசம் போலே
ஒல்லையாம் பிரம நூலால் உற்றது போலே தோன்றும்
எல்லையில் நாம்எப் போதும் ஏகம்என்று இருந்து வாழ்வாய். 100

கானல் 'நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னாவூர்
வானமை கயிற்றில் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனம்ஆம் தறிபு மானின் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே
ஞானம்மெய் மகனே உன்னை நம் ஆணை மறந்தி டாயே. 101

## 2. சந்தேகம் தெளிதற் படலம்

நரர்குழி பறித்துமெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரம்உறக் குத்திக் குத்தி உறைப்பிக்கும் உபாயம் போலப்
பரமசிற் சொரூபம் தன்னில் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகம் தெளிதலை மொழி கின்றேனே.
1

நற்கருத்து உடையோன் ஆகி ஞானவான் ஆகி நின்றான்
மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரம் தொட்டு
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தம் சொன்ன
சற்குரு வினைவி டாமல் சந்ததம் அநுச ரித்தான். 2

சந்ததம் புருடன் தன்னைச் சாயைபோல் விடாமல் அன்பாம்
மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றாயோ
சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்தவோ தெளிவி னுள்ளே
அந்தரம் கலந்த துண்டோ அநுபவம் உரைசெய் வாயே.
3

எனஉரைத் தருளும் ஆசான் இருபதம் வணங்கி எந்தாய்
சனனவன் காட்டில் மோகத் தமத்தெழு பேதப் பேய்கள்
உனதருள் உதய வெற்பில் உபதேச அருக்கன் தோன்றி
மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தால் உண்டோ
4

மந்திர மூர்த்தி தன்னால் மாற்றிய பேய்போ னாலும்
எந்திரம் எழுதிக்கட்டி இனிவரா வகைசெய் வார்போல்
முந்திஉன் உபதே சத்தால் மோகம்போ னாலும் ஐயா
புந்திநின்று உறைக்க இன்னம் புகலும்விண் ணப்பம்
உண்டே. 5

ஆகமப் பிரமா ணத்தால் அறிஎன்றும் வாக்குக் கெட்டாது
ஏகமாம் பிரமம் என்றும் இதயத்தால் உணர்வாய் என்றும்
சோகம்ஆம் மனத்திற்கு எட்டாச் சுயஞ்சோதி என்றும்
சொன்னீர்
மோகம்ஆம் இரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே. 6

மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநிண் ணயங்கூ டாதே
உற்றதோர் விடயம் பூதம் உபயம்அன்று ஆத லாலே
குற்றம்ஆம் குணவி சேடம் கூடாமல் இருக்கை யாலே
இற்றது வாக்குக்கு எட்டாது என்பதும் அறிவாய் நீயே.

வாக்கியம் தனக்கெட் டாது வத்துஎன்று உரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யால்அவ் வத்துவைக் காட்டிற் றன்றோ
வாக்கியங் களிலே மானம் ஆவதேது என்றாய் ஆகில்
வாக்கியம் இரண்டும் மெய்யே மறைகள்பொய்
யாது கேளாய். 8

தன்பதி அல்லாப் பேர்கள் தமைஅல்லன் அல்லன் என்றாள்
அன்பனைக் கேட்ட நேரம் அவள் வெட்கி மௌனம் ஆனாள்
என்பது போல நீக்கி இதன்றிதன்று எனச்சே டித்த
பின்பரப் பிரமம் தன்னைப் பேசாமல் காட்டும் வேதம். 9

முந்திய சங்கை தீர மொழிந்ததை அறிந்து கொள்வாய்
பிந்திய சங்கைதீரப் பேசும்உத் தரம்நீ கேளாய்
இந்தியங் களுக்கி ராசன் இதயமாம் அதின்எண் ணங்கள்
புந்தியும் மனமும என்றே புறத்தகத்து உலாவி ஆடும். 10

உன்முகம் போல்கண் ணாடிக்கு உள்ஒரு முகம்கண்
டாற்போல்
சின்மய வடிவின் சாயை சித்துப்போல் புத்தி தோன்றும்
நின்மனோ விருத்தி அந்த நிழல்வழி யாய்உ லாவும்
தன்மநன் மகனே இத்தைத் தான்அன்றோ ஞானம் என்பார்.
11

உருக்கிய தராநீர் நாநா உருவங்கள் ஆனாற் போல
விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்
அருப்பல விடயம் எல்லாம் ஆபாசன் தோற்று விக்கும்
இருட்டினில் விளக்கும் கண்ணும் இல்லாமல் பொருள்கா
ணாதே. 12

எரிகின்ற விளக்கால் கண்ணால் இருட்பொருள் காணல்
வேண்டும்
தெரிகின்ற பரிதி காணச் சென்றிடில் கண்ணே போதும்
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்
புரிகின்ற விருத்தி ஒன்றே போதும்மெய்ப் பொருள்காண்
போர்க்கே. 13

விருத்தியும் பலமும் கூடும் விகாரமே மனம்என் பார்கள்
கருத்தெழு விருத்தி வேண் டும் கணக்கினால் மனத்திற்கு
எட்டும்
வருத்திய பலம்ஆம் இந்த மனத்திற்கெட் டாது கண்டாய்
அருத்தம்இப் படிஎன் றையம் அகன்றுநீ தெளிந்தி டாயே.
14

வஞ்சகம்இல் பரமார்த்த குருவே சொன்ன வழிகள் அறிந்
தேன் இனிஓர் வசனம் கேளீர்
சஞ்சலம் அற் றஅகண்டபூ ரணமாய்ச் சித்தம்
ததாகாரம் ஆவதன்றோ சமாதி யோகம்
உஞ்சலைஒத்து அலைவதுதன் சுபாவம் ஆகி
ஒருகணத்தில் பலஉலகாய் உதிக்கும் இந்த
நெஞ்சகம்வத் துவில்அசையா நிவாத தீப
நிலைஅடைவது எப்படியோ நீர்சொல் வீரே. 15

கருதுமனோ குணம்மூன்றாம் மூன்றில் ஒன்று
கதித்தெழுந்தால் மற்றிரண்டும் கரந்து நிற்கும்
தருமம்மிகும் சத்துவம்மேல் ஆன போது
சன்மார்க்கம் ஆனதெய்வ சம்பத்து உண்டாம்
மருவுரசோ குணம் ஆகில் உலக தேக
வாதனையாம் சாத்திரவா தனையும் ஆகும்
அருமகனே தமோகுணம்மேல் ஆன போதில்
அசுரசம்பத்து உண்டாகும் அறிந்து கொள்ளே. 16

மனதுசத் துவசொ ரூபம் மற்றிரண்டும்
வந்துகலந் தனஅவற்றை மாற்றி னால்போம்
தனதுசன்மார்க் கத்தைவிடாது இருந்த போது
தமோகுணமும் ரசோகுணமும் சமிக்கும் பின்னை
கனபரிணா மம்சலனம் போம்போ னக்கால்
களங்கமற்று நின்றஆ காசம் போலும்
நினதுளம்அப் படியாம்அப் பிரமத்துஒன்றாய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்கும் தானே. 17

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர்
களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது
விளங்கிஅதன் மயமாகி அபேதம் ஆகி
விகற்பமின்றி நிருவிகற்பம் ஆனால்போல
அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தாய்
ஆநந்தம் ஆம்பிரமத் தைக்கியம் ஆன்
உளந்தெளிந்த படிஇருந்தால உலகம் எங்கே
உலைவெங்கே என்றுசங்கை ஒழித்தி டாயே 18

ஏகம்ஆய் மனம் இறந்தால் சீவன் முத்தர்
இருக்கும்மட்டும் பிரார்த்தம் எதனால் உண்பர்
போகம்ஆ னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ
புசிப்பதென்றால் மனம்தானும் போன தன்றே
சோகம்ஆம் மனம் இறந்தால் போகம் இல்லை
தோன்றும்எனின முத்தர்என்று சொலக்கூ டாதே
மோகம்ஆம் இதுதெளியக் குருவே நன்றா
மொழிந்தருள்வாய் தெளிந்ததன்றோ முத்தி தானே. 19

மனநாசம் சொரூபமென்றும் அரூபம் என்றும்
வகுத்துரைப்பார் இருவகையா வரும்இ வற்றில்
வினவாத சீவன்முத்தர் இடத்தில் ஒன்றும்
விதேகமுத்தர் இடத்தில்ஒன்றும் மேவும் கண்டாய்
தனதான சத்துவமாய் மனம்சே டித்துத்
தமசுரச சுகள்நசித்தல் சொரூப நாசம்
அனகாசத் துவம்தானும் இலிங்க தேகம்
அடங்கும்போது அடங்குதலே அரூப நாசம். 20

சுத்தமாம் சத்துவமே உண்மை ஆகும்
துகள்இருள்போ னால்மனம் என் சொல்லும் போம்போம்
வர்த்தமா னத்தில்வந்த உணவை உண்பார்
வருவதும்போ வதும் நினைத்து மகிழார் வாடார்
கர்த்தராம் அகந்தையைவிட் டகர்த்தர் ஆகிக்
கரணவிருத் திகள்அவத்தை காண்பார் ஆகி
முத்தராய் இருக்கலும்ஆம் புசிப்பும் கூடும்
முட்டிலைஎன் றறிந்துசங்கை மோசிப் பாயே. 21

விவகார வேளையெலாம் சமாதி என்றால்
நிகழ்வுமன்றோ மனம்அலைந்து விடாதேர விட்டால்
அவதானம் நழுவுமன்றோ என்றாய் ஆகில்
அதற்கொருதிட் டாந்தம்கேள் ஆசை கொண்டு
நவமாகப் பரபுருடன் தன்னைக் கூடி
நயந்தசுகம் அநுபவித்த நாரி நெஞ்சம்
தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதும்
தழுவியநு பவித்தசுகம் தனைவி டாதே 22

தேகத்தன் அலன்ஆகி அகர்த்தன் ஆகிச்
சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன்
போகத்தை உண்பன் என்றால் கருத்தா ஆமே
பூரணமாம் அகர்த்தனுக்குப் போகம் உண்டோ
சோகத்தை அறுத்தருளும் குருவே இந்தத்
துகள்அறுக்க வேண்டும்என்று சொன்னாய் ஆகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தி யாகி
வகைமூன்றாய் அவர்இருக்கும் மகிமை கேளாய். 23

செய்கையும்செய் விக்கையும்அற் றிருக்கும் காந்தச்
சிலைமலைமுன் இரும்புகள்சேட் டிக்கு மாபோல்
செய்கையும்செய் விக்கையும்அற் றிருக்கும் என்முன்
செடமான உலகம்எலாம் சேட்டை செய்யும்
மெய்கலந்த இந்திரிய விகார ரூப
விவகார விருத்திக்கும் விருத்தி தானா
மெய்கலந்த சமாதிக்கும் சாட்சி யேநான்
வெயில்போல்என்று உறைத்தவனே விபுமா கர்த்தன். 24

அறுசுவையின் குணம்குற்றம் அசுத்தம் சுத்தம்
அபத்தியம்பத் தியம்எனஊண் ஆய்ந்தி டாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல்
போகங்கள் புசிப்பவன்மா போகி ஆகும்
சிறிதுபெரி துகள்தனதந் நியங்கள் நன்மை
தீமைகள்சே ரினும்படிகச் செயல்போல் சித்தம்
வெறிதிருக்கும் அவனேமாத் தியாகி ஆவன்
விரதம்இம்மூன் றுடையவரே விடு ளோரே. 25

மெய்யும் கொண்டு பிராரத் தம்தரு விதிவழி நின்றிடவும்
உய்யும் கர்மிக ளுக்கநு குணமா உறுதொழில் செய்திடவும்
செய்யும் செய்கை முடிந்தவன் என்றுரை செப்புவது
எப்படியோ
நையும் துன்பம் அகற்றிய குருவே நலமா அருள்வீரே. 26

ஆடவர் செய்தொழில் மூவகை ஆகும் அவித்தைவ
சத்துறுநாள்
ஏடணை மமதை அகந்தையு ளார்க்கே இகபர விவகாரம்
வீடணு குவஎனும் இச்சைஉ ளார்க்கே வித்தைப
டிப்பதெலாம்
பாடல்மி கும்தொழி லாற்பலன் உண்டோ பரிபூ ரணமானால்
27

குரவர்சி காமணி யேகே ளீர்நீர் கூறின வழிஒக்கும்
பரமுடன் இகமுப்இ ழந்தவர் அன்றோ பழகுவர்
மெய்ஞ்ஞானம்
விரவும் முயற்சியின் மீண்டவர் அதைஇனி வேண்டுவ
ரோவேண்டார்
சிரவண மனனா திகள்வேண் டாவோ சித்தம்உ றைத்திடவே.
28

கிளர்மக னேகேள் தத்துவம் அறியார் கேட்டல்செ யக்கடனே
தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்
தெளிதலின் நிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்
வெளிஉரு வாய்அறி வாய் நிறை வாயினர் வேண்டுவ
தொன்றுண்டோ 29

ஐயா கேளீர் தத்துவ ஞானியும் அஞ்ஞா னிகள்போலச்
செய்யா நின்றேன் கண்டேன் உண்டேன் சென்றேன்
எனலாமோ
பொய்யாம் விபரீ தங்கள்அ வர்க்குப் போயின என்றீரே
மெய்யாம் பிரமவி சாரம்இ தன்றே வெளியா உரையீரே.
30

ஒய்ந்தக னாவில் கண்டப ழங்கதை ஓதுவன் வாதனையால்
ஆய்ந்தறி வற்றவன் அப்படிச் செப்புவன் ஆபா சனும்ஆகான்
மாய்ந்ததன் உடல்வேம் அளவும் விண்ணவன் மநுடன்எ
னப்படுவான்
வீய்ந்தசி தபா சன்போம் அளவும் விவகா ரம்தொடரும்.
31

ஆனால் ஐயா குருவே காண்பது அசத்தியம் என்றாலும்
நானா விவகா ரம்துயர் அலவோ ஞானசு கம்தருமோ
போனால் அன்றோ நன்றாம் நிட்டை பொருந்திடல்
வேண்டாவோ
தானாம் நிட்டை புரிந்தால் செய்கை தவிர்ந்தவன்
எப்படியோ. 32

தெரிதரு மகனே ஆரம் பத்தொடு தீரும் விகாரம்
உரியதி யானமும் விவகா ரங்களும் உள்ளத் தொழில்
அன்றோ
துரியப ரம்பொருள் ஆனவர் வேறொரு தொழில்செய்
வதுமுண்டோ
அரியச மாதிகள் பழகுவ னேல்அவன் ஆரூ டனும் அன்றே.
33

உத்தம குருவே ஆரூ டருமாய் ஒருதொழில் அற்றவருள்
சித்தம்அ டங்குதி யானா திகள்சிலர் செய்குவ தென்னென்றால்
இத்தலம் மருவும் பிராரத் தப்பிரி வெப்படி அப்படியே
முத்தரும் வெகுவிதம் ஆகுவர் என்பதுமுன்னே சொன்னேனே.
34

நல்லவ னேகேள் உலகுப காரம் ஞானிகள் விவகாரம்
அல்லது வேறொரு பெறுபே றும்இலை அதனால் பிணியும்
இலை
வல்லசி ருட்டிமு தற்பல தொழிலால் வருபுண் ணியபாவம்
எல்லவ ருக்கும்அ நுக்கிர கம்செயும் ஈசன்அ டைந்திலனே.
35

ஈசனு மாய்அரு வாய்உரு வாகிஎ ழுந்தரு ளும்குருவே
ஈசனும் ஞானியும் ஒப்பென் றீரே எப்படி ஒப்பென்றால்
ஈசனும் ஞானியும் மமதைஅ கந்தைஇ கந்தடி னால்ஒப்பாம்
ஈசனும் ஆம்பல சீவரும் ஆம்உல கெல்லாம் இவனாமே. 36

எல்லாச் சீவரும் இவன் ஆம் என்றீர் இவன்தான்
முத்தியடைந்
தெல்லாச் சீவரும் முத்திபெறாமல் இருப்பான் ஏனையர்
எல்லாச் சீவரும் வெவ்வே றானால் இவன்எல் லாம்அலனே
எல்லாப் பொருளும் உரைத்தருள் குருவே இதைநீர்
மொழியீரே. 37

அகம்எனும் ஆன்மா பூரணம் ஏகம்அ நேகவி தம்சீவர்
அகம்எனும் அந்தக் கரணோ பாதிகள் அளவிலை
ஆதலினால்
சகம்முழு தும்குளிர் சந்திரன் ஏகம் சலசந் திரர்பலராம்
சகம்அதில் எரிகு ளம்சிறு குழிசால் சட்டி குடம்பலவால். 38

சட்டிகு டங்களில் ஒன்றுந சித்திடின் அதினுள் சலசந்திரன்
ஒட்டுமு தற்சந் திரனொடு கூடும்ஒ ழிந்ததை கூடாதே
கட்டும்உ பாதிந சித்திடு சீவன் காரண ஆன்மாவில்
கிட்டும்அ யிக்கம்உ பாதிகெ டாதவர் கேவலம் ஆகாரே
39

இவன்அயன் மால்சிவன் ஆகிய ஈசரொ டெப்படி ஒப்பாவான்
சிவன் முதல் மூவரும் அகிலசி ருட்டி திதிநா சங்கள்செய்வார்
அவர்பிறர் மதிகளும் முக்கா லங்களும் அறிவார் விபுஆவார்
தவம்மிகு குருவே இவனுக் கவையிலொர் சற்றும் காணேனே.
40

தடத்து நீர்நிலாத் திரிஒளி உயமும் தழுவும் ஊர்தனைக்
காக்கும்
குடத்து நீர்விளக் கினில்ஒளி இரண்டும் ஓர் குடும்பம் மாத்திரம்
காக்கும்
அடுத்த மைந்தனே ஞானியும் ஈசனும் அறிவினால் பிரிவில்லை
கெடுத்த மாயையின் குணங்களால் மேலென்றும் கீழென்றும்
பிரிவாமே. 41

நரரின் முன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான
சுரர்கள் மாயைவல் லவர் அணி மாதிகள் தொக்கமா
தவம்மிக்கோர்
தரணி மாநுடர்க்கு அவைகள்இல் லாமையால் தாழ்வுளர்
ஆனாலும்
பிரம பாவனை யால்இவர் அவர் எனும் பேதம் ஒன்
றிலைபாராய் 42

முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக் கணிமாதி
சித்தி பூமியில் கண்டிருக்கவும் அந்தச் செல்வம் சனதென்றீ
புத்தி ஒத்திட உரைத்தருள் என்றிடில் புகழும் சனை
நோக்கிப்
பத்தி செய்திடும் தவத்தினால் யோகத்தால் பலித்ததென்
றறிவாயே. 43

சிவசொ ரூபமாம் தேசிக மூர்த்தியே சித்திமுத் தியிரண்டும்
தவமுள்ளோர் அடைகுவர்எனில் அவர்கள்போல் சகலரும்
அடைவாரே
அவர்கள் பூருவம் சித்தியும் ஞானமும் அடைந்ததநும்
கண்டாமே
இவர்கள் ஞானிகள் என்றிடின் சித்திகள் இவர்க்கிலா
வகைஏதோ 44

காமி யத்தவம் காமியம் ஒன்றையும் கருதிடாத் தவம்என்றும்
பூமி யில்தவம் இருவகை சித்தியும் போதமும் தரும்மைந்தா
ஆமி வற்றில்ஒன் றியற்றினார் ஒன்றையே அடைகுவர்
இதுதீர்வை
யாமுரைத்த அவ்விரண்டையும் இயற்றினார் அன்றுள
பெரியோரே 45

அனக மைந்தனே முத்திஞா னத்தையே அடைந்தனர்
அல்லாமல்
செனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் புடித்தாரோ
இனிய சித்தியே விரும்பினார் சிலர் சிலர் இரண்டையும்
முயன்றார்அம்
முனிவர் சித்திகள் விநோதம்மாத் திரம்தரும் முத்தியைத்
தாராவே. 46

யோக ஞானமே முத்தியைத் தரும்எனின் ஒழிந்தசித்
திகள்வேண்டி
மோக மாய்உடல் வருந்தினார் சிலசில முத்தர்கள்
ஏனென்றால்
போக மாய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றோ
நசித்தேகும்
ஆகை யால் அந்தச் சித்திகள் பிராரத்தம் ஆகும்என்
றறிவாயே. 47

இலக்கம் ஆயிரம் சுருதியால் ஊகத்தால் என்மனம்அசையாமல்
பெலக்க வேண்டும்என் றருள்குரு வேஅகப் பிராந்திபோய்த்
தெளிவானேன்
துலக்கம் ஆனகண் ணாடியை அடிக்கடி துலக்கினால்
பழுதன்றே
அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்குரை அமிர்தங்கள்
தெவிட்டாவே 48

கைத வங்களைச் சாத்திரம் சொல்லுமோ கருணையால்
எனைஆளும்
ஐய னேகுரு வேஎவர் ஆகிலும் அநுபவித் தால்அன்றிச்
செய்த கர்மங்கள் விடாஎன்ற வசனமும் சென்மசஞ்
சிதம்வேவத்
துய்ய ஞானத்தீச் சுடும்என்ற வசனமும் துணிவதெப்
படிநானே. 49

சீவ பேதங்கள் அளவிலை மைந்தனே செய்கையும்
அளவில்லை,
ஆவ ஆம்அவர் அவர்அதி காரங்கள் அறிந்துபக்
குவம்நோக்கிப்
பூ அ லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோல் பூருவம்
சிந்தாந்தம்
காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும் காண்டம்
மூவகையாலே 50

ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியம் ஆனாலும்
தான மந்திர விரதஓ மங்களால் தவிரும்என் பதுபொய்யோ
ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை எத்தனை ஆனாலும்
ஞானம் ஆம்கனல் சுடும்என்ற மறைமொழி நம்பினால்
விடுண்டே. 51

என்ம னம் திருக் கோயிலாத் தினம்குடி இருந்தருள்
குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினைகள்வேர் அறுத்திடும் தேவரீர்
மெய்ஞ்ஞானம்
தன்ம யம் தரு மகிமையை விபுதர்ஆம் சமர்த்தரும் அறியாமல்
கன்மம் ஆம்குழி யினில்விழுந் தழிகின்ற காரணம் உரையீரே.
52

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே அகமுகத் தவர்சேர்வர்
வழிந டப்பவர் பாராமுகம் ஆயினால் மலர்ந்தகண்
இருந்தாலும்
குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம் கொண்டுகா
மிகள்ஆனோர்
பழித ரும்பிற விக்கடல் அருந்துவர் பரகதி அடையாரே. 53

சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும்
செயல்அன்றோ
பிறந்த சீவர்கள் என்செய்வர் அவர்கள்மேல் பிழைசொலும்
வழிஏதோ
துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில் சுருதிநூற்
பொருள்மார்க்கம்
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்த ன
அதுகேளாய். 54

திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார் சிருட்டியும்
வெவ்வேறே
சகந்த னிற்பொது ஈசனார் சிருட்டிகள் சராசரப்
பொருள்எல்லாம்
அகந்தை ஆம்அபி மானங்கள் கோபங்கள் ஆசைகள் இவை
எலலாம்
இகழ்ந்த சீவனார் சிருட்டிகள் ஆகுப்காண் ஈசனார்செயல்
அன்றே. 55

மூவர் ஆம்பரன் சிருட்டிகள் உயிர்க்கெலாம் முத்திசா
தனம்ஆகும்
சீவ னார்செயும் சிருட்டிகள் தங்களைச் செனிப்பிக்கும்
பிணிஆகும்
தாவ ராதிகள் நசித்திடில் ஒருவருக்கும் சனனங்கள்
நசியாவாம்
கோபம் ஆதிகள் நசித்திடில் பந்தம்ஆம் கொடும்பிற
விகள்போமே. 56

ஈசர் காரியம் பிரளயத்து ஒழியவும் எவர்பவம் ஒழிந்தார்கள்
தேச காலதே காதிகள் இருக்கவும் சீவகா ரியமோகம்
நாசம் ஆக்கிய விவேகத்தின் உயிரொடு ஞானமுத் தர்களானார்
பாச மோகங்கள் பசுக்களின் செயல்அன்றிப் பசுபதி
செயல்அன்றே 57

அச்சு வத்தம்என்று ஒருமரம் அதில் இரண்டு அரும்பற
வைகள்வாழும்
நச்சும் அங்கொரு பறவைஅம் மரக்கனி நன்றுநன்று
எனத்தின்னும்
மெச்சும் அங்கொரு பறவைதின் னாதென வியங்கியப்
பொருளாக
வைச்சு மாமறை சீவனை ஈசனை வகுத்தவாறு அறிவாயே 58

இந்தச் சீவனால் வரும்பேறு பகைஎலாம் இவன்செயல்
என்னாமல்
அந்தத் தேவனால் வரும்என்ற மூடர்கள் அதோகதி
அடைவார்கள்
இந்தச் சீவனால் வரும்அறு பகைஎலாம் இவன்செயல்
அல்லாமல்
அந்தத் தேவனால் அன்றெனும் விவேகிகள் அமலவீடு
அடைவாரே. 59

நலம்மெய் ஐயனே எல்லவர்க் கும்தெய்வ நாயகன்பொது
ஆனால்
சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதேன்
என்றாயேல்
குலவு மக்களைத் தந்தைபோல் சிட்டரைக் குளிர்ந்துதுட்
டரைக்காய்வன்
கலைகள் நல்வழி வரச்செயும் தண்டமும் கருணைஎன்று
அறிவாயே. 60

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரம்கனல் புனல்மூன்றும்
தனை அடைந்தவர் வறுமையும் சீதமும் தாகமும்
தவிர்த்தாளும்
அனைய ஈசனும் அடைந்தவர்க்கு அருள்செய்வன் அகன்ற
வர்க்கு அருள்செய்யான்
இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகும்என்று எண்ணிநீ
அறிவாயே. 61

ஒன்றுகேள்மக னேபுமான் முயற்சியால் உறைத்துமா
நுடர்க்குஈசன்
நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே

சென்றுதுட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்த மா
யையைத் தள்ளி
நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள்போம் நிச்சயம்
இதுதானே. 62

இந்த ஞானந்தான் வருவதெப் படிஎனின் இடைவிடா
விசாரத்தால்
வந்த டைந்திடும் விசாரந்தான் ஏதெனில் மனாதியாம்
சரீரத்தில்
இந்த நான்எவன் சித்தெது சடம்எது இரண்டும்ஒன்
றாக்கூடும்
பந்தம் ஏதுவீ டேதென உசாவுதல் பகர்விசா ரமதாகும். 63

போன சன்மங்கள் தமில்அநுட்டித்தநல் புண்ணிய பரிபாகம்
ஞானம் ஆக்குமே விசாரம் ஏன் என்றிடில் நாம்உரைத்திடக்
கேளாய்
ஆன புண்ணியம் ஈசுரார்ப் பணம்செயின் அசுசிபோம் சுசிஆகும்
மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவும்என் றறிவாயே.
64

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமும் அணிமாதி
சித்தி யும்தவ நிட்டையும் யோகமும் தியானமும் சாரூப
முத்தி யும்தரும் விசித்திர கருமங்கள் மோகம்மாத் திரம்தள்ளும்
புத்தி தந்திடல் அருமையோ விசாரம்ஏன் புண்ணிய
குருமூர்த்தி 65

வேடம் மாறிய பேர்களை அறியவே வேண்டினால்
மகனேகேள்
கூடம் ஆம்அவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகள் ஆய்ந்
தறியாமல்
ஓடி யும்குதித் தும்தலை கீழ்நின்றும் உயர்ந்த கம் பத்தேறி
ஆடி யும்பல கருமங்கள் செய்யினும் அவர் உண்மை
தெரியாதே. 66

இன்ன வாறந்தப் பிரமத்தை அறிவிக்கும் இலக்கணத்
தால்வேதம்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வரும்அன்றிச் சுருதிநூல்
படித்தாலும்

அன்ன தானங்கள் தவங்கள் மந்திரங்கள்ஆ சாரங்கள் யாகங்கள்
என்ன செய்யினும் தன்னைத்தான் அறிகின்றது இவைகளால் வாராதே 67

துளங்கு தர்ப்பணம் அழுக்கறக்கைக்கொண்டு துலக்கினால் போமன்றி
விளங்கு புத்தியால் உலகில்ஆர் துலக்கினார் விமலதே சிகமூர்த்தி
களங்கம் ஆகும்அஞ் ஞானமும் அப்படிக் கருமத்தால் கழுவாமல்
உளம்கு றித்தஞா னத்தினால் எப்படி ஒழியுப்ஈ தருள் வீரே. 68

தர்ப்ப ணத்தினில் களிம்புவாஸ் தவமலம் சகசமா தலின் மைந்தா
கற்ப ளிங்கினில் கருநிறம் சகசமாக் கறுத்ததன்று ஆரோபம்
தர்ப்ப ணத்தினில்அழுக்கற வேண்டினால் சாதனத் தொழில் வேண்டும்
கற்ப ளிங்கில்ஆ ரோபமே கறுப்பென்று கண்டிட மனம்போதும் 69

இங்கும் அப்படிச் சச்சிதா நந்தத்தில் இடர்சடம் பொய் மூன்றும்
தங்கும் மாயையின் கற்பிதம் அன்றியே சகசவாஸ் தவம் அன்றே
பங்கம் ஆகும் அஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைசெயாது உறவாக்கும்
துங்க ஞானமே கருமஅஞ் ஞானத்தைச்சுடுகின்ற நெருப்பாமே. 70

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநூறு அழுதாலும்
நினைத்து ணர்ந்தபின் கிட்டும்அப் படிஇந்த நின்மல ஆன்மாவும்
அனர்த்தம் ஆனதன் மறதியைக் கெடுத்துத்தன் அறிவினால் காணாமல்
கனத்த கர்மங்கள் நூறுகம் செய்யினும் காணுமோ காணாதே. 71

நன்மை யாம்குரு வேசுகம் தருவது ஞானமே எனும் வேதம்
தன்ம பாவமிச் சிரங்களால் தேவர்கள் தருவிலங் குகள்மாந்தர்
சென்ம மாகுவ சாதிஆ சாரமே செய்தவம் சுகம்என்று
கன்ம காண்டத்தில் விதித்ததென்விதித்துள காரணம்
உரையீரே. 72

தினமும் மண்நுகர் பிள்ளைநோய்க்கு இரங்கியே தீம்பண்டம்
எதிர்காட்டிக்
கனம ருந்துகள் ஒளித்துவைத் தழைக்கின்ற கருணைநற்
றாய்போல
மனைஅ றங்கள் செய் மகங்கள்செய் நன்றென்று மலர்த்தவா
சகம்சொல்லும்
நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகள்அந்த நிண்ணயம்
தெரியாரே. 73

போகம் ஆருயிர் கண்டதை உண்பதும் புணர்வதும்
இயல்பேகாண்
ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ அத்தனை
தெரியாதோ
காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ
வேக வாயுவே அசைஎன ஒருவரும் விதித்திட வேண்டாவே.
74

கள்ளும் ஊனும்தீ விரும்பினால் மகங்கள்செய் காமத்தில்
மனதானால்
கொள்ளும் பெண்டொடு கலவிசெய் எனில்இவன்
குறைஎலாம் தொடான்என்றே
தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும் தவிர்வதே கருத்தாகும்
விள்ளும் இவ்விதி என்னெனில் பூருவம் நியமமாம் விதி
அன்றே. 75

மதுஇ றைச்சிகள் உண்என்ற சுருதிபின் மணந்துபார்
எனல்பாராய்
மிதுன இச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற
விதிபாராய்
இதையும் விட்டொழி அதிநயிட் டிகவந்நிக் கிகழ்ச்சி
அற் றதும்பாராய்
அதைஅ றிந்துகன் மங்கள்ஆ சைகள்ஒழிந்துஆனந்தம்
அடைவாயே. 76

உலகம் ஆனஅஞ் ஞானமும் கருமமும் உறவென்ற வழிகூடும்
பலவும் ஆனஅஞ் ஞானமும் ஞானமும் பகைஎன்பது
உளதானால்
நிலவி லேமறுப் போல அஞ் ஞானமும் நிமலாஞா னத்தோடே
குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவும் கூடுமோ
குருமூர்த்தி. 77

சொரூப ஞானமும் விருத்திஞா னமும்எனச் சோதிஞானமும்
இரண்டாம்
சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்வே
றிலைமைந்தா
சொரூப ஞானம்அஞ் ஞானசத் துருஅன்று சுழுத்தியில்
கண்டாயே
சொரூப ஞானத்தில் மருவும் அஞ் ஞானத்தைச் சுடும்
விருத்தியின் ஞானம். 78

துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாததற் சொரூபஞா
னம்தானே
விருத்தி ஞானமாச் சுட்டதெப் படிஎனில் வெய்யிலால்
உலகெங்கும்
பரித்த சூரியன் சூரிய காந்தத்தில் பற்றிஅக் கினியாகி
எரித்த வாறுபோல் சமாதியில் விருத்தியால் எரிக்கும்
என்றறிவாயே. 79

அருளும் ஐயனே திரிவித கரணத்தால் ஆகிய தொழில்
எல்லாம்
கருமம் அல்லவே விருத்திஞா னமும் அந்தக் கரணகா
ரியம்அன்றோ
உரிய கர்மம்அஞ் ஞானத்தைக் கெடுக்கும் என்று ஓதினால்
ஆகாதோ
பெரிய ஞானம்என்று அதற்கொரு பெயரிட்ட பெருமையை
உரையீரே. 80

விருத்தி ஞானம்அந் தக்கர ணத்தொடு விருத்திஆ
கிலும்மைந்தா
ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்றது உலகெங்கும்
கண்டோமே

கருத்தன் ஆகிய புருடதந் திரங்களாம் கருமங்கள்
அவைபோல
அருத்த ஞானமோ புருடதந் திரம்அன்று வஸ்துதந்
திரம்ஆமே. 81

வகுத்த கருமங்கள் செய்யவும் தவிரவும் மற்றொன்றாக்
கவும்கூடும்
மிகுத்த ஞானம்அப் படிஅன்று தியானமும் விவேகஞா
னமும்வேறே
செகத்தில் ஒன்றையொன் றாஇவன் பாவிக்கும் தியானம்கற்
பிதயோகம்
முகத்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவம் மோகமாய்
மயங்காதே. 82

கண்ட றிந்தது ஞானம்கேட் டதுதனைக் கருதுபா
வனையோகம்
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோம் கண்டது
மறவாதே
கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவிஅஞ்
ஞானத்தைக்
சுண்ட அக்கணம் கொல்வது ஞானமே கருமம்அன்று
அறிவாயே. 83

சருவ முத்தியைத் தருகின்ற தியானமும சத்தியம்
அன்றென்றால்
சருவ முத்தியும் சத்தியம் அன்றென்று சங்கியா தேநீகேள்
உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில் அவ்வுருவம்
வாஸ் தவம்அன்றே
உருவம் ஆகும்அப் பொழுதுகண்ணாற் கண்ட உருவம்வாஸ்
தவம்ஆமே. 84

சடம தாகிய தியானம்மெய் ஆகிய சர்வமுத் தியைநல்கும்
திடம தானதெப் படிஎனில் அவரவர் தியானமே பிறப்பாகும்
உடலம் ஆசையால் தியானிக்கின் தியானித்த உடல்கள்
ஆகுவர் மைந்தா
தொடர்ப வம்கெடச் சொருபமே தியானிக்கில் சொரூபமா
குவர்மெய்யே. 85

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவர்என்றால்
நரச ரீரம்ஆம் குரவனே விசாரம்ஏன் ஞானம்ஏன் என்னாதே
பரம பாவனை பரோட்சம்ஆம் பின்பந்தப் பரோட்சமே
அபரோட்சம்
திரவி சாரம்ஆம் ஞானம்ஆம் முத்திஆம் தீர்வைஈ தறிவாயே.
86

விட தாம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமும்கூடிச்
சேடம் ஆயினால் அகண்டம்ஆம் அநுபவ சித்திஎப்
படிஎன்றால்
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி தானும்மண்
ணொடுமாயும்
ஊடி ஞானமும் அறிவிலா மையைக்கெடுத்தொக்கவே
கெடுந்தானே. 87

இந்த நிச்சயம் முத்தருள் அநுபவம் இருப்பதெப் படிஎன்றால்
சிந்தை அற்றபூ மண்டல இராசனும் சிசுவும்போல் சுகம்
ஆவார்
பந்த முத்திகள் மறந்துபோம் உண்டென்று பலர்சொலின்
நகைஆவார்
அந்த ரத்தைஉண்டு உமிழ்ந்ததோர் கொசுகெனும்
அவர்களை நகையாரோ. 88

மலடி மைந்தனும் தாணுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி
இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை இரசதம் விலைபேசிக்
கலகம் ஆய்முயற் கொம்பினால் குத்தியே களைத்திரு
வரும்மாண்டார்
அலகை ஆயினார் எனும்விவ காரத்தை அறிந்தவன்
மயங்கானே. 89

மாயை என்பது பொய்எனில் அதுபெற்ற வகைஎலாம்
பொய்ஆமே
தாயை அன்றிமக் களுக்கொரு பிறவியும் சாதியும்
வேறுண்டோ
சேய சொர்க்கமும் நரகமும் நன்மையும் தீமையும் பாராமல்
தூய சத்துச்சித் தாநந்த பூரண சொரூபமாய் இருப்பாயே.
90

பங்க யாசனன் முதற்பல தேவரும் பார்உள பெரியோரும்
கங்கை ஆதிஆம் தீர்த்தமும் தேசமும் காலமும் மறைநாலும்
அங்கம் ஆறும்மந் திரங்களும் தவங்களும் அசத்தியம்எனச்
சொன்னால்
எங்கள் நாயக னேஅத னாற்குற்றம் இல்லையோ
மொழியீரே. 91

சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்என்று சொல்வது
பிழைஆனால்
அற்ப மாயையில் தோன்றிய சகங்களை அசத்தெனல்
பிழைஆமே
சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்என்று சொல்லலாம்
எனில்மைந்தா
அற்ப மாயையில் தோன்றிய சகம்எலாம் அசத்தியம்
எனல்ஆமே. 92

பொய்யை மெய்என்ற மூடர்புண் ணியர் என்று புராணம்கூப்
பிடுமானால்
மெய்யை மெய்என்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத்
திரம் உண்டோ
பொய்யது ஏதெனில் நாமரூ பங்களாம் பூதம்ஆ கியமாயை
மெய்யது ஏதெனில் சச்சிதா நந்தமாய் வியாபிக்கும்
ஆன்மாவே. 93

மாயை என்பதேது உடையர்ஆர் எப்படி வந்தது வருவான்ஏன்
மாயை என்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவும்
இரண்டாமே
மாயை என்பதும் பிரமமும் ஒன்றெனின் வஸ்துவும்
பொய்யாமே
மாயை என்றமே கங்களுக்கு ஒருசண்ட மாருத குருமூர்த்தி.
94

அதனை இன்னதென்று உரைத்திடப் படாமையால்
அவாச்சிய வடிவாகும்
இதுத னக்குளது உடலியான் உலகுமெய் என்பவர்
உடையோர்கள்

கதைஇ லாதபொய் வந்ததிப் படிஎன்று கண்டபேர்
இலைமைந்தா
விதன மாயைஏன் வந்ததென் றால்புத்தி விசாரம் அற்
றதனாலே. 95

அருவம் ஆகும்மா யாவிவித் தைகள்விளை யாடுமுன்
தெரியாவே
உருவம் ஆம்பல கந்தர்ப்ப சேனையாய் உதித்தபின்
வெளியாகும்
பிரம சத்திகள் அநந்தமாம் அதைக்கண்டு பிடித்திடல்
கூடாதே
பரவு பூதங்கள் கண்டநு மானத்தால் பலருக்கும் வெளிஆமே.
96

காரி யங்களும் சத்திஆ தாரமும் காணும்மற்ற றதுமாயம்
பாரில் நின்றமா யாவியும் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரி யம்திகழ் வித்தைஆ யினசத்தி வெளிப்படா ததுபோலப்
பேரி யற்பிர மத்துக்கு உலகுக்கும் பிறிதுசத் திகள்உண்டே.
97

சத்தி சத்தனைத் தவிரவேறு அன்றுகாண் சத்தனாம் மாயாவி
வித்தை காட்டிய இந்திர சாலம்பொய் வித்துவான்
மெய்ப்போலப்
புத்தி மைந்தனே சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவின்
வத்து நிர்ணயம் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு
தெளிவாயே. 98

இல்லை ஆகிய சத்தியை உண்டென்ப தெப்படி எனக்கேட்கில்
புல்லை ஆதிஆம் அசேதனப் பொருள்எலாம் பூத்துக்காய்ப்
பனபாராய்
நல்லை ஆம்மக னேஅதில் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால்
தொல்லை யாய்வரும் சாரசர உயிர்க்கெலாம் சுபாவங்கள்
வேறாமே. 99

கருப்பை முட்டையுள் பறவைகள் பலநிறம் கலந்தசித்
திரம்பாராய்
அருப்பம் ஆம்சத்தி நியமம்இல் லாவிடில் அரசிலா
நகர்போலாம்

நெருப்பு நீரதாம் கசப்புமே மதுரம்ஆம் நீசனும் மறைஒதும்
பொருப்பு மேகம்ஆம் கடல்எலாம் மண்கள்ஆம் புவனம்இப்
படிப்போமே. 100

ஆர்க்கும் காணவும் அறியவும் படாதென்றும் அவாச்சிய
வடிவென்றும்
சேர்க்கும் நாமரூ பப்பயிர் வித்தென்றும் செப்பிய சிற்சத்தி
பேர்க்கும் ஆறெங்ஙன் பிரித்திடப் படாதெனில் பிரமபா
வனைஒன்றாப்
பார்க்கும் ஆறெங்ஙன் முத்திஆ குவதெங்ஙன் பரமசற்
குரூமூர்த்தி. 101

வாயுத் தம்பனம் சலத்தம்ப னம்மணி மந்திரம் மருந்தாலே
தேயுத் தம்பனம் செய்திடில் அதிலதில் சிறந்தசத் திகள்எங்கே
நீஅச் சச்சிதா 'நந்தம்ஆய் வேறொன்றும் நினைந்திடா
திருப்பாயேல்
மாயச் சத்திபோம் ஈதன்றி மந்திரம் மறைகளில் காணோமே.
102

மேவும் மண்ணில் அவ் வியத்தமே வியத்தம்ஆம் விவகரித்
திடவேண்டில்
நாவி னால்மண்ணைக் குடம்என்பர் அக்குடம் நசிப்பதும்
நாவாலே
பாவும் நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம்
சிவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மயன் ஆவாயே. 103

பூரிக் கும்கன சச்சிதா நந்தத்தில் பொய்சடம் துயர்மூன்றும்
தூரத் தாயினும் தோன்றுபாழ் விபரிதம் துடைப்பதெப்
படிஎன்றால்
நீரில் தோன்றும்தன் நிழல்தலை கீழதாய் நின்று அலையினும்
நேராய்ப்
பாரில் தோன்றிய தன்னைநோக் கிடில் அந்த பாழ்நிழல்
பொய்யாமே. 104

ஞானம் காரணம் அறிபொருள் காரியம் நாமரூ பப்பேய்கள்
ஆனது எப்படி அழிந்தது எப்படிஎன ஆய்குதல் பயன் அன்றே

மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல்
போனதும்நினை யாமல்உன் போதம்ஆய்ப் பூர்ணமாய்
இருப்பாயே. 105

அசத்தில் எம்மட்டுண்டு அம்மட்டும் பராமுகம் ஆகினால்
அம்மட்டும்
நிசத்தில் உள்விழிப் பார்வைஆம் இப்படி நிரந்தரப்
பழக்கத்தால்
வசத்தில் உன்மனம் நின்றுசின் மாத்திர வடிவம்ஆ
யிடில்மைந்தா
கசத்த தேகத்தில் இருக்கினும் ஆநந்தக் கடல்வடிவு
ஆவாயே. 106

தான்அன்றி வேறொன்றும் இல்லாத பூரண சச்சிதா
நந்தகுணம்ஆய்
ஊன்நின்ற உயிர்தோறும் ஒன்றாகும் என்றால் அஃது
ஒக்கின்ற படிகண்டிலேன்
நான்என்ற சீவன்கள் சத்தான வகைஒக்கும் ஞானங்கள்
வெளிகண்டதால்
ஆநந்தம் இதுபோல வெளியாக உதியாதஅடைவேது
குருநாதனே. 107

உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் ஒருபூவில் ஒன்றாகும்
என்றாலுமே
கரணங்கள் ஒரொன்றில் ஒரொன்று தெரியும்கணக்கன்றி
வாராதுகாண்
அருமந்த சச்சிதா நந்தச் சுபாவங்கள் ஆன்மாவின்
வடிவாகிலும்
பிரபஞ்ச மயமாம்விருத்திபே தத்தினால்பே தங்கள்
ஆம்மைந்தனே 108

தாமதம் இராசதம் சாத்துவிகம் முக்குணத் தால்வரும்
விருத்திமூன்றாம்
ஆமவைகள் மூடமும் கோரமும் சாந்தமும் அபிதானம்
ஆகும்மகனே

ஏமுறஇ ருக்கின்ற சச்சிதா நந்தங்கள் என்றென்றும்
ஒன்றாகிலும்
நாமுரைக் கும்விருத் திப்பிரிவி னால்சொரூப ஞானாதி
பிரிவாகுமே. 109

சடமான மூடத் தருக்கல்லு மண்களில் சத்தொன்று
மேதோன்றுமால்
விடமான காமாதி கோரத்தில் ஆநந்தம் விளையாது
மற்றவைகளாம்
திடமான ஒழிவாதி சாந்தத்தி லேசச்சி தாநந்தம் மூன்றும்
வெளியாம்
மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனமாகில்
ஆநந்தமே. 110

இகம்ஆன குருநாத னேசச்சி தாநந்தம் எனும்இலக்
கணமறிகிலேன்
அகலாத சத்தாவ தேதுசித் தாவதேது ஆநந்தம் ஏதென்றிடில்
மிகுகாலம் மூன்றும் கெடாதிருப் பதுசத்து வேறுபா
டறிதல்சித்தாம்
மகிழ்காமம் நுகர்போது சுகம்ஆகும் அனுபூதி வாழ்வென்பதா
நந்தமே. 111

நாசச் சரீரத் திருக்கும் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்
நீசச்சி தாநந்தம் என்றினும் ஆசிரியர் நீபிரமம் ஆகும்எனினும்
மாசற்ற சச்சிதா நந்தம்நான் என்னஇவன் மன்னும்அநு
பவம்எங்ஙனே
கோசப் புரங்களை இடித்துத் தகர்க்கும்மத குஞ்சரக்
குருநாதனே. 112

சென்மாந்த ரம்செய்த வினைகளுடல் தரும்எனில் செல்காலம்
இவன்உண்டலோ
கன்மாறு பவம்நரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்தும்
இவன்உண்டலோ
உன்மாத யாதனா உடல்கடவுள் உடல்மநுட உடல்மாறி
மாறிஅழியும்
தன்மாய உடல்கெடினும் இவன்இருப் பதுகொண்டு
சத்தென்ப தொக்கும்மகனே. 113

இருள்ஆகமூடும் சுழுத்தியில் இராத்திரியில் இரவிசுடர்
அற்றபொழுது
மருளாமல் இருளையும் பொருளையும் தெரிகின்ற
வகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினில் பேராத
பிரியமதனால்
அருகாத பிரியம் சுகத்தில்வரும் ஆதலால் ஆநந்தம்
ஆம்மைந்தனே. 114

அன்னபா னாதிசுக சாதனம தாகையால் ஆர்க்கும்வெகு
பிரியம்ஆகும்
இன்னவா றான்மாவும் ஆநந்த சாதனம் எனக்கருதல்
பொருள் அல்லவே
சொன்னஆன் மாவைஒரு சுகசாத னங்களொடு சொல்லுவாய்
ஆகில்மகனே
உன்னதா நந்தம்வே றேதநுப விப்பதார் உபயஆன்
மாவும் உளவோ. 115

விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரம்ஆகும் வெகுபிரியம்
ஆன்மாவிலாம்
விடயசுகம் வருபிரியம் மாறிவரும் ஆன்மாவில் வெகுபிரியம்
மாறாதுகாண்
விடயசுகம் விடலும்ஆம் கொளலும்ஆம் ஆன்மாவை
விடுவதெவர் கொள்வ தெவர்பார்
விடயசுக போகங்கள் விடும் அவனை அவனால் விடப்படா
தொருநாளுமே. 116

வேகின்ற கோபங்க ளால்என்னை நான்கொன்று விடுகிறேன்
என்று சிலபேர்
சாகின்ற படியினால் தன்னையே தான்கொன்று சாவன்எனல்
சங்கைஅலவே
தேகம்த னைக்கொல்லும் அவனால் விடப்பட்ட தேகம்அவன்
அல்லமகனே
ஆகம்த னிற்கோபம் அலதுதனை ஒருநாளும் ஆன்மாவெ
றுப்பதிலையே. 117

தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியம்ஆம் தனயனிலும்
உடல்பிரியம்ஆம்
ஆகத்தி லும்பிரியம் இந்திரியம் ஆம்கரணம் அதனிலும்
பிரியம்உயிராம்
ஏகப்பி ராணனிலும் வெகுபிரியம் ஆன்மாவில் இந்தஆன்
மாமுக்கியம்
ஊகத்தி னால்கௌணம் மித்தைகர்த் தாமூன்றும் ஒரொன்றில்
அதிகம்மகனே. 118

கெடலான பொழுதிவன் காணிக்கு மகன்ஆன கெவுணஆன்
மாமுக்கியம்
விடலாத உடலம்பரிக்கும்நாள் உடல்ஆன மித்தைஆன்
மாமுக்கியம்
திடம்ஆன நன்மைகதி வேண்டினால் கர்த்தனாம்
சீவஆன் மாமுக்கியம்
சடம்மாயும் முத்தியினில் ஞானஆன் மாஆன தானே
மகாமுக்கியம். 119

புலியும்அநு கூலம்எனில் இட்டம்ஆம் பகைசெயின்
புதல்வன்எனி னும்வெறுப்பாம்
உலகில்இரு வகையும்அல் லாதபுல் ஆதியில்உதாசீனம்ஆம்
ஆதலால்
மலினம்அறு சின்மயன் பலவகையும் இப்படி மகிழ்ச்சியில்
விருப்பம் இகழான்
அலகில்ஆ நந்தவடி வாகும்உன் சொரூபத்தை ஆராய்ந்து
பார்மைந்தனே. 120

மானம்சி றந்தகுரு நாதனே ஆநந்த வகைகள்எத்
தனைஎன்னிலோ
ஞானம்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசனா நந்தம்விட
யாநந்தமென்று
ஆநந்தம் மூன்றுவிதம் எட்டுவகை என்பர்சிலர் அவ்வைந்தும்
இதிலடக்கம்
யான்அந்த வகைசொலக் கேள்மைந்த னேஎட்டும் இஃதின்ன
தின்னதெனவே. 121

போகத்தில் வருசுகம் விடயசுகம் நித்திரைப் போதுளது
பிரமசுகமாம்
மோகத்து அநந்தலில் சுகம்வா சனைச்சுகம் முழுப்பிரியம்
ஆன்மசுகமாம்
யோகத்தில் உளதுமுக் கியசுகம் உதாசீனம் உற்றசுகம்
நிசசுகமதாம்
ஏகத்தை நோக்கல்அத் துவிதசுகம் வாக்கியம் எழுந்தசுகம்
ஞானசுகமே. 122

இவ்வாறு உரைசெய்த சுகபே தங்களின் இயல்பாம்
அவைசொல மகனேகேள்
ஒவ்வா நனவினில் உழல்வான் இடர்கெட உறங்கும் சயனம
துறுநேரம்
செவ்வாம் மனம்அக முகமாம் அதில்ஒளிர் சித்தின் சுகநிழல்
சேரும்காண்
அவ்வாறுஇவன் உளம்மகிழ்வாம் அநுபவம் அதுதான்விஷயசு
காநந்தம். 123

ஈனம் தருசுக விடயம் திரிபுடி இடராம் எனமனம் அசையாமல்
சேனம் தனது குலாயம் தனில்விழு செயல்போல் நித்திரை
செறிசீவன்
தான்அந் தம்இல்பர னுடன்ஒன் றுவன்ஒரு தனைஅல் லதுபிற
நினையாமல்
ஆநந் தமயனும் ஆவன் சுகம்மிகும் அதுதான் உயர்பிர
மாநந்தம். 124

தூங்கும் சுகமது பிரமச் சுகம்எனல் சுருதிப் பொருள்விழி
துயில்வோர்கள்
தாங்கும்மலர்அணை நன்றாகச்சிலர் சம்பாதிப்பது தான்ஊகம்
தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும் தெரியாது
அமளிசெய் பொழுதேபோல்
ஆங்குள் வெளிகளும் அறியா அநுபவம் அதனால் அதுபிர
மாநந்தம். 125

உதவும் புவியினில் ஒருவன் அநுபவம் ஒருவன் மனதினில்
உதியாதே
மதியும் கெடுகிற துயில்கொண் டாநந்த மயன்அன் றோசுகம்
உறுகின்றான்

இதுவிஞ் ஞான மயனது சிந்தையில் நினைவாய் வந்திடல்
அழகன்றே
சுதைவிண் ணோர்புகழ் குருவே நீரிது சொல்லீர் சகலமும்
வல்லீரே. 126

நெய்யும் வெண்ணெயும் இருபேர் களும்அறி நினைவிற்
பிறிவறி வினில்இல்லை
செய்யும் நனவினில் இறுகும் மனதொடு சேரும் சின்மய
விஞ்ஞானன்
நையும் துயர்மனம் நழுவும் பொழுதுணர் ஞானச் சுகம்உணும்
ஆநந்தன்
பெய்யும் துளிகளும் நீரும் குளமொடு பாகும் போல்இவர்
பிரிவன்றே. 127

ஒன்றா கியபிர மாநந் தச்சுகம் ஒழிவான் ஏன்வெளி
வருவான்ஏன்
என்றால் முன் செய்த கருமம் வெளியினில் இழுக்கும்
சுழுத்திவிட்டு எழுந்தோனும்
நன்றுஆ யினசுகம் அகலான் வெளியிலும் நடவான் மறதியும்
பெறமாட்டான்
அன்றுஆம் என இருந்து உறங்கும் சிலகணம் அதுவே
வாதனை ஆநந்தம். 128

அந்தக் கணம்உடல் அகம்என்று இடர்களில் அலைந்தே
சுகந்தனை மறந்தேபோம்
முந்தைச் செயும்வினை சுகதுக் கம்தரு மோனம் உறுநடு
வடிவிற்காண்
எந்தப் புருடனும் ஒருசிந் தையும்அற இருந்தேன்எனல்
அநுபவம்ஆகும்
இந்தப் படிதன்உ தாசீனச்சுகம் இதுவே நிசப்எனும்
ஆநந்தம். 129

நிசம்ஆ னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி
ஈரம்தான்
வசமா அகங்கரம் மறைந்தால் நிசமது படிந்தால் முக்கிய
வகை ஆகும்

திசை ஆர் திரிசயம் அறியா தேதுயில் செறியா தேஉடல்
தறிபோல
அசையா தேமதி சமம்ஆ கியநிலை அதுதான் முக்கிய
ஆநந்தம். 130

மனுடன் மனுடகந் தருவன் தேவநன் மாகந் தருவன்ஒண்
பிதிரோடே
பனும்ஆ சானர்கள் கருமத் தேவர்கள் பகர்முக் கியர்இந்
திரன்ஆசான்
கனம்ஆர் பிரசா பதிஎன் விராட்டுப்பொன் கர்ப்பப் பிரமன்என்
றின்னோர்கள்
பினஆ நந்தங்கள் நுரையாம் பிரளய வெள்ளக்கடல்பிர
மாநந்தம். 131

எவன்ஆ கிலும்இந்தத் துரியா தீதத்தில் ஏழாம் பூமியில்
இருந்தானேல்
அவன்நா ரதன்சுகன் சிவன்மால் அயன்முதல் அறிவோர்
அநுபவ சுகபோதன்
விவகா ரதிர்சயம் இதுவே அநுபவம் என்முன் சொல்லிய
விவகாரி
உவமா னமும்அறி மகனே அவன்அடி உதிரும் பொடிகள்என்
முடிமேலே. 132

இந்தவாறு ஐந்துசுகம் சொல்லினோம் வித்தைசுகம் இனிமேல்
சொல்வோம்
முத்தமா யையும்சச்சி தாநந்தப் பொருளுமே மொழியும்
போதில்
அந்தம்ஆம் அத்துவித சுகம்ஆன்ம சுகம்இரண்டும் அங்கே
சொன்னோம்
தொந்தம்மாற் றியமகனே இன்னம்உனக் கையம்உண்டேல்
சொல்லு வாயே. 133

குகன்தனையும் எனையும்உல கினையும்ஈன் றளித்தருளும்
குருவே கேளீர்
புகன்ற சச்சி தானந்தப் பதங்கள்தனித் தனிஆகிப்
பொருள்வே றானால்

உகண்டமனம் உறைப்ப தெங்கள் பரியாய பதங்களைப்போல்
உறவு காணேன்
அகண்டமாய் ஒருசுவையாய்த் தேனீக்கூட் டியமதுவாய்
அறிவிப் பீரே. 134

குளிர்இளகல் வெண்மைஎன்ற பதங்களினால் நீர்மூன்று
கூறா யிற்றே
ஒளிதவனம் செம்மை என்ற பதங்களால் அக்கினியும்
ஒருமூன் றாமோ
வெளிமுதலாம் சகம் அசத்து மூடம்இடர் எனப்பிரித்து
விலக்கி வேதம்
எளிதறிய மூரண்மொழிந்த சத்தாதி எனும்பிரமம் ஏகம் தானே.
135

நித்தியம்பூ ரணம்ஏகம் பரமார்த்தம் பரப்ரமம் நிதாநம்
சாந்தம்
சத்தியம்கே வலம் துரியம் சமம்திருக்குக் கூடத்தன் சாட்சி
போதம்
சுத்தம்இலக் கியம்சநா தநம்சிவன் தத்துவம்விண் சோதி
ஆன்மா
முத்தம்விபு சூக்குமம்என் றிவ்வண்ணம் விதிகுணங்கள்
மொழியும் வேதம். 136

அசலம்நிரஞ் சநம்அமிர்தம் அப்பிரமே யம்விமலம் வசநா
தீதம்
அசடம்அநா மயம்அசங்கம் அதுலம்நிரந் தரம்அகோ
சரம்அ கண்டம்
அசம்அநந்தம் அவிநாசி நிர்க்குணம்நிட் களம்நிரவ யவம்அ
நாதி
அசரீரம் அவிகாரம் அத்துவிதம் எனவிலக்காம் அநேகம்
உண்டே. 137

இன்னவகை விதிவிலக்குக் குணங்கள் நன்றாய்ச்
சேர்ந்தொருமித் தெல்லாம் கூடிச்
சொன்னபொருள் ஒன்றன்றி இரண்டில்லை ஒருபொருளைச்
சொல்லும் சொற்கள்

பின்னபதம் ஆம்அதனால் சத்தாதி குணப்பொருளாம் பிரமம்
ஏகம்
அன்னபொருள் ஒருமை அறிந்து அகண்டபரி பூரணமாய்
ஆவாய் நீயே 138

நிற்குணவத் துவின் குணங்கள் உரைப்பதுதாய் மலடிஎனல்
நிகர்என் னாதே
சற்குணனே வத்துநிலை உரையாமல் அறியவல்ல சதுரர்
உண்டோ
நற்குணவே தங்கள் இந்தச் சீவன்முத்தி பெறப்பிரம ஞானம்
தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களன்று பிரமம்ஆம்
சொரூபம் தானே. 139

மோகஇருள் கெடக்கோடி அருணன் என வருகுருவே
மொழியக் கேளீர்
ஏகபரி பூரணம்ஆம் என்சொரூபம் என்உள்ளத்தில் இருகும்
வண்ணம்
ஆகமங்கள் சொன்னபடி என்னை அகண் டார்த்தமா
அறிந்தேன் ஐயா
ஊகம்ஒத் திடஉரைத்தால் பசுமரத்தில் ஆணிபோல்
உறைக்கும் நெஞ்சே. 140

சத்தேசித் தாகும்அயல் எனில் அசத்தாம அசத்தானால்
சாட்சி எங்கே
சித்தேசத் தாகும்அயல் எனில்சடம்ஆம் சடங்களுக்குத் திதியும்
இல்லை
ஒத்தேதோன் றியசத்தும் சித்தும் நல்ல சுகம்ஆகும் ஊகத்
துக்கோர்
வித்தேஅன்னியம்ஆகில் சடம்அசத்தாம் சுகாநுபவம்
விளைந்திடாதே. 141

வியாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன்
றாலோ
வாயால்வே றெனில்அதுவும் அசத்தோசத் தோ அசத்தேல்
மலடி மைந்தன்

பேயாகா ரியம்செயுமோ சத்தென இப்படிஅதையும் பிரித்துச்
சொன்னால்
ஓயாத அவத்தையாம் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழிந்தி
டாயே. 142

சுருதியுத்தி ஒத்ததுபோல் அநுபவமும் கேள்சுழுத்திச் சுகஆ
நந்தம்
மிருதிவடி வாதலில் அவ் வாநந்த மே அறிவாம்
வேறங்கில்லை
கருதுபிர ளயம்சுழுத்தி இரண்டிலும்நீ இருந்திருளைக்
காண்கின்றாயே
இருதயத்திப் படிநோக்கி ஏகபரி பூரணமாய் இருந்தி டாயே.
143

பலகலையும் உணர்ந்தகுரு மொழிந்தபடி இவனும் அநு பவம்
விடாமல்
பலமலரின் மதுப்போலச் சச்சிதா நந்தம்ஒன்றாம் பரமார்த்
தத்தைப்
பலபொழுதும் கண்மூடிச் சமாதியிருந் தான் விழித்துப்
பார்த்தபோது
பலவடிவாய் சராசரசித் திரங்களெலாம் தோன்றும்ஒரு
படமானானே. 144

இதயம்ஒத்த சற்குருவே நமக்கிதுவே விநோதம்அன்றி
இனிவே றுண்டோ
அதைஉரைத்தும் அதைநினைத்தும் இருப்பதன்றோ
ஞானிகளுக் கான நீதி
முதல்உரைத்த துரியாதீ தமும்ஏழாம் பூமியும்முக்கி யமாம்
என்ற
பதமும் அதன்வகையும்எனக் கெளிதாகத் தெளியும் வண்ணம்
பணித்தி டீரே. 145

வினவுமிடத் தஞ்ஞான பூமிகள்ஏழ் ஞானபூ மிகள்ஏழ் என்பார்
இனிஅவற்றுள் அஞ்ஞான பூமிகள்ஏ ழையும்முந்தி இயம்பக்
கேளாய்

தனிவித்துச் சாக்கிரம்சாக் கிரம்மகா சாக்கிரம்சாக் கிரத்தைச்
சார்ந்த
கனவுகனாக் கனவுசாக் கிரம்சுழுத்தி என்றெழுபேர்
கணித்தார் மேலோர். 146

முந்துஅகண் டத்தெழுமோர் அறிவுமாத் திரம்அதுதான்
முதல்வித்தாகும்
இந்த அறி விற்பண்டில் லாஅகந்தை முளைபோலாம் இதுந
னாவாம்
வந்துவந்து பிறவிதொறும் அகம்மமதை வளரும்அது மகாந
னாவாம்
நந்தும்அகம் கொடுநனவின் மனோராச்சி யம்செயலே
நனாக்க னாவே. 147

உண்டுறங்கி மனோராச்சி யம்செயல்சொப் பனம்எனும்பேர்
உடையதாகும்
பண்டுகனாக் கண்டுமறந் ததைமீண்டும் நினைப்பது
சொ ப்பனநாவாம்
மண்டும்இருள் மூடுவது சுழுத்தியாம் அஞ்ஞான வகைகள்
சொன்னோம்
விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகள்ஏழும் விளம்பக் கேளாய்.
148

புலவர்புகழ் முதல்பூமி சுபேச்சைவிசா ரணைஇரண்டாம் பூமி
ஆகும்
நலதநுமா னசிமூன்றாம் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி
சொலும்அசம்சத் திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேரும்
துரியப்பேரும்
மலினம்அறு மகனேஐந் தாறேழு பூமிகளா வகுத்தார்
மேலோர். 149

துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை
ஆகும்
நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையாம் நம்பி
முற்சங்க ஏடணைகள் விடல்தநுமா நசிஇந்த மூன்றி னாலும்
சற்சங்க மனதிலுண்மை அறிவுதித்தல் சத்துவா பத்திதானே.
150

தத்துவத்தில் மனம்உறைத்து மித்தைஎலாம் மறத்தல் அசம்
சத்தி ஆகும்
அத்துவிதா நந்தம்வரும் திரிபுடிபோம் பதார்த்தாபா
வனையது ஆகும்
வத்துநிலை இருந்தபடி இருந்தமவு னசுபாவம் துரியம் ஆகும்
இத்துரிய பூமியைமுன் துரியாதீ தப்பதமென் றதுவும்
கேளாய். 151

முற்புவிமூன் றினும்உலகம் தோன்றுதலால் சாக்கிரம்ஆம்
மூன்றற் கப்பால்
சொற்பனமாம் அதுவும்மெள்ள நழுவும்ஐந்தாம் பூமியே
சுழுத்தி ஆகும்
அற்புதம்ஆம் சுகாநுபவம்மிகும்ஆறாம் புவிதுரியம் அதற்கப்
பாலோர்
கற்பனைஇ லாதஇடம் சுத்தம்என்று மௌனமாக் காட்டும்
வேதம். 152

துரியநிலம் தனைத்துரியா தீதம்எனின் மயக்கம்என்று
சுருதி மேலோர்
அரியதொரு விதேகமுத்தி அதீதம்என்பார் அதுகணக்கில்
ஆறாம் பூமி
மருவுசுழுத் தியிற்காட சுழுத்தி என்பார் என்பதும்நீ மனத்தில்
கொள்வாய்
பெருமைதரும் ஞானபூ மியின்விகற்பம் இன்னம்உண்டு
பேசக் கேளாய். 153

முன்நிலங்கள் ஏறியமூ வரும்அப்பி யாசிகள்ஆம் முத்தர்
அல்லர்
பின்நிலங்கள் வரன்வரியான் வரிட்டன்எனும் சீவன்முத்தர்
பேதம் ஆகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாம் தூய முத்தர்
இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை நீஅறிய
யான்சொல் வேனே. 154

நாலாம்பூ மியில்வரும்முன் மூன்றுபூ மியும்அடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதம்அடைந்து பிறந்துமெள்ள மெள்ள வந்து வீடு சேர்வார்
மால்ஆன பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்தம் மைந்தா
கால்ஆன முதல்பூமி கைவந்தால் முத்தியுங்கைவந்த தாமே. 155

இப்புவியில் இஞ்ஞான பூமிஒன்றில் இரண்டில் அடைந் திருந்தா ரானால்
அப்புருடர் மிலேச்சர்ஆ கிலும்முத்தர் குருபாதத் தாணை மெய்யே
தப்புரைஎன் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கி யாதே
செப்பும்மொழி வழிதிடமா அகம்பிரமம் என்றிருந்து தெளிந்திடாயே. 156

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தரும்ஞான பூமி என்று
நெல்ஆகி முளைக்கும்எனைத் தண்டுலம்ஆக் கியகுருவே நீர்சொன் னீரே
இல்லாளும் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கி ஆனோர்
அல்லாமல் முத்திபெறார் என்றுசிலர் சொலும் மயக்கம் அகற்றுவீரே. 157

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டழியும் துறவுநால் வகைஆகும் அவைகளுக்கங் காகும் பேர்கள்
பட்டதுயர் கெடும்குடீ சகம்வெகூ தகம்அஞ்சம் பரம அஞ்சம்
விட்டகலும் துறவுக்கு விராகம்கா ரணம்அன்றி வேடம் அன்றே. 158

மந்தமும்தீ விரமும்தீ விரதரமும் எனமூன்று வகைவி ராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும்
விராகம் மந்தம்
இந்தவுடல் அளவும்மனை தனம்வேண்டாம் எனவிடல்தீ
விரம்என் பார்கள்
அந்தணன்ஊர் மித்தைஎன விடல்அதுதீ விரதரம்ஆம்
அறிந்திடாயே. 159

பரவிமந்த விராகத்தில் சந்நியா சங்கள் ஒன்றும் பலித்தி
டாதே
தீவிரத்தில் குடீசகமும் வெகூதகமும் என்றிரண்டு திறங்கள்
உண்டாம்
தாவிநடந் திடத்திடம்இல் லாதவர்க்குக் குடீசகமும்
சகங்கள் எங்கும்
மேவிநடந் திடத்திடம்உள் ளவர்குவெகூ தகமும்என
விதித்தார் மேலோர். 160

இருவகைதீ விரதரத்தும் அஞ்சனென்றும் பரமாஞ்சன்
என்றும் சொல்வார்
வரும்அஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா
தென்பார்
பரமாஞ்ச னுக்குமுத்தி இவ்வுலகில் ஞானத்தால் பலிக்கும்
என்பார்
திரம்மருவும் பரமாஞ்சன் தானும்இரு வகைஆகும் செப்பக்
கேளாய். 161

சிஞ்ஞாசு ஞானவான் என்றிரண்டு பேர்கள்அவ ரிற்சிஞ் ஞாசு
மெய்ஞ்ஞான பூமியில்முன் மூன்றுபூ மியுள்நடக்கும் விவேகி
ஆனோன்
சுஞ்ஞான வான்என்போன் சீவன்முத்தி அடைந்திருக்கும் தூய
மேலோன்
அஞ்ஞானம் அகலும்அந்தச் சிஞ்ஞாசும் இருவகைஆம்
அதுவும் கேளாய். 162

பந்தம்மனை துறந்துசிலர் அதிதிகளாய் இருந்தடைவர் பரம
ஞானம்
அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரராய் இருந்துசிலர்
அடைவர் ஞானம்
இந்தவகைச் சாத்திரத்தும் உலகத்தும் நடப்பதுகண்டிருந்து
மைந்தா
சிந்தனையின் மயக்கம்என்னே சுருதியுத்தி அநுபவத்தால்
தெளிந்திடாயே. 163

பிறந்ததுண் டானால் அன்றோ பிறகுசா வதுதான் உண்டாம்
பிறந்ததே இல்லை என்னும் பிரமம்ஆ வதுவும் நானே
பிறந்தது நான்என் றாகில் பிரமம்அன் றந்த நானே.
பிறந்ததும் இறந்த தற்ற பிரமம்ஆம் நானே நானே. 164

நான்என்ற பிரமம் ஆன நானேநான் அறியேன் என்றால்
நான்என்பது ஏது பின்னை நம்முடைப் புத்தி என்னில்
தான்அது மயக்கம் தன்னில் சாகுமே சாவா தாகி
நான்என நிறைந்தி ருந்த ஞானம்ஆம் நானே நானே. 165

நிறைந்தவாறு எந்த வாறு நிலைதெரிந் திலன்என் றாயேல்
அறிந்ததாம் சுழுத்தி தன்னில் ஆநந்தம் அதுவே ஆகும்
குறைந்ததற்கு ஆநந் தம்தான் குவலயம் தன்னில் இல்லை
நிறைந்ததே இந்த ஆன்மா நிதானம்இவ் வறிவு தானே. 166

மனத்தினால் எண்ணித் தானே வந்ததிவ் வுலகம் ஆகும்
நினைத்திடில் அநேக லோகம் நிற்பதவ் வறிவில் அன்றோ
அனைத்தையும் கடந்தப் பாலும் அந்தம்அற் றறிவி
தாம்என்று
எனைத்தனி விசாரித் திட்டால் ஏகம் ஆய்நிறைந்தோன்
நானே. 167

அந்தவாறு இருந்துகொண்டே ஆநந்தம் அநுபவிக்க
எந்தவாறு இருந்துகொண்டால் எனக்கிது தெரியும்என்னில்
இந்தமூன்று அவத்தை தம்முன் எழுந்திடும் விருத்தி நீக்கில்
அதவாறு இருந்துநீயும் ஆநந்தம் அடையல் ஆமே. 168

வாதனா வசத்தி னாலே வருகின்ற விருத்தி எல்லாம்.
ஏதினால் அடக்கல் ஆகும் என்றுதான் விசாரம்செய்யில்
போதம்ஆம் இராசன் தானாய்ப் புத்திஐம் புலன்கள் எல்லாம்
தாதராய் இருக்கப் பெற்றால் சகலமும் அடங்கும் தானே. 169

விருத்திகள் அடக்க இன்னம் விநோதமஆம் யோகத் தாலே
துருத்திபோல ஊதும மூச்சைச் சுகமுடன் அடக்கில் நிற்கும்
கருத்ததற்கு இல்லை என்னில் காரண சரீரம் ஆகிப்
பெருத்ததோர் அவித்தை தன்னைப் பிடுங்கிடில் அடங்கும் தானே. 170

காரண சரீரம் தன்னைக் களைவதெவ் வாறென் றோதில்
ஆரணம பொய்சொல லாதே அதன்பொருள் அகத்தில் உய்த்துப்
பூரணம் ஆகும் என்மேல் புவனங்கள் தோன்றும் என்று
தாரணை வந்த தாகில் தரித்திடும் அவித்தை எங்கே. 171

அப்படி இருக்கச் சித்தம் அலைதலால் வ்வகா ரத்தில்
எப்படிக் கூடும் என்னில் என்னைவிட் டொன்றும் இல்லை
இப்படிக் கண்ட எல்லாம் என்மயம் என்க னாப்போல்
கற்பிதம் என்று தானே காண்கின்ற சித்து நானே 172

சித்துநான் நிறைந்தோன் என்ற திடம்மற வாதி ருந்தால்
எத்தனை எண்ணினாலும் ஏதுசெய் தாலும்என்ன
நித்திரை உணர்ந்த பின்பு நிற்கின்ற கனாவே போல
அத்தனை யும்பொய் தானே ஆநந்த வடிவு நானே. 173

நான்என உடலைத் தானே நம்பினேன் அநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோர் ஆகி இருந்தவை எலாம்இப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நான்என என்னைத் தானே நம்பிஈ டேறி னேனே. 174

எண்ணபுண் ணியமோ செய்தேன் ஏதுபாக் கியமோ காணேன்
நன்னிலம் தனில்எ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னியன் ஆனேன் நான்உத் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னியன் இன்னும் நானே தாண்டவம் ஆடு கின்றேன். 175

தத்துவ ஞானம் வந்த சந்தோட அதிச யத்தால்
நித்தம்ஆ டுவன்காண் என்ற நிலைமுன்ன மேஅ றிந்த
சத்தியம் அதனால் அன்றோ தாண்டவா என்ற ழைத்தார்
அத்தனை மகிமை உள்ளோர் அன்னையும் பிதாவும் தாமே
176

வந்ததோர் இவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல்
வேன்யான்
சிந்தையில் எழுந்து பொங்கிச் செகம்எலாம் நிறைந்து தேங்கி
அந்தம்இல் லாதது ஆயிற் றப்படி குருவே தாந்த
மந்திரம் அருளும் ஈசன் மலர்அடி வணங்கி னேனே. 177

வித்தியா நந்தம் இந்த விதம்என விளம்பினோமே
பத்தியால் இந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை அறிந்து சீவன்
முத்தியை அடைந்தி ருந்த முனிவரர் ஆகு வாரே 178

ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளக்க ஏதும்
காரணம் குறைவி லாமல் கைவல்ய நவநீத தத்தைப்
பூரணம் ஆக்க வேண்டிப் பூர்வமாம் நன்னி லத்தில்
நாரண குருந மக்கு நவின்றனர் கனவில் வந்தே. 179

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேல் கொண்டார்
உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்றபே றடைவார் போல
நலம்மெய் ஆகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார். 180

O

# கைவல்லிய நவநீதம்

அத்வைதக் கொள்கையை அழகான விருத்தப் பாக்களினால் விளக்கும் நூல் கைவல்லிய நவநீதம் என்னும் நூல். தத்துவ விளக்கமாக உள்ள நூல் இவ்வளவு சுவையாக அமைய முடியுமா என்று படிப்பவர் வியந்து போற்றும்படியாக இயற்றியுள்ளார் தாண்டவராய சுவாமிகள் என்னும் சான்றோர். பாடல்கள் எளியநடையில் அமைந்து ஓசை உடையனவாக உள்ளன. நூலின் பெயர்க்குப் பொருள் 'ஆன்மாவின் தனித்தன்மையை விளக்கும் வெண்ணெய்' என்பது. உபநிடதங்களும் சங்கரர் தரும் விளக்கங்களுமாகிய பாற்கடலைக் கடைந்தெடுத்த வெண்ணெய் என்று கூறப்படு வதற்கு ஏற்ற வகையில் சமய உண்மையை மிகச் சுருங்கிய முறையில் சுவையாக எடுத்துரைக்கும் நூல் இது.

★ — அறிஞர் மு. வரதராசனார்

**வசனம்**

ஆசான் காட்டிய வழியில் அனுபவ பூர்வமாக மெய்யுணர்வு பெற்ற தாண்டவரின் இனிய பாடல்களுக்குத் தெளிந்த உரைநடை ஆக்கம் தருவதோடு தேவையான விளக்கக் குறிப்புக்களும் இந் நூல் தருகிறது இணைப்பில் பாடல்கள் யாவும் தரப்பட்டுள்ளன.

★

ஆணித்தரமான தத்துவத்துக்காகவும் ஆன்ம நலத்துக்காகவும் வையக நன்மைக்காகவும் இனிய தமிழுக்காகவும் இதனை யாவரும் வாசித்து மகிழ்ச்சி பெறலாம்.

★